# இந்திய
# வரலாறு




தமிழ்நாட்டுப்
பாடநூல் நிறுவனம்

முதற்பதிப்பு—1981

ஆசிரியர்கள் :

**திரு. டி. இராமு**
தலைமையாசிரியர்,
ஏ. ஜே. எஸ். நிதி மேல் நிலைப்பள்ளி
ஆலந்தூர், சென்னை-600 016.

**திரு. எம். கே. மனோகர்லால்**
உதவித் தலைமையாசிரியர்,
சிந்தாதிரிப்பேட்டை மேல் நிலைப்பள்ளி,
சென்னை-600 002

**விலை : ரூ. 2-50**

மேலாய்வாளர்கள் :

**பேரா. எம்.வி. சுப்பிரமணியம்**
ஸ்ரீபுரம், திருநெல்வேலி,

**திருமதி. எம். பங்கஜம் வில்லியம்ஸ்**
தலைமையாசிரியை,
பி.எஸ்.ஜி.ஆர். கிருஷ்ணம்மாள்
மகளிர் மேல்நிலைப்பள்ளி,
கோயமுத்தூர்.

**திரு. சி. எம். பசலூர் ரகுமான்**
தலைமையாசிரியர்,
இஸ்லாமிய மேல் நிலைப்பள்ளி,
பேரணாம்பேட்டை.

இந்நூல் இந்திய அரசு சலுகை விலையில் வழங்கிய 60 ஜி. எஸ். எம். தாளில் அச்சிடப்பட்டுள்ளது.

அச்சிட்டோர் :
பிரின்ட் ஹவுஸ் (மக்கள் குரல்), சென்னை - 600 024

# பொருளடக்கம்

# 1. இந்தியாவின் புவியியல் அமைப்பும் ஒருமைப்பாடும்

*"பாரத பூமி பழம்பெரும் பூமி*
*நீரதன் புதல்வர் இந்நினை வகற்றாதீர்"*

இந்தியா நமது தாய்நாடு; இதற்குப் 'பாரதம்' என்றும் பெயர் வழங்கப்படுகின்றது. நமது நாடு வரலாற்றுச் சிறப்பு




படம் 1. இந்தியாவின் இருப்பிடம்

பெற்றது. உலக நாடுகளுள் இது மிகவும் பழமையானதாகும். இதன் நாகரிகமும் பண்பாடும் மிக்கச் சிறப்புடையன. இச் சிறப்புகளை அறிவதில் நாம் பெருமை கொள்வோமாக. நாம் இவ்வாறு புகழுடைய நாட்டின் குடிமக்களாக இருப்பதில் பெருமிதம் கொள்ளவேண்டும்.

## இந்தியாவின் இருப்பிடம்

முன் பக்கத்தில் உள்ள ஆசியாக் கண்டத்தின் படத்தை உற்று நோக்கவும். இக்கண்டத்தின் தென்பகுதியில் மூன்று தீபகற்பங்கள் இருப்பதை நீங்கள் காணலாம்.

இவற்றின் நடுவிலுள்ள தீபகற்பப் பகுதியே நமது தாயக மாகும். வடக்கில் மிக உயர்ந்த இமயமலையும், தெற்கில் இந்து மாக்கடலும், கிழக்கில் வங்காள விரிகுடாவும், மேற்கில் அரபிக்கடலும் இயற்கை எல்லைகளாக அமைந்துள்ளன. நம் நாடு முற்றிலும் பூமத்திய ரேகைக்கு வடக்கில் உள்ளது. இது 8°4' வட அட்சரேகை முதல் 37°6' வட அட்சரேகை வரை யிலும், 68°77' கிழக்குத் தீர்க்க ரேகை முதல் 97°25' கிழக்குத் தீர்க்க ரேகை வரையிலும் பரவியுள்ளது.

## பரப்பளவும் மக்கள் தொகையும்

இப்பரந்த நாடு வடக்கு தெற்காகச் சுமார் 3219 கிலோ மீட்டர்களும், கிழக்கு மேற்காகச் சுமார் 2977 கிலோ மீட்டர் களும் பரவியுள்ளது. இதன் கரையோரப் பகுதியின் நீளம் சுமார் 5689 கிலோ மீட்டர்களாகும். இதன் பரப்பு 32.76 இலட்சம் சதுர கிலோ மீட்டர்களாகும். இது அமெரிக்க ஐக்கிய நாட்டின் பரப்பளவில் சுமார் ⅓ பாகமாகும். ருஷ்யா நீங்கலாக உள்ள ஐரோப்பாவிற்குச் சமமானது. பிரிட்டிஷ் தீவுகளைப்போல 13 மடங்கு பெரியது. 1971 ஆம் ஆண்டின் மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்படி நம் நாட்டின் மக்கள் தொகை 53 கோடி யாகும். இது பரப்பளவில் உலகில் ஏழாவது பெரிய நாடாகும். உலக மக்கள் தொகையில் சீனாவிற்கு அடுத்த இடத்தைப் பெற்றுள்ளது. எனவே பரந்த நமது தாயகத்தை ஓர் உபகண்டம் எனக் கூறுவது மிகவும் பொருத்தமானதே.




படம் 2. இந்தியா

The external boundry of this map is certified as correct by the Director. Map Publications, Survey of India, Dehra Dun. in his letter No. TB 532/62-A-4/339. dt. 9-2-77.

The territorial waters of India extend into the sea to a distance of twelve nautical miles measured from the appropriate base line.

## நமது அண்டை நாடுகள்

நமது நாடு சுதந்திரம் அடைந்த பொழுதே இந்திய நாடு 'இந்தியா' எனவும், 'பாகிஸ்தான்' எனவும் இரண்டாகப் பிரிந்தது. நமது தாயகத்தின் வட மேற்கில் பாகிஸ்தான்

உள்ளது. வடக்கில் நேபாளமும் சீனாவும் உள்ளன. கிழக்கில் பங்களா தேசமும் பர்மாவும் உள்ளன. தென்கிழக்கில் மிக அருகில் உள்ள நாடு ஸ்ரீலங்கா.

## இந்தியாவின் இயற்கையமைப்பு

ஒரு நாட்டின் வரலாறும் மக்கள் வாழ்க்கையும் அந்நாட்டின் இயற்கையமைப்பை ஒட்டி விளங்குகின்றன. எனவே நமது நாட்டின் இயற்கையமைப்பு பற்றியும் அதன் வரலாற்று விளை வுகள் பற்றியும் அறிந்து கொள்வோம். இயற்கையமைப்பை ஒட்டி இந்தியாவை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். அவை யாவன: (i) இமயமலைப் பகுதி, (ii) சிந்து-கங்கைச் சமவெளி, (iii) தீபகற்பப் பிரதேசம்.

### (i) இமயமலைப் பகுதி

இது இந்தியாவின் வடக்கில், கிழக்கு மேற்காகச் சுமார் 2400 கி.மீ. நீளமும், 240 முதல் 320 கி.மீ. வரை அகலமும் உள்ள ஒரு பெரிய மலைச் சுவராகும். உலகின் மிக உயர்ந்த மலைச் சிகரமாகிய ‘எவரெஸ்ட்’ இம்மலைத் தொடரில்தான் உள்ளது. அண்மைக்காலம் வரை இது அந்நியர் தாக்குதலுக்கு அசையாமல் இருந்தது. சிந்து, கங்கை, பிரம்மபுத்திரா ஆகிய வற்றாத நதிகளின் பிறப்பிடம் இதுவே. மேலும் இம்மலையின் மேற்குப் புறத்தில் உள்ள கைபர், போலன், குரம், கோமல் கணவாய்கள் பாரசீகர்கள், கிரேக்கர்கள், குஷாணர்கள், ஹூணர்கள், துருக்கியர்கள், முகலாயர் முதலானோர் நம் நாட்டின் மீது படையெடுத்துவர ஏதுவாக இருந்தன.

### (ii) சிந்து-கங்கைச் சமவெளி

இது உலகிலேயே மிகச் செழுமை வாய்ந்த பகுதியாகும். இதன் செழுமை மௌரிய, குஷாண, குப்த, துருக்கிய, மொகலாயப் பேரரசுகள் தோன்றுவதற்குக் காரணமாக இருந்தது. வளமை மிக்க இந்தப் பகுதி இந்தியாவின் எதிர்காலத்தைப் பலமுறை நிர்ணயித்துள்ளது.

### (iii) தீபகற்பப் பிரதேசம்

இப்பகுதி கிழக்கிலும் மேற்கிலும் முறையே கிழக்குத் தொடர்ச்சி, மேற்குத் தொடர்ச்சி மலைகளாலும், வடக்கில்

விந்திய-சாத்பூரா மலைகளாலும் சூழப்பெற்றுள்ளது. விந்திய-சாத்பூரா மலைகள் நமது நாட்டு வரலாற்றைப் பெரிதும் மாற்றியுள்ளன. இம்மலைகளையும், இவற்றை ஒட்டியுள்ள அடர்ந்த காடுகளையும் கடந்து செல்வது மிகக் கடினம். எனவே, தீபகற்ப இந்தியா வட இந்தியாவுடன் நெடுங்காலமாக ஒன்று படவில்லை; தனித்தனி வரலாறுகள் உடையனவாகவும் விளங்கின. இப்பகுதியில் திராவிடர் பண்பாடு சிறந்து விளங்கியது. இங்கு விசய நகரப் பேரரசு தோன்றி இந்து மதத்தை மேம்படச் செய்தது. தென்னக அரசர்கள் கடல்வழியில் காட்டிய ஊக்கம் பெரும் சிறப்பிற்குரியது. மேற்கு, கிழக்குக் கடற்கரை ஓரங்களில் அமைந்த துறைமுகங்கள் அயல்நாடுகளுடன் வாணிகம் நடத்த உதவின.

## வேற்றுமையில் ஒருமைப்பாடு

வேற்றுமைகள் : நம் தாய்நாடு ஒரு பெரிய நாடு. இதன் இயற்கையமைப்பில், தட்பவெப்பநிலையில், மழையளவில் வேறுபாடுகள் உள்ளன, விளைச்சலில் மக்கள் வாழ்க்கைமுறையினும் கூடப் பல்வேறு வேறுபாடுகள் காணப்படுகின்றன. பனிமூடிக் கிடக்கும் உயர்ந்த மலைகளும், வற்றாத நதிகள் பாயும் வளமிக்க சமவெளிகளும், மனித இனத்தின் காலடி படாத வறண்ட பாலை நிலங்களும், மக்கள் தொகை அதிகமுள்ள நதிப் பள்ளத்தாக்குகளும் இந்நாட்டில் உள்ளன. கடுங்குளிர்ப் பகுதிகளுடன் வெப்பம் அதிகமுள்ள பகுதிகளும் உள்ளன. அதிக மழை பெறும் சிரபுஞ்சியும், மழையே இல்லாத தார் பாலைவனமும் இங்குதான் உள்ளன. நமது நாட்டில் வேட்டையாடியும் காட்டுப் பொருள்களைச் சேகரித்தும் வாழ்கின்ற பழங்குடி மக்களும் நாகரிக மேம்பாடடைந்த நகர மக்களும் வாழ்கின்றனர். ஆரியர், குஷாணர், ஹூணர், துருக்கியர், மொகலாயர் மற்றும் அயல்நாடுகளிலிருந்து குடிபெயர்ந்தோர் இந்தியாவின் பல பாகங்களில் குடியேறியும், தத்தம் பழக்க வழக்கங்களையும் பண்பாட்டையும் பரப்பி வேற்றுமைகளை மிகுதிப்படுத்திவிட்டனர்.

இப்பரந்த நாட்டிலுள்ள மக்கள் பல்வேறு மொழிகளைப் பேசுகின்றனர். இன்று நமது நாட்டில் 845 மொழிகள் பேசப்படுகின்றன. இந்தி, உருது, வங்காளி, ஒரியா, மராத்தி,

குஜராத்தி, தமிழ், காஷ்மீரி, பஞ்சாபி, அஸ்ஸாமி, தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகள் 91 சதவீத மக்களால் பேசப்பட்டு வருகின்றன. இவற்றில் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய திராவிட மொழிகள் முறையே தமிழ் நாடு, ஆந்திரப் பிரதேசம், கர்நாடகம், கேரளம் ஆகிய மாநிலங்களில் வாழும் மக்களால் பேசப்படுகின்றன. ஒவ்வொரு மாநிலத்திலும் பெரும்பான்மையினரால் பேசப்படும் மொழியே அம்மாநில அரசின் அலுவலக மொழியாக உள்ளது. இந்தியும் ஆங்கிலமும் நமது நாட்டின் அரசாங்க மொழிகளாக விளங்குகின்றன.

நாட்டு மக்களிடையே வேற்றுமையை வளர்ப்பதில் மதங்களும் முக்கியமானவை. இந்து மதம் இந்நாட்டின் மிகப் பழமையான மதமாகும். இந்து மதத்தினர் இந்நாட்டில் எல்லா இடங்களிலும் பரந்து நிறைந்துள்ளனர். புத்தமதம், சமணமதம், கிறிஸ்துவ மதம், இஸ்லாம் மதம், சீக்கிய மதம் முதலிய பல்வேறு சமயங்களும் இங்கே உள்ளன.

மேலும், நாட்டின் மிகப் பெரிய பரப்பும், போக்குவரத்திற்கு இடையூறான இயற்கைத் தடைகளும் நம்மிடையே ஒற்றுமையை நெடுங்காலமாக ஏற்படுத்தவில்லை.

ஒற்றுமை : நம் நாட்டு மக்களிடையே வேற்றுமைகள் பல இருந்தாலும், கல்வி, பண்பாடு, கலை, அரசியல் முதலியன நமது ஒற்றுமையை எடுத்துக்காட்டுகின்றன. இந்த ஒருமைப்பாடு பண்டைக்காலம் முதற்கொண்டே விளங்கி வந்துள்ளது. கடந்த நூற்றாண்டில் ஆங்கிலேயரின் நிர்வாகத்தினாலும், நவீனக் கல்வியினாலும் ஒருமைப்பாடு ஓரளவு ஏற்பட்டது. நமது வீர காவியங்களாகிய ‘இராமாயணமும்’, ‘மகாபாரதமும்’ வட நாட்டில் மட்டுமன்றித் தென்னாடு முழுவதிலும் படிக்கப் பட்டு வருகின்றன. வடக்கில் இமயம் முதல் தெற்கில் குமரி வரை ஏற்படுத்தப்பட்ட ஆலயங்களும், வழிபாட்டு உரிமைகளும், பக்திப் பாடல்களும், சமயப் பொறுமையும், மொழி வளர்ச்சியும் நமது தாயகத்தில் தொன்றுதொட்டு விளங்கி வந்தன. எண்ணற்ற படையெடுப்புகள் மற்றும் பல்வேறு

புதிய ஆட்சிகள் ஏற்பட்டபோதிலும் இந்தியப் பண்பாடு அதன் அடிப்படைச் சிறப்பாகிய ஒற்றுமையை இழக்கவில்லை.

சுதந்திரம் பெற்ற பின்னரும் நமது அரசியல் அமைப்பியலிலும் இந்தியா 'ஒரே நாடு' என்பதனைத் தனது குறிக்கோளாகக் கொண்டுள்ளது. 'பாரத பூமி பழம்பெரும் பூமி, நீரதன் புதல்வர் இந்நினை வகற்றாதீர்' என்பதை நினைவிற் கொள்வோம். 'எல்லோரும் ஓர் குலம்; எல்லோரும் ஓர் இனம்; எல்லோரும் ஓர் இந்திய மக்கள்;' என எண்ணி வாழ்வோமாக. தாய் நாட்டின் சுதந்திரத்தையும், ஒற்றுமையையும், மாட்சியையும் பேணிக் காப்போமாக.

## பயிற்சிகள்

I. விரிவான விடையளிக்கவும்

1. இந்தியாவின் இயற்கை எல்லைகள் யாவை ?
2. இந்தியாவின் அண்டை நாடுகளைக் குறிப்பிடுக.
3. இமயமலை நமது நாட்டு வரலாற்றில் ஏற்படுத்தியுள்ள விளைவுகள் யாவை ?
4. சிந்து-கங்கைச் சமவெளிகளின் சிறப்புகளைக் கூறுக.
5. தீபகற்ப இந்தியாவின் வரலாற்றுச் சிறப்புகள் யாவை ?
6. நம் நாட்டு மக்கள் வாழ்க்கையில் உள்ள ஒற்றுமைகள் யாவை ?
7. நம் நாட்டு மக்கள் வாழ்க்கையில் காணப்படும் வேற்றுமைகள் யாவை ?

II. சுருக்கமான விடையளிக்கவும்

1. இந்திய அரசின் தொடர்பு மொழிகள் யாவை ?
2. இந்திய நாடு எக்கண்டத்தில் உள்ளது ?
3. இந்தியாவில் பெரும்பான்மையினர் சார்ந்துள்ள மதம் எது?

III. கோடிட்ட இடங்களை நிரப்புக :

1. இந்தியாவிற்கு ———— என்ற வேறு பெயரும் வழங்கப்படுகின்றது.

2. இந்தியா பிரிட்டிஷ் தீவுகளைப்போல ———————— மடங்கு பெரியது.
3. 1971ஆம் ஆண்டின் கணக்கெடுப்புப்படி இந்தியாவின் மக்கள் தொகை ———————— கோடிகளாகும்.
4. ————————, ———————— என்பன நமது நாட்டின் வீர காவியங்களாகும்.
5. நமது நாட்டின் மிகப் பழமையான மதம் ————————.
6. உலகின் மக்கள்தொகையில் ———————— நாட்டிற்கு அடுத்த இடத்தை இந்தியா பெற்றுள்ளது.

**IV. நீங்களே செய்யுங்கள்**

1. இந்தியாவின் வரைபடத்தில் அதன் இயற்கை எல்லைகளையும், முக்கிய மலைகள், ஆறுகள், இயற்கைப் பிரிவுகளையும் குறிக்கவும்.
2. பாரதியாரின் 'எந்தையும் தாயும்', 'பாரத தேசமென்று பெயர் சொல்லுவார்', 'மன்னும் இமயமலை'—போன்ற தேசியப் பாடல்களைச் சேர்ந்து பாடவும்.
3. தேசிய ஒருமைப்பாட்டு உறுதிமொழியைக் கொடி வணக்கத்தின்போது எடுத்துக்கொள்ளவும்.

# 2. இந்தியாவின் பழங்குடி மக்களும் அவர்கள் மரபினரும்

பூமியில் மனிதன் தோன்றிய நாளிலிருந்து நாகரிகமும் படிப்படியாக வளர்ந்து வந்துள்ளது. பழங்கால மனிதன் இன்றுள்ள நிலைக்கு வர பல்லாயிரக் கணக்கான ஆண்டுகள் ஆயின.

ஆரம்ப காலத்தில் மக்கள் காட்டுமிராண்டிகளாக இருந்தனர். உணவிற்கும் இருப்பிடத்திற்கும் இடம் விட்டு இடம் திரிந்து கொண்டிருந்தனர். அவர்கள் பெரும்பாலும் நாகரிகமற்றவர்களாகவே கருதப்பட்டனர். இவ்வாறு வாழ்ந்த ஆதி குடிகளின் வரலாற்றை அறிய அவர்கள் பயன்படுத்திய

கருவிகளும். ஆயுதங்களும் மற்றும் பழங்காலச் சமாதிகளில் கிடைத்த பொருள்களுமே சான்றுகளாக உள்ளன. அவற்றை அடிப்படையாகக் கொண்டு ஆதி குடிகளின் காலத்தைக் கற்காலம், உலோக காலம் என இருபிரிவுகளாகப் பிரிக்கலாம். கற்காலத்தைப் பழைய கற்காலம், புதிய கற்காலம் என மேலும் இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதன்முதலில் மக்கள் கற்களாலான கருவிகளையே பயன்படுத்தியதால் அக்காலம் கற்காலம் எனப்பட்டது. பிறகு அவர்கள் உலோகங்களைக் கண்டுபிடித்துப் பயன்படுத்தியதால் உலோக காலம் எனவும் வழங்கலாயிற்று.

## பழைய கற்காலம் (கி.மு. 35000 கி.மு. 10000)

பழைய கற்கால மனிதர்கள் நாகரிகம் அற்றவர்கள் அவர்கள் குகைகளிலும் இலை அடர்ந்த நிழல்தரும் பெரிய மரங்களின் அடியிலும் கிளைகளின் மீதும் வசித்தனர். உணவிற்காக விலங்குகளை வேட்டையாடினர். அவர்கள் பச்சையாக இறைச்சியையும், பழங்களையும், கிழங்குகளையும் உண்டனர். நெருப்பின் பயன் அவர்களுக்குத் தெரியாது. அவர்கள் கொடிய மிருகங்களைக் கண்டு அஞ்சினர். மிருகங்



படம் 3. கற்காலக் கருவிகள்

களிடமிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ள 'தீத்தட்டி' கற்களில் கரடுமுரடாகச் செய்யப்பட்ட கருவிகளைப் பயன்படுத்தினர். மொழியறிவு அவர்களுக்குத் தெரியாது. சைகைகள் மூலமாக எண்ணங்களை வெளிப்படுத்தினர்.

மாரிக்காலத்தில் குளிரிலிருந்து தம்மைக் காத்துக் கொள்ள பெரிய இலைகள், மரப்பட்டைகள், மிருகங்களின் தோல்கள் முதலியவற்றை ஆடையாக உடுத்தினர். பயிர்செய்தல்,வீடுகள் அமைத்தல்,ஆடைகள் நெய்தல் அவர்களுக்குத் தெரியாது. இறந்தவர்களைப் புதைப்பது கிடையாது. அக்காலத்து மக்கள் பயன்படுத்திய கற்கருவிகள் கடப்பை மாவட்டத்திலுள்ள இராயச் சூட்டி வட்டம், மைசூரிலுள்ள சிமோகா, தமிழகத்தில் மதுரை மற்றும் செங்கற்பட்டு மாவட்டம் ஆகியவற்றில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவற்றைத் தொல்பொருள் ஆய்வகங்களில் இன்றும் காணலாம்.

## புதிய கற்காலம் *(கி.மு.10000—கி.மு. 5000)*

காலப்போக்கில் மக்கள் சுற்றுப்புறத்தைப்பற்றிய அறிவைப் பெருக்கிக் கொண்டனர். வாழ்க்கை வசதிகள் பெருகின. மட்பாண்டங்கள் செய்யவும் கற்றுத் தேர்ந்தனர். நாகரிகம் வளர்ச்சிபெறத் தொடங்கியது. கருவிகளைக் கூர்மையாகவும் அழகாகவும் செய்யக் கற்றுக்கொண்டனர். சில கருவிகளுக்கு மரப்பிடியும் அமைத்துக் கொண்டனர். நாய், ஆடு, மாடு முதலிய மிருகங்களை வீட்டில் வைத்துப் பழக்கினர். மிருகங்களைக் காக்கக் காடுகளை அழித்துப் புல்வெளிகளை உண்டாக்கினர். நிலத்தைப் பயிர்செய்யக் கற்றுக்கொண்டனர். குடிசைகளை அமைத்து அவற்றில் வாழ்ந்தனர். வாழ்ந்த குகைகளில் சித்திரங்கள் வரையவும் செய்தனர். நாடோடி வாழ்க்கையும் முடிவு பெற்றது. திட்டமிட்ட ஒழுங்கான வாழ்க்கை வாழத் தொடங்கினர். மரங்களைக் குடைந்து படகுகளும் செய்தனர். கற்களையோ மூங்கில்களையோ ஒன்றோடொன்று மோதச் செய்து நெருப்பை உண்டாக்கத் தெரிந்துகொண்டனர். பருத்தியைப் பயிர்செய்து ஆடைகளையும் நெய்தனர். எலும்பினாலும் சிப்பியினாலும் அணிகலன்கள் செய்தனர். இறந்தவர்களை மண்தாழிகளில் வைத்து, புதைகுழிகளில் இறக்கி வைத்தனர். அப்புதைகுழிகளைப் பெருங் கற்பலகைகளைக் கொண்டு மூடிச் சுற்றிலும் சிறு கற்களை நட்டனர். இத்தகைய மண்தாழிகள் செங்கற்பட்டு, திருநெல்வேலி, பெல்லாரி ஆகிய மாவட்டங்

களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பயிர்த்தொழில் வளர்ச்சியடைந்து வந்ததால் பல இடங்களில் இத்தகைய புதைகுழிகள் மறைந்ததாகத் தெரிகிறது.

**உலோக காலம் (கி.மு. 5000-க்குப் பின்)**

மனிதப் பண்பாட்டு வளர்ச்சியில் அடுத்துக் காணப்படுவது உலோக காலம். இக்காலத்து மக்கள் உலோகங்களைப் பயன் படுத்திவந்தனர். அவர்கள் முதலில் செம்பையும் பிறகு இரும் பையும் பயன்படுத்த ஆரம்பித்தனர். இவற்றை உருக்கிப் பலவகைக் கருவிகளைச் செய்யக் கற்றுக்கொண்டனர். பிறகு வெண்கலம் உபயோகத்திற்கு வந்தது. அதைக்கொண்டு கருவிகள், பாத்திரங்கள், அணிகலன்கள் ஆகியவற்றைச் செய் தனர். கற்கால மனிதர்களைவிட உலோக கால மனிதர்கள் எல்லா வகைளிலும் சிறப்பாக வாழ்ந்தனர் என்பது புலனா கிறது.

**பழங்குடி மக்களின் சந்ததியார்**

இப்பழங்கால மக்களின் சந்ததியார் இன்றும் நம் நாட்டின் சில பகுதிகளில் தனித்து வாழ்கின்றனர். சாந்தலர்கள் வங்காளத்திலும், முந்தாக்கள், கோலேரியர்கள் மற்றும் கோண்டுகள் ஒரிஸ்ஸாவிலும், பில்லர்கள் இராஜஸ்தானிலும் வசித்து வருகின்றனர். நீலகிரி மலைப் பகுதிகளில் வசிக்கும் தோடர், இருளர், குறும்பர் முதலியோரும் பழங்குடி மக்களின் சந்ததியினரே. இவர்கள் இன்னமும் மலைகளிலும், குகைகளிலும் காடுகளிலும் வசித்து வருகின்றனர். பாறைகளையும் மரங்களையும் தேவதைகளின் இருப்பிடங்களாக எண்ணி இவர்கள் வணங்கி வருகின்றனர். இவர்களது முன்னேற்றத்திற்காக நமது அரசு கல்வி, வீட்டு வசதி, வேலை வாய்ப்பு, பண உதவி இன்னும் பலவகைகளில் தனிச்சலுகைகள் அளித்து வருகிறது.

**பயிற்சிகள்**

**I. விரிவான விடையளிக்கவும்**

1. 'கற்காலம்' எனப்படுவது யாது ?
2. 'உலோக காலம்' என அழைக்கக் காரணம் என்ன ?

3. புதிய கற்கால மக்கள் வாழ்க்கையைப்பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுதுக.

4. உலோக கால மக்கள் வாழ்க்கை, கற்கால மக்கள் வாழ்க்கையைவிட எவ்வாறு சிறப்பாக இருந்தது ?

5. நமது நாட்டில் இன்றும் வாழ்கின்ற பழங்குடி சந்ததியினர் பற்றிக் குறிப்பு எழுதுக.

**II. கொடுக்கப்பட்டுள்ள நான்கு விடைகளில் மிகச் சிறந்த விடையை அடைப்புக் குறியினுள் குறிக்க**

1. தற்காலத்தில் வாழும் பழங்குடி மக்களின் சந்ததியார்

   A. நரிக்குறவர்கள்

   B. சாந்தலர்கள்

   C. திராவிடர்கள்

   D. ஆரியர்கள். [ ]

2. கரடுமுரடான கற்களாலான ஆயுதங்களைப் பயன்படுத்தியவர்கள்

   A. புதிய கற்கால மக்கள்

   B. சிந்துவெளி மக்கள்

   C. வேத கால மக்கள்

   D. பழைய கற்கால மக்கள் [ ]

**III. நீங்களே செய்யுங்கள்**

1. இந்தியா வரைபடத்தில் பழைய கற்காலம், புதிய கற்காலம், உலோக காலம் ஆகியவற்றிற்கான சான்றுகள் கிடைத்த இடங்களைக் குறிக்கவும்.

2. பொருட்காட்சிச் சாலைக்குச் சென்று கற்கால, உலோக காலச் சான்றுகளைப் பார்த்துக் குறிப்பு எழுதுக.

# 3. சிந்துச் சமவெளி நாகரிகம்

## (அ) புதைபொருள் கண்டுபிடிப்புகள்

சிந்துநதி பஞ்சாப், சிந்து மாகாணங்களை வளமுறச் செய்கிறது. இச்சமவெளியில் கி. பி.1922ஆம் ஆண்டு முதல் 1928ஆம் ஆண்டு வரை தொல்பொருள் ஆய்வாளர் புதை பொருள் ஆராய்ச்சி நடத்தினர். இதன் விளைவாக, இன்று பாகிஸ்தானில் அடங்கிய சிந்து மாநிலத்தில் லர்கானா மாவட்டத்தில் சிந்துநதியின் வலக்கரையில் உள்ள மொகஞ்சதாரோ, மற்றும் பஞ்சாபில் சிந்துநதியின் கிளை நதியாகிய




படம் 4. ஹரப்பா நாகரிகத்தின் பரப்பு

ராவி ஆற்றின் இடக்கரையில் உள்ள ஹரப்பா என்னும் இடங்களில் புதையுண்ட நகரங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. மொகஞ்சதாரோ என்பதற்குப் 'புதையுண்ட நகரம்' என்று பொருள். இவ்விரு நகரங்களில் நடத்திய ஆராய்ச்சியின்

பயனாக இற்றைக்கு ஏறத்தாழ 5000 ஆண்டுகளுக்கு முன்னரே இப்பகுதிகளில் பண்பட்டதொரு மனித இனம் வாழ்ந்த விவரம் வெளியாயிற்று. புதையுண்ட நகரங்கள் சிந்துச் சமவெளியில் அமைந்துள்ளதால் இதனை, 'சிந்துச் சமவெளி நாகரிகம்' என்று வழங்கினர்.

அண்மைக் காலத்தில் சண்டிகாருக்கு அருகில் ரூபர், குஜராத் மாநிலத்திலுள்ள லோதல், இராஜஸ்தானிலுள்ள கலிபங்கன் என்னுமிடங்களில் இத்தகைய நாகரிகம் இருந்த தற்கான சின்னங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இச்சின்னங் கள் மொகஞ்சதாரோ, ஹரப்பாவில் கண்டுபிடிக்கப்பட்ட சின் னங்களோடு ஒத்திருக்கின்றன. இக்கலாச்சாரம் சிந்துமாநிலம், பலுசிஸ்தானம், கிழக்கு மற்றும் மேற்கு பஞ்சாப் மாநிலங்கள், வடக்கு இராஜஸ்தானம், குஜராத் ஆகிய பகுதிகளில் பரவி யிருந்தது. அவற்றைக் கீழே உள்ள படத்தில் காணலாம்.

சிந்துவெளி நாகரிகத்தை 'ஹரப்பன் கலாச்சாரம்' என்று தற்காலத்திய வரலாற்று நிபுணர்கள் அழைக்கிறார்கள்.

ஆசியா, ஆப்பிரிக்கா ஆகிய கண்டங்களில் நைல், டைகிரிஸ், யூப்ரட்டிஸ் ஆற்றங்கரை நாகரிகங்கள் சிறந்து விளங்கியபோது இந்தியாவில் இக்கலாச்சாரம் சிறந்து விளங் கியதெனக் கருதப்படுகிறது. பண்பட்ட இக்கலாச்சாரம், ஆரியர் நம் நாட்டிற்கு வருவதற்கு முன்பே விளங்கியது நம்மைப் பெருமிதம் அடையச் செய்கிறது. இக்கலாச்சாரத்தின் சிறப்பு அம்சங்களைக் காண்போம்.

### (ஆ) நாகரிகத்தின் காலம்

இந்த நாகரிகம் செம்பு, கற்கள் உபயோகப்படுத்தப்பட்ட காலத்தில் சிறப்புற்று விளங்கியது. தொல்பொருள் ஆராய்ச்சி யாளர்கள் கி. மு. 3250 - லிருந்து 2750 வரை இது திகழ்ந்ததாகக் கூறுகின்றனர்.

### (இ) சமுதாய நிலை

இக்கலாச்சாரம் நகர்ப்புறத்தன்மை வாய்ந்ததாகும். மொகஞ்சதாரோ, ஹரப்பா, லோதல், கலிபங்கன் ஆகிய

நகரங்கள் குறிப்பிட்ட திட்டப்படி கட்டப்பட்டிருந்தன. நகரங்கள் இரண்டு பகுதிகளாக அமைக்கப்பட்டிருந்தன. கீழ்ப் பகுதியில் மக்கள் வாழ்ந்த வீடுகள் இருந்தன. மேடான மேல் பகுதியில் சமயக் கூடங்களும், பொதுமன்றங்களும், தானியக் களஞ்சியங்களும், தொழிற்கூடங்களும் இருந்தன. சுகாதார முறைப்படி தெருக்கள் அகலமாகவும் ஒழுங்காகவும் அமைக்கப் பட்டிருந்தன. தெருக்களின் அகலம் சுமார் 10 மீட்டர் வரை இருந்தது.

தெருக்களின் இரு பக்கங்களிலும் சுட்ட செங்கற்களால் கட்டப்பட்ட பல அடுக்கு மாளிகைகள் இருந்தன. குளியலறை, சமயலறை உட்பட பல அறைகள் வீடுகளில் அமைக்கப் பட்டிருந்தன. வீடுகளுக்குக் கதவுகளும் சன்னல்களும் காற்றோட்ட வசதிகளுடன் பொருத்தப்பட்டிருந்தன. தண்ணீர் வசதிக்காகக் கிணறுகளும் இருந்தன. வீட்டுக் கழிவுநீர்ப் பாதைகள் தெருவில் புதைக்கப்பட்டிருந்த வடிகாலுடன் இணைக்கப்பட்டிருந்தன. வீடுகளின் முன்னால் குப்பைத் தொட்டிகள் வைக்கப்பட்டிருந்தன. நகர மக்களின் வசதிக்காகப் பொதுவான குடிநீர் வசதியும் செய்யப்பட்டிருந்தது.

மொகஞ்சதாரோவில் உள்ள தொல்பொருள் கண்டு பிடிப்புகளுள் 'பெரிய குளம்' சிறப்புப் பெற்றது. இக்குளம் தற்காலத்தில் உள்ள நீச்சல் குளத்தைப் போல அமைக்கப் பட்டிருந்தது. பொது மக்கள் குளிப்பதற்காக இது பயன் பட்டது. இதனைச் சுற்றிலும் பல குளியலறைகள் இருந்தன. இதிலிருந்து நீர் வெளியேற வடிகால் வசதியும் செய்யப் பட்டிருந்தது. இது மொகஞ்சதாரோ கட்டட அமைப்பிற்கு மிகச் சிறந்த சின்னமாக விளங்குகிறது.

மற்றொரு கண்டுபிடிப்பு ஹரப்பாவிலுள்ள தானியக் களஞ்சியமாகும். இதில் தேவையானபோது உபயோகப் படுத்த தானியம் சேமிக்கப்பட்டிருந்தது. இது 50 மீட்டர் நீளமும் 40 மீட்டர் அகலமும் கொண்டது. இக்களஞ்சியங்கள் ஆற்றங்கரைகளின் அருகில் கட்டப்பட்டிருந்தன.

மக்கள் விவசாயம் செய்து கோதுமை, பார்லி ஆகியவற்றை விளைவித்தனர். கோதுமை, பார்லி, பால், மீன், கோழி, ஆடு, பன்றி இறைச்சி ஆகியவை இவர்களது உணவாகும். யானை, பன்றி, எருமை, நாய், பெரிய திமிலை உடைய எருதுகள்



படம் 5. பெரிய குளம்

ஆகியவற்றை வீடுகளில் வளர்த்து வந்தனர். இக்காலத்தில் இவர்கள் குதிரைகளைப் பற்றி அறிந்து கொண்டதாகத் தெரியவில்லை. இவர்கள் பருத்தி மற்றும் கம்பளி உடைகளை அணிந்திருந்தனர். ஆடைகளை நெய்வதுடன் அவற்றிற்குச் சாயம் போடவும் அறிந்திருந்தனர். ஆண், பெண் ஆகிய இருபாலாரும் அணிகலன்களை அணிந்துகொள்வதில் ஆர்வமுள்ளவர்களாக இருந்தனர். பொன், வெள்ளி, தந்தம் ஆகியவற்றாலான காதணி, கழுத்தணி, கையணிகளை அணிந்து வந்தனர். இறந்தவர்களைச் சுட்டெரிக்கும் முறை இருந்தது; அடக்கம் செய்யும் வழக்கமும் இருந்தது. மண்பாண்டங்கள் செய்தல், தச்சு வேலை, தந்த வேலை, விளையாட்டுப் பொருள்கள் செய்தல் ஆகியவை முக்கியத் தொழில்களாகும். இரும்பின் பயனை இவர்கள் அறியவில்லை. வில், அம்பு, கத்தி, ஈட்டி, கோடரி, கவண், தடி ஆகியவற்றை ஆயுதங்களாகப் பயன்படுத்தினர். சூதாட்டம், நடனம், சதுரங்கம்

போன்ற விளையாட்டுகளில் அதிக ஆர்வம் காட்டினர். மேற்கு ஆசிய நாடுகளுடன் வர்த்தகத் தொடர்புகள் கொண்டிருந்தனர். சுமேரியாவில் சிந்துச் சமவெளி முத்திரைகளும், சிந்துச் சம வெளியில் சுமேரியப் பொருள்களும் காணப்பட்டிருப்பதால் இரு நாடுகளுக்கும் இடையே வாணிபம் நடந்திருக்க வேண்டும்.

### (ஈ) எழுத்து முறையும் கலையும்

இக்கால மக்களுக்கு எழுதப் படிக்கத் தெரிந்திருந்தது. இவர்கள் ஒருவகைச் சித்திர எழுத்துகளைப் பயன்படுத்தினர். இச்சித்திர எழுத்துகள் பற்றிய குறிப்புகள் சிந்துச் சம வெளியில் கண்டெடுக்கப்பட்ட முத்திரைகளில் காணப்படு கின்றன. இவ்வெழுத்துகள் எவ்வகையைச் சேர்ந்தவை



படம் 6. சித்திர எழுத்துகள் உள்ள முத்திரை

என்பது இன்னும் தெளிவாகவில்லை. கலையிலும் இவர்கள் சிறந்து விளங்கினர். ஹரப்பாவில் கிடைத்துள்ள வெண்கலத் தாலான நடனமாதின் சிலையும் சுண்ணாம்புக் கல்லினாலான தாடியுடைய மனிதனின் சிலையும் இதற்குச் சான்றுகள் ஆகும்.

(உ) சமயம்

இக்கால மக்களது சமயத்தைப் பற்றி அதிகம் தெரியவில்லை. சிந்துச் சமவெளியிலும் இதர இடங்களிலும் கோயில்கள் இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால் கிடைக்கப் பெற்ற முத்திரைகளிலிருந்து இவர்கள் பல தெய்வங்களை வணங்கி வந்ததாகத் தெரிகிறது. இவர்கள் வணங்கிய தெய்வங்கள் வியத்தகு உருவங்களாக இருந்தன. இவர்களது முக்கிய தெய்வம் 'அன்னை சக்தி'. தவக் கோலத்தில் தலையில் இரு கொம்புகளுடன் கூடிய விசித்திரமான விலங்குகளால் சூழப்பட்ட சிவபெருமானை, அதாவது விலங்குகளைக் காப்பாற்றும் பசுபதியையும் வணங்கினர். லிங்க வழிபாடு, மரங்களை வணங்குதல், எருதுகளையும் ஆறுகளையும் புனிதமாகக் கருதுதல் போன்ற சமயநம்பிக்கைகள் இவர்களிடம் இருந்தன.

(ஊ) ஆரிய நாகரிகத்துடன் ஒப்பிடுதல்

ஹரப்பா கலாச்சாரம் ஆரிய நாகரிகத்திற்கு முற்பட்டது; ஆரியர் நாகரிகத்தைவிட மிகவும் சிறந்தது. ஹரப்பா நாகரிகம் நகர நாகரிகமாகும். ஆரியர் நாகரிகம் கிராம நாகரிகமாகும். ஆரியர் இரும்பைப் பயன்படுத்தினர்; சிந்துவெளி மக்கள் இரும்பின் பயனை அறிந்திருக்கவில்லை. ஆரியர்கள் குதிரையைப் பயன்படுத்தினர். ஹரப்பா கலாச்சாரத்தில் குதிரை பற்றிக் குறிப்பிடப்படவில்லை. சிந்து வெளி மக்கள் சிவனையும் சக்தியையும் வழிபட்டனர்; ஆரியர்களோ இந்திரன், வருணன், அக்கினி போன்ற இயற்கை தெய்வங்களை வணங்கினர். ஆரியர் எழுத்துகளின் பயனை அறியாதவர்; சிந்து வெளி மக்கள் ஒருவித சித்திர எழுத்துகளை அறிந்திருந்தனர். எனவே ஹரப்பா கலாச்சாரம் ஆரியர் தொடர்பற்ற பழமையான ஒரு தனித்தன்மை வாய்ந்த நாகரிகமாகும். இத்துணைச் சிறப்பிற்கு இருப்பிடமாக விளங்கிய நகரங்கள் வெள்ளத்தாலோ, அந்நியர் படையெடுப்பாலோ, கொள்ளை நோயாலோ, தீயினாலோ மற்றும் வேறு காரணங்களாலோ அழிந்திருக்கக்கூடும் என வரலாற்று வல்லுநர்கள் கருதுகின்றனர்.

## பயிற்சிகள்

**I. விரிவான விடை எழுதுக**

1. ஹரப்பா கலாச்சாரத்தில் சமுதாய நிலை எவ்வாறு இருந்தது ?
2. சிந்துச் சமவெளி மக்களின் சமயத்தைப்பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுதுக.
3. பெருங்குளத்தைப் பற்றி விவரிக்கவும்.
4. சிந்துச் சமவெளி நாகரிகத்தை ஆரிய நாகரிகத்துடன் ஒப்பிடுக.

**II. சுருக்கமான விடை தருக**

1. ஹரப்பா கலாச்சாரம் பற்றிய சின்னங்கள் கிடைத்துள்ள இடங்களில் இரண்டினைக் கூறுக.
2. சிந்துச் சமவெளி மக்களின் தொழில்களில் இரண்டினைக் கூறுக.
3. 'சித்திர எழுத்து' என்றால் என்ன ?

**III. கீழே கொடுக்கப்பட்டுள்ள வாக்கியங்கள் உண்மையெனில் 'ஆம்' என்றும், அல்ல எனில் 'இல்லை' என்றும் அடைப்புக் குறிகளினுள் குறிப்பிடுக**

1. ஹரப்பா கலாச்சாரம் சிந்து முதல் பஞ்சாப் வரையிலும், மற்றும் இராஜஸ்தான் முதல் குஜராத் வரையிலும் பரவியிருந்தது. [ ]
2. 'பெரியகுளம்' ஹரப்பாவில் இருந்தது. [ ]
3. 'பெருங்களஞ்சியம்' மொகஞ்சதாரோவில் இருந்தது. [ ]
4. ஹரப்பா, மொகஞ்சதாரோ நகரங்கள் திட்டமிடாது கட்டப்பட்டவை. [ ]
5. சிந்துச் சமவெளி வீடுகள் சுடப்பட்ட செங்கற்களால் கட்டப்பட்டவை. [ ]
6. ஹரப்பா கலாச்சாரம் கிராமத்தை அடிப்படையாகக் கொண்டது. [ ]
7. ஹரப்பா கலாச்சாரம் ஆரியர் நம் நாட்டிற்கு வருவதற்குமுன் ஆரியர் அல்லாத மக்களால் வளர்க்கப்பட்ட கலாச்சாரம் எனலாம். [ ]

IV. நீங்களே செய்யுங்கள்

1. இந்தியா வரைபடத்தில் ஹரப்பா கலாச்சாரம் பரவியிருந்த பரப்பையும், முக்கியமான புதையுண்ட நகரங்களையும் குறிக்கவும்.

2. அருகில் உள்ள தொல்பொருள் காட்சி சாலைக்குச் சென்று அங்குள்ள பொருள்களைப் பார்வையிட்டுக் குறிப்புகள் எழுதவும்.

3. ஹரப்பா கலாச்சாரத்தை விளக்கும் முத்திரைகள், சித்திர எழுத்துகள் ஆகியவற்றின் வரைபடங்கள் தயாரிக்கவும்.

# 4. திராவிடர், ஆரியர் நாகரிகங்கள்

## (அ) திராவிடர்கள்

### திராவிடர்களின் நாகரிகம்

திராவிடர்களின் தோற்றத்தைப்பற்றிப் பலவகை கருத்துகள் நிலவி வருகின்றன. கிழக்கு மத்திய தரைக்கடல் நாடுகளிலிருந்து திராவிடர்கள் இங்குக் குடியேறியவர்கள் என்று சிலரும், இந்தியப் பெருங்கடலில் சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் லெமூரியாக் கண்டம் என்னும் பெரிய ஒரு நிலப்பரப்பு இருந்ததாகவும் அதுவே திராவிடர்களின் பிறப்பிடமாக இருந்திருக்க வேண்டும் என்று சிலரும், திராவிடர்கள் இந்தியாவைத் தாயகமாகக் கொண்ட ஆதிக்குடிகள் என்று வேறு சிலரும் கூறுகின்றனர். இவ்வாறு, கருத்து வேறுபாடுகள் பல இருந்த போதிலும், ஆரியர் வருகைக்கு (கி.மு. 2000) முன்பே திராவிடர்கள் இந்நாட்டில் வாழ்ந்து வந்த மிகச் சிறந்த நாகரிகமும் பண்பாடும் கொண்ட மக்கள் என்பதை எல்லா ஆராய்ச்சியாளர்களும் ஒப்புக்கொள்கின்றனர்.

திராவிடர்கள் சற்றுக் குள்ளமாகவும் கருநிறம் உடையவர்களாகவும் இருந்தனர்; கரிய கண்களையும் சுருண்ட மயிரையும், உறுதியான உடலமைப்பையும் பெற்றிருந்தார்கள்.

திராவிடர்கள் முதன் முதலில் கிராமங்களிலும் பின்னர் நகரங்களிலும் வாழ்ந்தனர். அவர்களுடைய வீடுகள் செங்கற்களால் கட்டப்பட்டவை. அவர்கள் நகரங்களையும் கோட்டைகளையும் அமைத்தனர். நகரங்களைச் சுற்றிலும் பாதுகாப்பு அரண்களை அமைத்தனர்.

திராவிடர்களிடையே சாதிவேறுபாடு கிடையாது. திராவிட சமூகத்தின் தலைவர் அரசரே. திராவிடர்கள் தம்மைப் பகைவர்களிடமிருந்தும் விலங்குகளிடமிருந்தும் காப்பாற்றிக் கொள்ள வில், வேல், வாள், அம்பு, ஈட்டி போன்ற ஆயுதங்களைப் பயன்படுத்தினர். மக்களின் பாதுகாப்பிற்காக அரசர்களிடம் தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை ஆகிய நால்வகைப் படைகளும் இருந்தன. இவர்கள் போரில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தனர்.

திராவிடர்கள் தாம் வாழ்ந்துவந்த நிலப்பகுதியை இயற்கை அமைப்பிற்கேற்ப ஐந்து பெரும் பிரிவுகளாகப் பிரித்தனர். மலையும் மலை சார்ந்த பகுதியைக் குறிஞ்சி எனவும், காடும் காடு சார்ந்த பகுதியை முல்லை எனவும், வயலும் வயல் சார்ந்த பகுதியை மருதம் எனவும், கடலும் கடல் சார்ந்த பகுதியை நெய்தல் எனவும், குறிஞ்சியும் முல்லையும் திரிந்ததால் உண்டான பகுதியைப் பாலை எனவும் வழங்கி வந்தனர்.

திராவிடர்களின் முதன்மையான தொழில் விவசாயம். அவர்கள் ஆறுகளின் குறுக்கே அணைகளைக் கட்டி நீர்ப்பாசன வசதி செய்து கொண்டனர். துணி நெய்தல், உலோகங்களைக் கொண்டு அணிகலன்கள் செய்தல், மண்பாண்டங்கள் செய்தல், தச்சுவேலை, தந்த வேலை முதலிய தொழில்கள் அவர்களுக்குத் தெரிந்திருந்தன. கப்பல் கட்டுதல், படகு கட்டுதல் ஆகிய தொழில்களையும் அறிந்திருந்தனர்.

திராவிடர்கள் மரக்கலங்களில் சென்று அயல் நாடுகளுடன் வாணிகம் செய்து வந்தனர். முத்து, மயில்தோகை, யானைத் தந்தம், அரிசி, நறுமணப் பொருள்கள், மெல்லிய பருத்தி ஆடை, தேக்குமரம் போன்றவற்றை மேற்கு ஆசியா, எகிப்து ஆகிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்தனர்.

திராவிடமொழியே அவர்களது மொழியாகும். இப்பொழுது தென்னிந்தியாவில் பேசப்பட்டுவரும் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகியவை திராவிட மொழிகளாகும்.

திராவிடர்கள் சிவன், சக்தி ஆகிய கடவுள்களையும், மரங்கள், பாம்புகளையும் வணங்கி வந்தனர். அவர்கள் கோயில்கள் கட்டி விக்கிரக ஆராதனை செய்தனர். பழங்கால எகிப்தியரைப் போல அவர்கள் இறந்தவர்களை அவர்களுடைய ஆடை ஆபரணங்களுடன் புதைத்தனர். 'இறந்த பிறகும் ஆத்மாவுக்கு வாழ்வு உண்டு' என அவர்கள் நம்பினர்.

## (ஆ) ஆரியர்கள்

### ஆரியர்களின் பூர்வீக இருப்பிடம்

ஆரியர்கள் ஏறத்தாழ கி.மு. 2000 ஆண்டில் இந்தியாவிற்கு வந்து குடியேறினர். அவர்களது பூர்வீக இருப்பிடம் பற்றிப் பல கருத்துகள் நிலவுகின்றன. நமது தேசியத் தலைவரான பால கங்காதர திலகர் அவர்கள் ஆர்க்டிக் பகுதியிலிருந்து வந்தனர் என்றும், வேறு சிலர் ஹங்கேரி நாடு அல்லது மத்திய ஐரோப்பாவிலிருந்து வந்தனர் என்றும் கூறுகின்றனர். பேராசிரியர் மாக்ஸ்முல்லர் உள்பட பெரும்பாலோர், அவர்கள் மத்திய ஆசியாவில் வாழ்ந்து வந்தனர் என்றும், நாளடைவில் மக்கள்தொகை பெருகவே அவர்கள் ஐரோப்பா, ஆசியாவின் மற்ற பகுதிகளுக்குச் சென்றனர் என்றும், ஒரு சாரார் ஈரானில் சில காலம் தங்கி, பின்னர் இந்தியாவிற்கு வடமேற்குக் கணவாய்கள் மூலம் வந்து குடியேறினர் என்றும் கூறுகின்றனர். இவ்வாறு வந்த ஆரியர்கள் ஏற்கனவே இங்கு வாழ்ந்து வந்தவர்களுடன் போரிட்டு அவர்களைத் தோற்கடித்தனர். ஆரியர்கள் தங்களை எதிர்த்த அம்மக்களை 'தஸ்யுக்கள்' என அழைத்தனர். முதலில் பஞ்சாப் சமவெளியிலும், பின்பு கங்கைச் சமவெளியிலும் ஆரியர்கள் குடியேறினர். அவர்கள் வட இந்தியாவில் குடியேறிய பகுதிக்கு 'ஆரியவர்த்தம்' என்று பெயர்.

## ஆரிய சமூகம்

ஆரியர்கள் வெண்மை நிறத்துடனும், உயரமாகவும் வலிமை மிக்கவர்களாகவும் இருந்தனர். அவர்கள் பல குடும்பங்களாகப் பிரிந்து வாழ்ந்தனர். குடும்பத்தின் தலைவன் தந்தை. அவர்களிடையே 'தந்தைவழி ஆண்வாரிசு' உரிமை இருந்தது. பெண்கள் சமூகத்தில் சிறப்பிடம் பெற்றிருந்தனர். ஆரம்ப காலத்தில் ஆரியர்களிடையே சாதிவேறுபாடுகள் கிடையாது. பிற்காலத்தில் அவரவர் செய்யும் தொழிலை ஒட்டி நான்கு சாதிகள் ஏற்பட்டன. பின்னர் சாதி பிறப்பை அடிப்படையாகக் கொண்டு அமைந்தது.

ஆரியர்களின் முக்கியத் தொழில்கள் உழவுத் தொழிலும் ஆடுமாடுகளை மேய்த்தலுமாகும். கம்பளி ஆடை நெய்யவும், தோல் பதனிடவும், தச்சு வேலை, கொத்து வேலை முதலிய கைத்தொழில்கள் செய்யவும் அவர்கள் அறிந்திருந்தனர். பொன் அணிகலன்களையும் செப்புப் பாத்திரங்களையும் செய்யக் கற்றிருந்தனர்.

ஆரியர்கள் பால், கோதுமை, பார்லி, இறைச்சி, காய்கறிகள், பழங்கள் முதலியவற்றை உணவாகக் கொண்டனர். சோமபானம், சுராபானம் என்னும் மதுபானங்களையும் தேனையும் அருந்தினர். வேட்டையாடல், தேரோட்டம் பந்தயம், வாட்போர், சொக்கட்டான் ஆடுதல், நாட்டியமாடுதல், இசை ஆகியவை இவர்களது பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளாகும்.

## வேதங்களும் வேத இலக்கியமும்

இந்தியாவில் குடியேறிய ஆரியர்கள் தொடக்கத்தில் இயற்கைத் தோற்றங்களாகிய இந்திரன், வருணன், சூரியன், அக்கினி, வாயு ஆகியவற்றை வழிபட்டனர். கங்கைச் சமவெளியில் குடியேறிய பின்னர் அவர்கள் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய தெய்வங்களை வணங்கினர். அத்தெய்வங்களைப் போற்றும் வகையில் பாடப்பட்ட பாடல்களின் தொகுப்புகளுக்கு வேதங்கள் என்று பெயர். வேதம் என்பதற்குப் 'புனித அறிவு' என்பது பொருள். இருக்குவேதம், யசுர்வேதம், சாமவேதம்,

அதர்வண வேதம் ஆகியவை நான்கு வேதங்களாகும். இவ்வேதங்களைத் தொகுத்தவர் வேதவியாசர் ஆவார். வேதங்களில் உள்ள பாடல்களுக்கு விளக்கம் கூறும் வகையில் பிராமணங்கள், ஆரண்யகங்கள், உபநிடதங்கள் ஆகிய தத்துவ நூல்கள் எழுந்தன. வால்மீகி இயற்றிய 'இராமாயண மும்', வியாசர் எழுதிய 'மகாபாரதமும்' வேத தத்துவங்களைக் கதைகள் மூலமாக விளக்குகின்றன. வேதங்களும் அவற்றின் விளக்க இலக்கியங்களும் ஆரியர்களுடைய வாழ்க்கையைப் பற்றி அறிந்துகொள்ளப் பெரிதும் துணை புரிகின்றன.

### அரசியல் நிலைமை

முதலில் ஆரியர்கள் பல கூட்டங்களாகப் பிரிந்திருந்தனர். ஒவ்வொரு கூட்டத்தினரும் ஒரு குறிப்பிட்ட பகுதியில் வாழ்ந்தனர். இப்பகுதி 'ஜனா' என்று அழைக்கப்பட்டது. ஒவ்வொரு கூட்டத்தினரும் ஒரு தலைவரை ஏற்றிருந்தனர். அவரை 'ராஜன்' என்று அவர்கள் அழைத்தனர். அரசர் பரம்பரை உரிமை பெற்றவர். மக்களைப் பகைவர்களிடமிருந்து காப்பதே அவர்களது முதல் கடமையாகும். அரசருக்கு அவ்வப்போது ஆலோசனை கூறவும், அதிகாரங்களை அளவுக்கு மீறிப் பயன்படுத்தினால் அரசரைக் கட்டுப்பாடு செய்யவும் 'சமிதி' என்ற மக்கள் சபையும், 'சபா' என்ற முதியோர் சபையும் ஏற்படுத்தப்பட்டிருந்தன. அரசருக்கு உதவியாகச் 'சேனானி' என்ற படைத்தலைவரும், கிராம அரசியலையும் பாதுகாப்பையும் கண்காணிக்கக் 'கிராமணி' என்ற அதிகாரியும் இருந்தனர். மேலும் அரசரிடம் ஒற்றர் படையும், தூதுவர் குழுவும் இருந்தன. அரசர்கள் வெற்றி பெற்று நாடுகளை வென்றபோது அவ்வெற்றிகளைக் கொண்டாட அசுவமேத யாகம், இராசசூய யாகம் ஆகிய வற்றை நடத்தினர். 'ஏக்ராட்', 'சாம்ராட்' என்ற சிறப்புப் பெயர்களையும் அவர்கள் பூண்டனர். ஆரிய அரசுகளில் மிகவும் சிறப்பு பெற்றவை கோசலம், காசி, மகதம், விதேகம், பாஞ்சாலம் ஆகியவை ஆகும்.




படம் 7. பண்டைய வட இந்திய அரசுகளும் நகரங்களும்

### (இ) திராவிடர்.- ஆரியர் நாகரிகங்களின் கலப்பு

ஆரியர் நம் நாட்டில் குடியேறு முன்னரே திராவிடர் நாகரிகத்திலும் பண்பாட்டிலும் சிறப்புற்று விளங்கினர். இதனால் இவ்விரு இனத்தவரின் நாகரிகங்களும் பண்பாடுகளும் இணையத் தொடங்கின. முதலாவது, இரண்டு இனங்களும் கலந்தன. வீர காவியங்களில் தோன்றும் இராமர்,

கிருஷ்ணர், திரௌபதி ஆகியோர் கருப்பு நிறமுடையவர்கள் என்று கூறப்படுகிறது. அதனால் கலப்புத் திருமணங்கள் நடந்திருக்க வேண்டும். சாதிமுறை திராவிடரிடம் கிடையாது. ஆனால் நாளடைவில் சாதி ஆரிய - திராவிட ஆகிய இரண்டு சமூகங்களிடையேயும் தோன்றியது. ஆரியர்கள், திராவிடர்களிடமிருந்து மரம், பாம்பு முதலியவற்றை வணங்கக் கற்றுக் கொண்டனர். உருவ வழிபாடு, லிங்க வழிபாடு, சிவபக்தி வழிபாடு முதலிய வழிபாட்டு முறைகளையும் திராவிடர்களிடமிருந்தே ஆரியர்கள் மேற்கொண்டனர். மொழித் துறையில் பல திராவிடச் சொற்களை ஆரியர் ஏற்றனர். ஆரிய மொழியில் பல திராவிட மொழிச்சொற்கள் கலந்துள்ளன.

## பயிற்சிகள்

**I. விரிவான விடை தருக**

1. திராவிடர்களின் பூர்வீக இருப்பிடத்தைப்பற்றிய கருத்துகள் யாவை ?
2. திராவிடர்களின் சமூக வாழ்க்கையை விவரி.
3. ஆரியர்களின் தோற்றத்தைப் பற்றி நான்கு வாக்கியங்கள் எழுதுக.
4. ஆரியர்களின் சமூக வாழ்க்கையை விவரி.
5. ஆரியர்களின் அரசியல் நிலைமையை விளக்குக.
6. வேதகால இலக்கியங்கள் பற்றிக் குறிப்பு வரைக.
7. ஆரியர்-திராவிடர் நாகரிகங்களின் கலப்பினால் ஏற்பட்ட விளைவுகள் யாவை ?

**II. சுருக்கமான விடை தருக**

1. திராவிட நாட்டில் உள்ள ஐவகை நிலங்களின் பெயர்களை எழுதுக.
2. திராவிட மொழியிலிருந்து தோன்றிய நான்கு மொழிகள் எவை ?
3. ஆரியர்கள் வட இந்தியாவில் குடியேறிய பகுதிக்கு என்ன பெயர் ?
4. நான்கு வேதங்களின் பெயர்களைக் குறிப்பிடுக.

**III. நீங்களே செய்யுங்கள்**

1. வட இந்தியா படத்தில் பாஞ்சாலம், மகதம், கோசலம், விதர்ப்பம் ஆகிய ஆரிய அரசுகளைக் குறிப்பிடுக.
2. 'இராமாயணம்', 'மகாபாரதம்' நூல்களைப் படிக்கவும்.

# 5. சமண, பௌத்த மதங்களும் மகத இராச்சியமும்

கி. மு. ஆறாம் நூற்றாண்டு இந்திய வரலாற்றில் மிகவும் முக்கியமான காலமாகும். உலகில் சீனப் பெரியார் கன்பூசியசும், பாரசீகப் பெரியார் ஜொராஸ்டரும் தோன்றிய இதே காலத்தில், நமது நாட்டில் புத்தரும் மகாவீரரும் தோன்றினர். இவர்கள் சமய நிலையில் பல மாறுதல்களை ஏற்படுத்தினர்.

## (அ) சமண, பௌத்த சமயங்கள்

### புதிய சமயங்கள் தோன்றக் காரணங்கள்

இந்தியாவில் நிலவிய வேத மதத்தினால் மக்கள் உள்ளத்தில் நிறைவு ஏற்படவில்லை. வேதமதத்தில் சடங்குகளும் யாகங்களும் பலியிடுதலும் அதிகரித்தன. அவை சாதாரண மனிதனின் சக்திக்கு அப்பாற்பட்டிருந்தன. உயிர் பலியிடுதலை மக்கள் வெறுத்தனர். பிராமணர்களின் செல்வாக்கு ஓங்கியிருந்தது. பிராமணர்களின் ஆதிக்கத்தை மக்கள் விரும்பவில்லை. சடங்குகள் அனைத்தும் வடமொழியிலேயே செய்யப்பட்டதால் மக்கள் அவற்றின் பொருளை அறிய இயலவில்லை. மக்கள் பேசும் மொழியிலேயே சடங்குகள் இருக்க வேண்டுமென விரும்பினர். ஊழ்வினை, மறுபிறவி போன்ற கருத்துகள் நிலவின. அவர்கள் பிறவிக் கடலைக் கடக்க எளிய வழிகளைத் தேடினர். இதன் விளைவாகப் பல சமயங்கள் தோன்றின. அவற்றில் மிக முக்கியமானவை பௌத்த, சமணச் சமயங்களாகும். இவ்விரு சமயங்களும் ஏறத்தாழ ஒத்த கருத்துகளைக் கொண்டனவாகும். மேலும் இவ்விரு சமயங்களை க்ஷத்திரிய மன்னர்களே தோற்றுவித்தனர். இவ்விருவரும் இல்லற வாழ்வினின்று விடுபட்டுத் துறவற வாழ்வினை மேற்கொண்டனர்.

## சமண மதம்

### வர்த்தமான மகாவீரரும் அவருடைய போதனைகளும்

சமண மதம் வர்த்தமான மகாவீரரால் தோற்றுவிக்கப் பட்டது. இவர் கி. மு. ஆறாம் நூற்றாண்டில் வைசாலி நாட்டில் ஒரு க்ஷத்திரியக் குடும்பத்தில் பிறந்தார். இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டிருந்த இவர் பிறப்பு, இறப்பு, முக்தி போன்ற சிக்கலான பிரச்சினைகளுக்கு விடை காண விரும்பினார். தமது முப்பதாவது வயதில் துறவறத்தை மேற் கொண்டார். பன்னிரண்டு ஆண்டுகள் கடுந்தவம் புரிந்தார். பின்னர் மெய்யறிவு பெற்றார். ஐம்புலன்களை வென்று மெய்யறிவு பெற்றமையால் இவர் ஜீனர் (Jina - வென்றவர்) அல்லது மகாவீரர் என அழைக்கப்பட்டார். இவரைப் பின்பற்றியவர் 'நிர்க்கந்தர்' எனப்பட்டனர். 'நிர்க்கந்தர்' என்றால் உலகத் தொடர்புகளை விட்டவர் என்பது பொருள். இவர்களே நாளடைவில் 'ஜீனர்கள்' அல்லது 'சமணர்கள்' ஆயினர். இம்மதம் முதலில் மகத நாட்டில் தோன்றியபோதும் பின்னர் பிறநாடுகளிலும் பரவலாயிற்று. மன்னர்களும் இம்மதத்தை ஆதரித்தனர். இதனை ஆதரித்தவர்களில் கூன் பாண்டியனும், மகேந்திரவர்மப் பல்லவனும் கலிங்க மன்னன் காரவேலனும் முக்கியமானவர்கள். மகாவீரர் இறந்தபின் சமணர்கள் திகம்பரர், சுவேதாம்பரர் என இரு பிரிவுகளாயினர். சமணர்கள் பேரறிஞர்களாக விளங்கினர். இவர்கள் தமிழுக்குப் பெருந்தொண்டாற்றியுள்ளனர். இவர்களுள் 'சீவக சிந்தாமணியை' இயற்றிய திருத்தக்க தேவரும், 'நன்னூலை' இயற்றிய பவணந்தி முனிவரும் குறிப்பிடத் தக்கவர்கள். நாலடியார் நூலும் சமண நூலேயாகும்.



படம் 8. மகாவீரர்

மகாவீரர் போதித்த கொள்கைகளாவன : இப்பிறவியில் ஏற்படும் இன்ப துன்பங்கள் அவரவர் முன்வினைகளுக்கு ஏற்ப அமையும். ஊழ்வினைப் பயனிலிருந்து விடுதலை பெறுவதே முக்தி. முக்தி பெற நன்னம்பிக்கை, நல்லறிவு, நல்லொழுக்கம் ஆகிய கொள்கைகளைப் பின்பற்ற வேண்டும். இம் மூன்றுமே 'திரிரத்தினங்கள்' எனப்படும். நன்னம்பிக்கை என்பது மகாவீரர் எல்லாம் அறிந்த ஞானி என்னும் நம்பிக்கை: நல்லறிவு என்பது கர்மாவின் பயனை அனுபவித்த பிறகே முக்தியடைய முடியும் என்ற மெய்யறிவு; நல்லொழுக்கம் என்பது அஹிம்சையை அடிப்படையாகக் கொண்ட ஒழுக்கம். சமண புனித நூல் 'அங்கம்' எனப்படும். இது மகாவீரர் காலத்திற்குப் பிறகு எழுதப்பட்டது.

## பௌத்த மதம்

### கௌதம புத்தரும் அவருடைய போதனைகளும்

பௌத்த மதத்தைத் தோற்றுவித்தவர் சித்தார்த்தர் என்னும் சாக்கிய நாட்டு இளவரசர். இவர் பின்னர் கௌதம புத்தர் என அழைக்கப்பட்டார் இவர் சாக்கிய நாட்டின் தலை நகரான கபிலவஸ்துவில் பிறந்தார். இளமையில் தாயை இழந்தார். துக்கம் இன்னதென்று அறியாவண்ணம் வளர்க்கப்பட்டார். யசோதரா என்ற இளவரசியை மணந்தார். இவர்களுக்கு ஓர் அழகான ஆண் மகனும் பிறந்தான். அரச குடும்ப ஆடம்பரங்கள் இவருக்குப் பிடிக்கவில்லை. சித்தார்த்தர் இளமையிலேயே சிந்திக்கும் ஆற்றலைப் பெற்றிருந்தார். ஒரு நாள் நகரில் ஒரு முதிய



படம் 9. புத்தர்

வரையும், ஒரு நோயாளியையும், பிணம் ஒன்றைச் சிலர் தூக்கிச் செல்வதையும் பார்த்தார். உலகத் துன்பங்களுக் குக் காரணம் என்ன என்பதைக் கண்டறிய விரும்பினார். எனவே தனது இள மனைவியையும் மகனையும் விடுத்துத் துறவு பூண்டார். பல ஆண்டுகள் அலைந்து திரிந்தார்; விடைகாண முடியவில்லை. இறுதியில் 'கயை' என்னுமிடத்தி லுள்ள ஒரு போதி மரத்தடியில் அமர்ந்திருந்தபோது மெய்யறிவு பெற்றார். அதுமுதல் 'புத்தர்' என அழைக்கப் பட்டார். புத்தர் என்பதற்கு அறிவில் சிறந்தவர் என்பது பொருள். 'கௌதமர்' என்றும், 'சாக்கிய முனி' என்றும் இவரை அழைத்தனர்.

புத்தர் போதித்த கொள்கைகளாவன: துன்பங்களுக்குக் காரணம் ஆசையே. எனவே ஆசையை ஒழித்தால் துன்பத்தை ஒழித்துவிடலாம். ஆசைகளை ஒழிக்க நல்லெண்ணம், நன்மொழி, நற்செய்கை, நல்வாழ்க்கை, நல் முயற்சி, நல்ல நினைவு, நல்ல தியானம், நல்ல நம்பிக்கை. ஆகிய எண்வகை வழிகளைப் பின்பற்ற வேண்டும். தீங்கிழைக்காது பிற உயிர்களிடம் அன்புடன் ஒழுக வேண்டும். முன்வினைப் பயன்களையே நாம் இப்பிறவியில் அனுபவிக் கின்றோம். நிர்வாணம் அல்லது முக்தி அடைய எண்வகை வழிகளைப் பின்பற்ற வேண்டும். இந்தக் கொள்கைகள் புத்த சமய நூலான திரிபீடகத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. திரிபீடக நூல் பாலி மொழியில் கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் எழுதப்பட்டது.

புத்தமதம் தனது சிறப்பான கொள்கைகளால் எல்லா மக்களையும் கவர்ந்தது. இம்மதம் அசோகர், கனிஷ்கர், ஹர்ஷர் போன்ற அரசர்களால் ஆதரிக்கப்பட்டது. இது உலக மதமாக மாறியது. ஆயினும் தற்போது பௌத்த மதம் தோன்றிய இந்நாட்டில் அம்மதத்தினர் மிகச் சிலரே உள்ளனர். பௌத்த மதம் இந்தியாவில் நிலையாமைக்கு கி.பி. நான்காம் நூற்றாண்டில் தோன்றிய இந்துமத மறுமலர்ச்சியே காரணம் ஆகும்.

கி.மு. ஆறாம் நூற்றாண்டில் தோன்றிய இவ்விரு மதங்களும் பல விளைவுகளை ஏற்படுத்தின. இந்தியப் பண்பாடு மேம்பாடடைந்தது. உள்ளூர் மொழிகள் முக்கியத்துவம் பெற்றன. சமஸ்கிருதத்தின் ஆதிக்கம் குறைந்தது. பாடலிபுத்திரம், கபிலவஸ்து, இராஜகிருகம், கயா, சாஞ்சி, சாரநாத் ஆகிய இடங்களில் பௌத்த, சமண மடங்களும், ஸ்தூபிகளும், விகாரங்களும் ஏற்படுத்தப்பட்டன. அஜந்தா, எல்லோரா, எலிபண்டா ஆகிய குகைச் சித்திரங்களில் இவ்விரு மதங்களின் அழியாச் சான்றுகளைக் காணலாம்.

## (ஆ) மௌரியருக்கு முன் மகத இராச்சியம்

கி.மு. ஆறாம் நூற்றாண்டில் வட இந்தியாவில் 16 அரசுகள் இருந்தன. இவற்றை 'மகாஜன பதங்கள்' எனக் கூறுவர். இப்பெரிய அரசுகளில் அநேக முடியரசுகளும் சில குடியரசுகளும் இருந்தன. ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அவந்தி, வத்சம், கோசலம், மகதம் ஆகிய நான்கு அரசுகள் சிறப்புற்று விளங்கின.

வட இந்தியாவில் தோன்றிய அரசுகளில் மகதமே மிகப் பழமையானது. முதன் முதலாக சிசுநாக வம்சத்தைச் சார்ந்த மன்னர்கள் ஆண்டனர். அவர்களுள் முக்கியமானவர்கள் பிம்பிசாரரும் அஜாத சத்ருவும் ஆவர். பிம்பிசாரரின் தலை நகரம் இராஜகிருகம். தமது திறமையால் கோசலம், வத்சம், அங்க தேசம் முதலிய நாடுகளையும் தமது ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்தார். மகதப் பேரரசு பிம்பிசாரர் ஆட்சியில் மிகவும் பொலிவுடன் விளங்கியது. மகாவீரரும் புத்தரும் இவரது ஆட்சியில் தமது சமயக் கொள்கைகளைப் பரப்பி வந்தனர். இவர் தமது மகன் அஜாத சத்ருவினால் கொல்லப் பட்டதாகக் கருதப்படுகின்றது.

அஜாத சத்ரு மேலும் பல நாடுகளைத் தமது ஆட்சியின் கீழ்க் கொண்டுவந்தார். அஜாத சத்ருவைப் பௌத்தர்களும் சமணர்களும் தமது நண்பராகக் கருதினர். இவரது காலத்தில் மகதப் பேரரசு மிகவும் வலிமை பெற்று விளங்கியது. அஜாத

சத்ருவிற்குப் பின் ஆண்டவர்களில் உதயன் குறிப்பிடத் தக்கவர். இவர் பாடலிபுத்திர நகரை சோன் நதி கங்கையோடு கலக்குமிடத்தில் அமைத்தார். இந்நகரம் இராஜகிருகத்திற்குப் பதிலாக மகதத்தின் புகழ் பெற்ற தலைநகராக விளங்கிற்று. உதயனுக்குப் பின் வந்த சிசுநாக வம்ச அரசர்கள் திறமை யற்றவர்கள்.

சிசுநாக வம்சத்திற்குப் பின் நந்தவம்ச மன்னர்கள் ஆண்டனர். அவர்களுள் புகழ் பெற்றவர் மகா பத்ம நந்தர் ஆவார். மகதத்தை இவரும் இவரது எட்டு மைந்தர்களும் ஆண்டமையால் 'நவநந்தர்கள்' என அழைக்கப்பட்டனர். மகா பத்ம நந்தர் திறமை மிக்கவர். மகதத்தோடு கலிங்கத்தையும் சேர்த்துக் கொண்டார். முதல் முதல் வட நாட்டில் ஒரு பேரரசை ஆட்சி செய்த மாமன்னர் இவரே. நந்தப் பேரரசு இந்திய வரலாற்றில் தோன்றிய முதல் பேரரசாகும். நந்த வம்சத்தின் கடைசி அரசர் தனநந்தர் ஆவார். இவர் மக்களைக் கொடுமைப்படுத்தினார். எனவே மக்கள் இவரை வெறுத்தனர். இத்தகைய அதிருப்தி நிலை சந்திரகுப்தர் என்னும் தலைவரது எழுச்சிக்கும் மௌரிய வம்சம் மகதத்தில் ஆளுவதற்கும் வழி வகுத்தது.

**சிசுநாக, நந்த மன்னர்கள் காலத்திய அந்நியப் படையெடுப்புகள் :** சிசுநாக வம்சத்திய பிம்பிசாரர் காலத்தில் முதலாம் டேரியஸ் என்ற பாரசீக மன்னர் இந்தியா மீது படையெடுத்து சிந்து, பஞ்சாப் மாகாணங்களை வென்றார். அம்மாகாணங்கள் பாரசீகப் பேரரசின் ஒரு மாநிலமாக விளங்கியது. வடமேற்கு இந்தியாவில் பாரசீக ஆட்சி சிறிது காலம் இருந்தது.

நந்த வம்சத்தின் கடைசி மன்னரான தனநந்தர் காலத்தில் கிரேக்க மன்னரான மகா அலெக்சாந்தர் இந்தியாவின் மீது கி.மு. 326-ல் படையெடுத்தார். வட மேற்கு

இந்தியாவில் பல அரசர்கள் ஆண்டுவந்தனர். அவர்களிடம் ஒற்றுமையில்லை. தட்சசீல மன்னரான அம்பி அலெக்சாந்தருக்கு அடி பணிந்தார். ஆனால் பஞ்சாப் மன்னரான போரஸ் அலெக்சாந்தரை ஜீலம் நதிக்கரையில் எதிர்த்துப் போரிட்டுத்தோல்வியடைந்தார். அலெக்சாந்தர் பியாஸ் நதிவரை சென்று பின்னர் நாடு திரும்பினார். வழியில் பாபிலோன் நகரில் கி.மு. 323-ல் மரணமடைந்தார்.



படம் 10. அலெக்சாந்தர்

## பயிற்சிகள்

I. விரிவான விடை எழுதுக

1. சமண, பௌத்த சமயங்கள் தோன்றக் காரணங்கள் யாவை
2. சமணமதப் போதனைகள் யாவை ?
3. பௌத்தமதப் போதனைகள் யாவை ?
4. மகதப் பேரரசை ஆண்ட சிசுநாக வம்சம்பற்றி எழுதுக.
5. பாரசீக, கிரேக்கப் படையெடுப்புகளை விவரிக்கவும்.

II. சுருக்கமான விடை தருக

1. சமணர்களின் இரண்டு பிரிவினர் யாவர் ?
2. சமண மதத்தை ஆதரித்த மன்னர்கள் யாவர் ?
3. கௌதம புத்தரின் இயற்பெயர் என்ன ?
4. புத்தர் எவ்விடத்தில் மெய்யறிவு பெற்றார் ?
5. மௌரியர்களுக்கு முன் மகத நாட்டை ஆண்ட வம்சங்கள் யாவை ?
6. பாடலிபுத்திர நகரத்தை நிறுவிய மன்னர் யார் ?

7. நந்த வம்சத்துக் கடைசி அரசர் யார்?
8. அலெக்சாந்தருடன் போரிட்ட மன்னர் பெயர் என்ன?

III. நீங்களே செய்யுங்கள்

1. இந்தியா படத்தில் கி. மு. ஆறாம் நூற்றாண்டிலிருந்த வட இந்திய அரசுகளைக் குறிக்கவும்.
2. புத்தர், மகாவீரர் படங்களைச் சேகரித்துப் படத்தொகுப் பேட்டில் ஒட்டவும்.

# 6. மௌரியப் பேரரசு

**சந்திரகுப்த மௌரியர் (கி.மு. 325—301)**

• மௌரிய வம்சத்தைத் தோற்றுவித்தவர் சந்திரகுப்தர் ஆவார். இவரது தாயாரின் பெயர் 'முரா' என்பது. அதனால் இவர் தோற்றுவித்த வம்சம் 'மௌரிய வம்சம்' எனக் கூறப் படுகிறது. சந்திரகுப்தர் பாடலிபுத்திரத்திற்கு அண்மையில் வசித்துவந்த 'மோரியர்' என்ற இனத்தைச் சேர்ந்தவர் என்றும் அதனால் இவர் தோற்றுவித்த அரச வம்சம் 'மௌரிய வம்சம்' என அழைக்கப்பட்டது என்றும் வேறு சிலர் கூறுகின்றனர்.

நந்த வம்சத்துக் கடைசி மன்னரான தனநந்தர் கொடுங் கோல் ஆட்சி செய்தார். தமது அமைச்சரான சாணக்கியர் என்ற சிறந்த ராஜதந்திரியை நாட்டைவிட்டு வெளியேற்றினார். தனநந்தர் காலத்தில் அலெக்சாந்தர் இந்தியாமீது படை யெடுத்தார். அலெக்சாந்தரின் மறைவிற்குப் பிறகு இந்தியா வில் குழப்பம் நிலவியது. இக் குழப்பத்தில் அலெக்சாந்தர் விட்டுச் சென்றிருந்த தளபதிகளுடன் போராடி சந்திரகுப்தர் பஞ்சாப், சிந்து பகுதியிலிருந்து அந்நியர் ஆதிக்கத்தை அகற்றினார். பின்னர் சாணக்கியர் உதவிகொண்டு நந்த வம் சத்துக் கடைசி மன்னரான தனநந்தரைப் பதவியிலிருந்து நீக்கி, கி.மு. 325-ல் தாமே மகதத்தின் மன்னரானார். கி.மு. 305-ல் அலெக்சாந்தரின் தளபதிகளில் ஒருவரான

செல்யூகஸ் கிரேக்கப் பகுதிகளை மீட்க இந்தியாவின்மீது படையெடுத்தார். அவரை சந்திரகுப்தர் தோற்கடித்தார். இருவரிடையே ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. இந்த ஒப்பந்தத்தின் படி சந்திரகுப்தர் காபூல், ஹீரட், சிந்து நதியின் மேற்குப் பகுதி.பலுசிஸ்தானம் ஆகிய பகுதிகளைப் பெற்றார்.

செல்யூகஸ், மெகஸ்தனிஸ் என்பவரைப் பாடலிபுத்திரத் திற்குத் தூதுவராக அனுப்பினார். இவர் சந்திரகுப்தரின் அரச வையில் பணியாற்றினார். இத்தூதுவர் சேகரித்த செய்திகளை 'இண்டிகா' என்னும் நூலாகத் தொகுத்தார். இந்நூலில் முக்கிய மாகப் பாடலிபுத்திர நகராட்சியை வர்ணித்துள்ளார். இது ஒரு முக்கிய சரித்திரச் சான்றாகும்.

சாணக்கியர் சந்திரகுப்தரின் பேரவைக்கு முதல் மந்திரி யாக விளங்கினார். சாணக்கியருக்குக் கௌடில்யர், விஷ்ணு குப்தர் என்ற வேறு பெயர்களும் உண்டு. அவர் மௌரிய ஆட்சியைச் செவ்வனே நடத்துவதில் பெரிதும் உதவினார். அவர் 'அர்த்த சாஸ்திரம்' என்னும் நூலை எழுதினார். அதில் மௌரிய ஆட்சியின் பல அங்கங்களையும் விவரித்துள்ளார்.

மௌரிய அரசின் ஒப்பற்ற தலைநகரம் பாடலிபுத்திர மாகும். இது சோன் நதி கங்கையுடன் கலக்குமிடத்தில் அமைக் கப்பட்ட நகரமாகும். இன்றைய பாட்னா நகரமே பாடலி புத்திரமாக விளங்கியது. இந்நகரம் திட்டமிட்டுக் கட்டப்பட்ட தாகும். அரண்மனையைச் சுற்றிலும் தோட்டங்களும் அழகிய குளங்களும் இருந்தன. அடுத்து, கடைவீதிகள் அமைக்கப்பட் டிருந்தன. கடைவீதிகளைச் சுற்றி மக்கள் வாழ்ந்த வீடுகள் இருந்தன. நகரைச் சுற்றிலும் மர வேலைப்பாடுகள் நிறைந்த மதில்சுவர்களும் அகழிகளும் இருந்தன. இந்நகரின் நிர்வாகம் நகர நிர்வாகத்திற்கு ஓர் எடுத்துக்காட்டாக இருந்தது. முப்பது உறுப்பினர்களைக் கொண்ட அவை, ஐந்து பேர்கள் வீதம் ஆறு குழுக்களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு குழுவும் ஒரு இலாகாவைக் கவனித்து வந்தது. இந்த நகராட்சி நல்லமுறை யில் நடந்தது.

சந்திரகுப்தர் தமது 24 ஆண்டு ஆட்சிக் காலத்தில் வட இந்தியா முழுவதிலும் ஆப்கானிஸ்தானத்திலும் தமது ஆதிக்கத்தை நிலைநாட்டினார். மக்கள் நலனைக் கருத்திற்கொண்டு நல்லாட்சி நடத்தினார். மௌரியப் பேரரசு நிறுவப்பட்டது இந்திய வரலாற்றில் ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். அந்நியர்களையும் ஆக்கிரமிப்பாளர்களையும் விரட்டி மக்களை ஒன்று



படம் 11. அசோகர்

படுத்தி அரசியல் ஒற்றுமை ஏற்படுத்தியவர் சந்திரகுப்தர் ஆவார். அவரது கடைசி காலத்தில் அவர் சமண சமயத்தை ஏற்றுக் கொண்டு தெற்கே சென்று கர்நாடக மாநிலத்திலுள்ள சிரவண பெல்கோளா என்னுமிடத்தில் உண்ணாவிரதமிருந்து உயிர்நீத்தார் என்று சொல்லப்படுகிறது.

## பிந்துசாரர் (கி.மு. 301—273)

சந்திரகுப்த மௌரியருக்குப் பின்னர் அவரது மைந்தர் பிந்துசாரர் ஆட்சிக்கு வந்தார். இவர் தக்காணத்தை (கலிங்கம் நீங்கலாக) மௌரியப் பேரரசுடன் இணைத்தார். வெளிநாட்டு விவகாரங்களில் தம் தந்தை கொண்டிருந்த நெருங்கிய தொடர்பைப் போற்றி நடந்தார். இவரிடம் தொடர்ந்து சாணக்கியர் முதலமைச்சராக இருந்தார்.

## அசோகர் (கி.மு. 273—232)

கலிங்கப் போர் : பிந்துசாரருக்குப் பின் அசோகர் ஆட்சிக்கு வந்தார். மகதப் பேரரசை ஆண்ட மௌரிய மன்னர்களில் அசோகர் மிகச் சிறந்தவர். இவர் கி.மு. 273 முதல் 232 வரை நாற்பது ஆண்டுகாலம் மிகச் சிறப்பாக ஆட்சி செய்தார். இவர் கி. மு. 261ஆம் ஆண்டில் கலிங்க நாட்டின் மீது படையெடுத்தார். கடும் போரிட்டு அந்நாட்டை வென்றார். இக்கலிங்கப் போர் இவரது வாழ்க்கையை முற்றிலும் மாற்றியது. அது போரின் கொடுமைகளை நன்கு உணரும்படி செய்தது. அப்போரில் ஏற்பட்ட பெரிய உயிர்ச் சேதத்தைக் கண்டு இனிமேல் போர் புரிவதில்லை என உறுதி பூண்டார். 'வில்லம்புகளுக்குப் பதிலாக அறத்தினால் வெற்றி' என்னும் புதியதோர் அன்பு நெறியைத் தனது ஆயுதமாக உபயோகிக்கத் தொடங்கினார். கலிங்கப் போருக்குப் பின்னர் இவரது பேரரசு தமிழகம், காமரூபம் (அஸ்ஸாம்) நீங்கலாக இந்தியாவின் எல்லாப் பகுதிகளையும் கொண்டு விளங்கியது. சிந்து நதிக்கு அப்பாலுள்ள பிரதேசங்களும் நேபாளமும் இவரது பேரரசில் அடங்கியிருந்தன.

## அசோகரும் பௌத்த மதமும்

கலிங்கப் போருக்குப் பின் அசோகர் புத்த மதத்தைத் தழுவினார். புத்தமதக் கொள்கைகளைத் தம் வாழ்க்கையில் பின்பற்றி மக்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்கினார். உள் நாட்டிலும் வெளி நாடுகளிலும் புத்த மதத்தைப் பரப்ப குழுவினர்களை நியமித்தார். எகிப்து, சிரியா, மாசிடோனியா

முதலிய இடங்களுக்குத் தூதுவர்களை அனுப்பினார். அவரது மகனான மகேந்திரனும், மகளான சங்கமித்திரையும் இலங்கைக்குச் சென்று புத்தமதக் கொள்கைகளைப் பரப்பினார்கள்.

படம் 12. அசோகர் பேரரசு

மேலும் புத்த மதத்தைத் தமது பேரரசில் பரப்ப தர்மமகா மாத்திரர்கள், தர்மயுக்தர்கள் என்ற அதிகாரிகளை

நியமித்தார். புத்தரின் நினைவாகப் பல ஸ்தூபிகளையும், சந்நியாசிகளுக்கு விகாரங்கள் எனப்படும் மடாலயங்களையும் கட்டி வைத்தார். பாடலி புத்திரத்தில் புத்த சங்கத்தைக் கூட்டி புத்தமதக் கொள்கைகளை வரையறுத்தார். புத்தமதக் கொள்கைகளைக் கல் தூண்களிலும், பாறைகளிலும், குகைச் சுவர்களிலும் செதுக்கினார். இவ்வாறு அசோகர் புத்த மதம் பரவ பெரும் தொண்டாற்றினார். அதனை உலக மதமாக விளங்கும்படிச் செய்தார்.

### அசோகரின் ஆணைகள்

அசோகர் தமது ஆணைகளைக் கல் தூண்களிலும், பாறைகளிலும், குகைச் சுவர்களிலும் பொறிக்கச் செய்தார். இவை மிகச் சிறந்த வரலாற்றுச் சான்றுகளாக விளங்குகின்றன. நாட்டின் பல பகுதிகளிலும் இவற்றை நாம் காணலாம். இவைகளால் அசோகர் பேரரசின் பரப்பையும் அவரது அரசியல் நோக்கங்கள், ஆட்சி முறை, மக்கள் வாழ்க்கை நிலை முதலியவற்றையும் அறிகின்றோம். இவ்வாணைகளில் அசோகரின் பெயர் 'தேவனாம் பிரியர், பிரியதர்சிகர்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. 'தேவனாம் பிரியர்' என்றால் கடவுளின் அன்புக்குரியவர் என்றும், 'பிரியதர்சிகர்' என்றால் அன்பு கனிந்த பார்வையுடையவர் என்றும் பொருள்படும். ஆணைகள் பொறிக்கப்பட்ட கல் தூண்கள் டில்லி, அலகாபாத், சாஞ்சி,



படம் 13. சாரநாத் கல்தூண்

சாரநாத் போன்ற இடங்களிலும், குகைகள் கயைக்கு அருகிலுள்ள பராபர். குன்றுகளிலும், ஜெய்பூர், ஜபல்பூர், ஹைதராபாத், கர்நூல் போன்ற மாவட்டங்களிலும் காணப் படுகின்றன. அசோகரது ஆணைகள் பெரும்பாலும் மக்களுக்கு எளிதில் புரியக்கூடிய பிராமி மொழியில் அமைந்தவை. அசோகரது சாரநாத் சிம்மத்தூண் சுதந்திர இந்தியாவின் அரசாங்கச் சின்னமாக விளங்குகிறது.

படம் 14. கல்வெட்டுகள்

## அசோகரின் சிறப்பு

அசோகர் கடைப்பிடித்த கொள்கை புத்த தருமம் ஆகும். வாய்மை, தருமம், தன்னடக்கம், நன்றிமறவாமை, அன்பு டைமை, கொல்லாமை ஆகிய அறநெறிகளை மக்களுக்குப் போதித்தார். தாம் கூறிய அறவுரைகளைத் தாமே கடைப் பிடித்த பெருமை அசோகருக்கு உண்டு. குடிமக்களின் நலன் களுக்காகப் பாடுபட்டார். சாலையோரங்களில் நிழல் தரும் மரங்களை நட்டார்; சத்திரங்களையும் கட்டினார். மக்களின் அறியாமையைப் போக்கக் கல்வியறிவைக் கொடுத்தார். நீர்ப் பாசன வசதிகளைச் செய்து வேளாண்மைத் தொழிலைப் பெருக்கினார். மிருகங்களைக் கொல்லுதல், வேட்டையாடுதல்

ஆகியவற்றைத் தடைசெய்தார். மிருகங்களுக்கும் மருத்துவ மனைகளைக் கட்டினார்.

## மௌரியர் ஆட்சிமுறை

கௌடில்யரின் 'அர்த்த சாஸ்திரம்', மெகஸ்தனிசின் 'இண்டிகா', அசோகரின் கல்வெட்டுகள், விசாகதத்தரின் 'முத்திரா ராட்சசம்' முதலியவை மௌரியர் ஆட்சி முறையைப்பற்றி விளக்குகின்றன.

## மத்திய அரசு

ஆட்சித் துறையில் அரசரே தலைமை இடத்தைப் பெற்றிருந்தார். சட்டம் இயற்றுதல், நிர்வாகம் செலுத்துதல், நீதி வழங்குதல் ஆகியவற்றை அரசரே கவனித்து வந்தார். குடி மக்களின் நலனில்தான் மன்னரின் நலம் அமைந்துள்ளது என்றும், மக்களின் மகிழ்ச்சியே மன்னரின் மகிழ்ச்சி என்றும் கருதி பொதுநல ஆட்சியை நடத்தினார். மன்னருக்கு உதவி செய்ய 'மந்திரி பரிஷத்' என்னும் அமைச்சரவை இருந்தது.

அயலாரிடமிருந்து நாட்டைக் காத்தல், உள் நாட்டில் அமைதியையும் ஒழுங்கையும் காத்தல் அரசரின் முக்கியக் கடமையாகும். இதற்கென யானைப் படை, குதிரைப் படை, காலாட்படை, தேர்ப் படை ஆகிய நால்வகைப் படைகளை மௌரிய அரசர்கள் நிலையாக வைத்திருந்தனர். ஒற்றர் முறையைத் திறமையாக அமைத்திருந்தனர்.

நிலவரியே அரசின் முக்கிய வருமானமாகும். விளைச்சலில் ஆறில் ஒரு பங்கை நிலவரியாக வசூலித்தனர். நீர்ப் பாசனம், இறக்குமதி, சுங்கம், தொழில் முதலிய வரிகள் வசூலிக்கப்பட்டன. இப்பணம் மக்களின் பொதுநலனுக்காகச் செலவிடப்பட்டது.

நீதி வழங்க நீதி மன்றங்கள் இருந்தன. அறிவிற் சிறந்த சான்றோர்கள் நீதிபதிகளாக நியமிக்கப்பட்டனர். நாட்டின் உச்சநீதிபதியாக அரசரே இருந்தார். குற்றங்களுக்குக் கடுமையான தண்டனைகள் வழங்கப்பட்டன.

**மாகாண அரசு**

மௌரியப் பேரரசு பல மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. பெரிய மாகாணங்களுக்கு 'அத்தியட்சகர்கள்', சிறிய மாகாணங்களுக்கு 'இராஜுகர்கள்' என்ற அரசப் பிரதிநிதிகள் நியமிக்கப்பட்டிருந்தனர். மாகாணங்கள் மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. மாவட்டங்களை நிர்வகிக்கப் 'பிரதேசிகர்கள்' என்ற அதிகாரிகள் நியமிக்கப்பட்டிருந்தனர். மாவட்டத்தின் பிரிவுகளை 'ஸ்தானிகர்கள்' கவனித்துவந்தனர். 'கோபர்' என்னும் ஆணையர்கள் கிராமங்களை நிர்வகித்து வந்தனர்.

நகராட்சி முறை : மௌரியர் ஆட்சியின் மிகச் சிறந்த அம்சம் நகர ஆட்சியேயாகும். மௌரியப் பேரரசின் தலை நகராகிய பாடலிபுத்திரத்தின் நிர்வாகம் இதற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். நகர அலுவல்களைக் கவனிக்க 'நகரகர்' என்ற அதிகாரி இருந்தார். மேலும் முப்பது உறுப்பினர்களைக் கொண்ட நகர் மன்றம் அமைக்கப் பட்டிருந்தது. இம்மன்றம் ஆறு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு பிரிவிலும் ஐந்து உறுப்பினர்கள் இருந்தனர். இப்பிரிவுகள் தொழிலாளர் நலன், அயல் நாட்டினர் நலன் பேணுதல், பிறப்பு இறப்புகளைப் பதிவு செய்தல், வாணிகம், அளவு மற்றும் எடைக்கருவிகளைச் சோதித்தல், விற்பனை வரி வசூலித்தல் ஆகிய பணிகளைச் செய்துவந்தன. பாடலிபுத்திர நகராட்சி தற்கால நகராட்சி முறைகளைப் போன்று சிறந்து விளங்கியது.

மௌரியப் பேரரசின் வீழ்ச்சி : அசோகருக்குப் பின் மௌரியப் பேரரசு வீழ்ச்சியடையத் தொடங்கியது. இதற்குப் பல காரணங்கள் உள்ளன. அசோகர் பின்பற்றிய அகிம்சைக் கொள்கையின் விளைவாக மௌரியப் படையின் போர்த்திறனும் குடிமக்களின் வீரமும் குன்றின. இதன் காரணமாக மௌரியப் பேரரசுக்கு வீழ்ச்சி ஏற்பட்டது என்று சிலர் கருதுகின்றனர். அசோகருக்குப் பின் வந்த அரசர்கள் திறமையற்றவர்கள். பேரரசு பரந்து விரிந்திருந்ததால்

பல மாகாணங்களைத் திறமையாக நிர்வகிக்க முடியவில்லை. மாகாணங்கள் ஒன்றன்பின் ஒன்றாக மைய அரசின் பிணைப்பி லிருந்து தம்மை விடுவித்துக் கொண்டன. தலைநகரம் பேரரசின் மையப்பகுதியில் அமையாததால் ஆட்சித்துறையின் தன்மை சீர்குலைந்தது. இவ்வாறு ஒற்றுமையிழந்து. வலிமை குன்றியிருந்த நிலையில் மௌரியப் பேரரசை ஆண்டுவந்த பிரகத்ரதன் என்ற கடைசி மௌரிய வம்ச அரசரை அவரது சேனைத் தலைவரான புஷ்யமித்திர சுங்கர் என்பவர் கொன்றுவிட்டார். இங்ஙனம் மௌரியப் பேரரசு கி.மு. 188-ல் முடிவுற்றது.

## பயிற்சிகள்

I. விரிவான விடையளிக்கவும்

1. செல்யூகஸ் பற்றிக் குறிப்பு வரைக.
2. அசோகர் புத்த மதத்திற்கு ஆற்றிய தொண்டுகள் யாவை?
3. மௌரிய ஆட்சி முறையை விவரி.
4. பாடலிபுத்திர நகராட்சி முறையை விளக்குக.
5. அசோகரது ஆணைகள்பற்றி நீ அறிவது யாது?
6. மௌரியப் பேரரசு வீழ்ச்சியடையக் காரணங்கள் யாவை?

II. சுருக்கமான விடையளிக்கவும்

1. மௌரிய வம்சத்தைத் தோற்றுவித்தவர் யார்?
2. சந்திரகுப்தர் மகத மன்னராக ஆவதற்கு உதவியவர் யார்?
3. சந்திரகுப்தருடன் போரிட்ட கிரேக்கத் தளபதி யார்?
4. சந்திரகுப்த மௌரியரின் அரசவையில் இருந்த கிரேக்கத் தூதர் யார்?
5. சாணக்கியரின் வேறு பெயர்கள் யாவை?
6. எந்தப் போருக்குப்பின் அசோகர் போரை அறவே வெறுத்தார்?
7. அசோகரது ஆணைகள் பொறிக்கப்பட்ட கல்தூண்கள் உள்ள இடங்களில் இரண்டினைக் கூறுக.

III. காலி இடங்களை நிரப்புக

1. மௌரியர் ஆட்சிபற்றி அறிய உதவும் இரு முக்கிய நூல்கள் ————————, ————————.
2. சந்திரகுப்தரது அரசவையில் ———————— முதலமைச்சராக இருந்தார்.
3. இலங்கையில் புத்த மதத்தைப் பரப்பச் சென்ற அசோகரது மகன் ———————— ஆவார்.
4. புத்த மதத்தைப் பேரரசில் பரப்ப அசோகர் ———————— என்ற அதிகாரிகளை நியமித்தார்.
5. நமது தேசியச் சின்னம் ———————— என்ற இடத்திலுள்ள அசோகரது தூணிலிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டதாகும்.

IV. நீங்களே செய்யுங்கள்

1. இந்தியா வரைபடத்தில் அசோகரது பேரரசையும் முக்கிய நகரங்களையும் குறிப்பிடுக.
2. 'அசோகரது மனமாற்றம்'—என்னும் ஓரங்க நாடகத்தை நடித்துக் காட்டவும்.
3. நமது நாட்டுக் கொடியின் மத்தியிலுள்ள அசோகரது தர்மச் சக்கரத்தையும், நமது அரசின் சின்னமான சிங்கச் சின்னத்தையும் வரைபடங்களாக வரைக.

# 7. பழங்காலத் தமிழரசுகள்

தென் இந்தியா என்பது கிருஷ்ணா ஆற்றுக்குத் தெற்கிலுள்ள தீபகற்பப் பகுதியாகும். இதன் வரலாற்றிற்குப் பல சான்றுகள் உள்ளன. சாணக்கியரின் 'அர்த்த சாஸ்திரமும்' மெகஸ்தனிசின் 'இண்டிகாவும்' பாண்டிய நாட்டைப்பற்றிக் குறிப்பிடுகின்றன. அசோகரின் கல்வெட்டுகளிலிருந்தும் தமிழக அரசர்களின் சிறப்பைத் தெரிந்து கொள்ள முடிகிறது. சங்ககால இலக்கியம் பழங்காலத் தமிழ் மக்களின் நாகரிகத்தைக் குறிப்பிடுகிறது.

### தமிழ் அரசுகள்

தென்னிந்தியாவில் அமைக்கப்பட்ட அரசுகளில் சேர, சோழ, பாண்டிய அரசுகள் முக்கியமானவைகளாகும். இவ்




படம் 15. பழங்காலத் தமிழக அரசுகள்

வரசுகளில் தமிழ் மொழி பேசப்பட்டமையினால் இது 'தமிழகம்' என்று அழைக்கப்பட்டது. இப்பகுதி வடக்கே வேங்கடம் முதல் தெற்கே கன்னியாகுமரி வரை பரந்து கிடக்கும் நிலப்பகுதியே ஆகும். பழந்தமிழக வரலாற்றிற்கு மூலமாக விளங்குவது சங்க இலக்கியமே ஆகும்.

### சோழ நாடு

சோழ நாட்டில் தற்போதைய திருச்சிராப்பள்ளி, புதுக்கோட்டை, தஞ்சாவூர், தென்ஆர்காடு மாவட்டங்கள் அடங்கியிருந்தன. இவற்றின் வழியாகப் பாயும் காவிரியாறு சோழ நாட்டைச் செழிப்படையச் செய்கிறது. இதனாலேயே 'சோழ வள நாடு சோறுடைத்து' என வழங்கலாயிற்று. இதன் தலைநகரம் திருச்சிராப்பள்ளிக்கு அருகே உள்ள உறையூர் ஆகும். துறைமுகம் காவிரிப்பூம்பட்டினம் என்ற பூம்புகார். சோழர்களின் கொடி புலிச் சின்னம் கொண்டது.

### கரிகாற் சோழர்

பழங்காலச் சோழ அரசர்களுள் ஒப்புயர்வற்ற பேரரசர் கரிகாற் சோழர். இவர் கி.பி. முதல் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்ததாகத் தெரிகிறது. சிறுவயதிலேயே விரோதிகள் இவர் படுத்திருந்த மாளிகைக்குத் தீயிட்டபோது இவரது கால் கருகி விட்டபடியால் இவர் 'கரிகாலர்' எனப்பட்டார். இவர் பகைவரின் கரிகளுக்குக் (யானைகளுக்கு) காலனாக (இயமனாக) விளங்கியமையால் இப்பெயர் பெற்றார் எனக் கருதுவாரும் உளர்.

கரிகாலர் மிகச் சிறந்த வீரர். இவர் சிறுவராக இருந்த போதே அரசு பொறுப்பேற்றார். சேரனையும் பாண்டியனையும் தஞ்சைக்குக் கிழக்கே 25 மைல் தூரத்திலுள்ள வெண்ணிப் பறந்தலை என்ற இடத்தில் வென்றார். இவர் இலங்கையின் மீது படையெடுத்து வெற்றி கொண்டார். இவ்வாறு பல போர்களில் வெற்றி பெற்றுச் சோழ நாட்டின் பரப்பை விரிவுபடுத்தினார். கரிகாலர் தமது தலைநகரை உறையூரிலிருந்து காவிரிப் பூம்பட்டினத்திற்கு (பூம்புகாருக்கு) மாற்றினார். கரிகாலர் காடுகளை அழித்துப் பாசன வசதிகளைப் பெருக்கி விளைச்சல் நிலங்களை அதிகப்படுத்தினார். ஆதலால் இவர் 'கரிகாற் பெருவளத்தான்' என்று புகழப்பட்டார். இவர் காவிரியின் கரைகளை உயர்த்தினார். கல்லணை நீர்ப்பாசனத் திட்டத்தை ஏற்படுத்தினார். பல புலவர்கள் கரிகாலரின் அரசவையைச் சிறப்பித்தனர். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் முடத்தாமக் கண்ணியார்,

கடியலூர் உருத்திரங்கண்ணனார் ஆவர். முடத்தாமக் கண்ணியார் 'பொருநராற்றுப்படை'யிலும், உருத்திரங்கண்ணனார் 'பட்டினப் பாலை' யிலும் கரிகாலரைக் குறித்துப் புகழ்ந்து பாடியுள்ளனர். கரிகாலர் காலத்தில் கடல்வாணிகம் சிறப்புற நடந்தது. இசை, நடனம் முதலிய கலைகள் நன்கு வளர்ச்சியடைந்தன. கரிகாலருக்குப் பிறகு உள்நாட்டுக் குழப்பம் உண்டாயிற்று. சோழர்களது ஆட்சி தெற்கே பாண்டியர்களின் எழுச்சியாலும், வடக்கே பல்லவர்கள் வலிமை பெற்றமையாலும் வீழ்ச்சியடைந்தது.

**சேர நாடு**

சேர அரசு தற்போதைய கேரளம், சேலம், கோயமுத்தூர் மாவட்டங்களின் பகுதிகளைக் கொண்டது. சேரநாட்டின் தலைநகர் வஞ்சிமாநகர். தொண்டி, முசிறி ஆகியவை துறைமுகங்களாகும். சேரர்களின் கொடி வில் சின்னம் கொண்டது.

**சேரன் செங்குட்டுவன்**

பழைய சேர அரசர்களில் மிகச் சிறந்தவர் சேரன் செங்குட்டுவன். இவர் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தார். மிகச் சிறந்த வீரராகிய இவர் சோழ, பாண்டிய மன்னர்களை வென்று தமிழகத்தைத் தமது ஆட்சியின் கீழ்க் கொண்டுவந்தார். இவர் இமயம் வரை படையெடுத்துச் சென்று, பல வட நாட்டு மன்னர்களை வென்றார். வடநாட்டு வெற்றிகளைப்பற்றிச் 'சிலப்பதிகாரம்' என்னும் நூல் கூறுகிறது. இந் நூலை இயற்றிய இளங்கோவடிகள் செங்குட்டுவனின் தம்பியாவார். சங்கப் புலவர்களான பரணரும், சீத்தலைச் சாத்தனாரும் செங்குட்டுவனின் நண்பர்களாவார்கள்.

செங்குட்டுவனிடம் சிறந்த கப்பற்படை ஒன்று இருந்தது. இதன் உதவியால் கடற் கொள்ளைக்காரர்களைத் தோற்கடித்துக் கடல் வாணிகத்தைப் பெருக்கினார். இதன் காரணமாகப் புலவர்கள் செங்குட்டுவனைக் 'கடல்பிறக் கோட்டிய வேல்கெழு குட்டுவன்' எனப் புகழ்ந்தனர்.

செங்குட்டுவன் கண்ணகிக்குச் சிலை அமைப்பதற்காக இமயத்தில் எடுத்த கல்லை, கங்கையில் நீராட்டிக் கொண்டு வந்து கோயில் கட்டுவித்தார். கண்ணகிக் கோயில் திறப்பு விழாவிற்கு இலங்கை அரசராகிய முதலாம் கயவாகு கலந்து கொண்டு சிறப்பித்தார்.

### பாண்டிய நாடு

பாண்டிய நாடு தற்போதைய மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களைக் கொண்டது. இப்பகுதியில் வைகை, பொருநை ஆறுகள் பாய்கின்றன. இந் நாட்டின் தலைநகரம் வைகையாற்றின் கரையிலுள்ள மதுரையாகும். பாண்டிய நாட்டின் துறைமுகம் கொற்கையாகும். இங்கிருந்து வெளிநாடுகளுக்கு ஏராளமாக முத்துகள் ஏற்றுமதி செய்யப்பட்டன. எனவே அமரகவி பாரதியாரும் ''முத்துக் குளிப்பதொரு தென்கடலிலே'' என்று பாண்டிய நாட்டைப் புகழ்ந்துரைத்துள்ளார். பாண்டியர்களின் கொடி மீன் கொண்டது.

### பாண்டியன் நெடுஞ்செழியன்

பாண்டிய மன்னர்களுள் சிறந்தவர்கள் முதலாம் நெடுஞ் செழியனும் இரண்டாம் நெடுஞ்செழியனும் ஆவர். சிலப்பதி காரத்தில் கூறப்பட்டுள்ளவர் முதலாம் நெடுஞ்செழியன் ஆவார். இரண்டாம் நெடுஞ்செழியன் வரலாற்றுப் புகழ் பெற்றவர்.

இவர் சிறு வயதிலேயே அரசரானார். அப்பொழுது சேர சோழ அரசர்களும், மற்றும் ஐந்து குறுநில மன்னர்களும் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்தனர். வீரமிக்க நெடுஞ் செழியன் ஒரு பெரும்படையைத் திரட்டி, அதற்குத் தானே தலைமையேற்று, தஞ்சை மாவட்டத்திலுள்ள தலையாலங் கானம் என்னுமிடத்தில் எதிரிகள் அனைவரையும் அடிபணியச் செய்தார். எனவே இவர் 'தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன்' எனப் பெயர் பெற்றார். இவரது புகழைப்

'புறநானூறு', 'அகநானூறு', 'குறுந்தொகை', 'நற்றிணை' முதலிய நூல்கள் தெரிவிக்கின்றன.

நெடுஞ்செழியன் சிறந்த இந்து சமயப் பற்றுள்ளவர். இவர் புலவர்களுக்குப் பேராதரவு அளித்தார். இவர் மதுரையிலிருந்த கடைச் சங்கத்திற்கு உயிர்நாடியாக விளங்கினார். கல்லாடனார், சாத்தனார், பரணர், மாங்குடி மருதனார், நக்கீரர் முதலிய புலவர்களை ஆதரித்தார். இவரது ஆட்சி கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் இருந்ததாகக் கருதப்படுகிறது. கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் பாண்டியப் பேரரசு தனது செல்வாக்கை இழக்கத் தொடங்கியது.

## பண்டைத் தமிழர் நாகரிகம்

பண்டைத் தமிழ் மக்களின் வரலாற்றிற்கு ஆதாரமாக விளங்குவது சங்க இலக்கியமே. தமிழகத்து மக்களில் கிட்டத் தட்ட அனைவரும் திராவிட இனத்தைச் சேர்ந்தவர்களேயாவர். சிந்துவெளி நாகரிக காலத்திற்கு நீண்ட நாள்களுக்கு முன்னரே தமிழினம் பண்பட்டதாக இருந்தது.

பண்டைத் தமிழர் தாம் வாழ்ந்துவந்த நிலப் பகுதிகளைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகை இயற்கைப் பிரிவுகளாக அல்லது திணைகளாக வகுத்தனர். மக்கள் வாழ்க்கை நிலை அவரவர் உறைவிடத்திற்கேற்ப அமைந்திருந்தது. காற்றோட்டமுள்ள வீடுகளை அவர்கள் அமைத்துக் கொண்டிருந்தனர்; செல்வந்தர்கள் தட்பவெப்ப நிலைக்கேற்ப தனித்தனி வீடுகளை அமைத்துக் கொண்டிருந்தனர். உணவுப் பொருள்களும் மக்களின் வசதிக்கேற்ப இருந்தது. செல்வந்தர்கள் சோறும், பாலும், நெய்யும், காய்களும், கனிகளும் உட்கொண்டனர். வசதியற்றோர் அரிசி நொய் உணவும் கீரைக்கறியும் உண்டனர். பிற் காலத்தில் சமணர், பௌத்தர் செல்வாக்கினால் புலால் மறுக்கும் முயற்சி தோன்றியது. தமிழ் மக்கள் விருந்தோம்பு வதில் சிறப்புற்றிருந்தனர். மகளிர் நிலைமை மிகவும் உயர்வு

பெற்றிருந்தது. கணவரைத் தெய்வமென வழிபடும் உயர்ந்த பண்பும் பெண்களிடமிருந்தது. ஆண்களும் பெண்களும் எளிமையான, தட்பவெப்ப நிலைக்கேற்ற ஆடைகளை அணிந்தனர்.

தமிழர்கள் கடல்கடந்து வாணிகம் செய்தனர். சங்க நூல்களும் ஸ்ட்ராபோ, பிளினி, தாலமி என்ற உரோமானிய ஆசிரியர்களின் குறிப்புகளும் இதனை விளக்குகின்றன. பண்டைத் தமிழகம் ரோம் நாட்டுடன் பெருமளவில் வாணிகம் செய்ததாகத் தெரிகிறது. தேங்காய், மிளகு, தேக்கு, தந்தம், முத்து, சங்கு, சந்தனம், பருத்தி ஆடை முதலியன ஏற்றுமதி செய்யப்பட்டன. ஈயம், கண்ணாடி, மது, குதிரைகள் போன்றவை இறக்குமதி செய்யப்பட்டன.

இளைஞர்களுக்குக் கல்விப் பயிற்சி அளிக்கப்பட்டது. இன்னிசை, நடனம், நாடகம் முதலிய நுண்கலைகள் பெரிதும் போற்றப்பட்டன. இக்கலைகளை வளர்ப்பதில் 'பாணர்கள்' பெரும் பங்கேற்றனர். நுண்கலைகள் அனைத்தும் கடவுள் வழிபாட்டிற்குப் பயன்பட்டன. இந்திரன் விழா, முருகன் விழா முதலியன கொண்டாடப்பட்டன. பிற்காலத்தில் கடவுளுக்குக் கற்கோயில்களும் கட்டப்பட்டன.

பண்டைத் தமிழகத்தில் முடியாட்சியே நடைபெற்றது. அரசுரிமை மரபு வழியாகவே வந்தது. அரசருக்கு உதவியாக ஐம்பெருங்குழு, எண்பேராயம் என்ற குழுக்கள் இருந்தன. நீதி வழங்கும் சபைகள் மன்றம், அவையம் அல்லது பொதியில் என்ற பெயர்களுடன் விளங்கின. இச்சபையில் கல்வி, அறிவு, ஒழுக்கங்களில் சிறந்த முதியோர் வீற்றிருந்து வழக்குகளைத் தீர்த்து வைத்தனர். குற்றங்களுக்குத் தண்டனை கடுமையானதாக இல்லை.

திறமையான நிர்வாகத்திற்கு அரசு மண்டலம், வளநாடு, நாடு, கோட்டம் எனப் பிரிக்கப்பட்டிருந்தது. கிராமங்களில் சுயாட்சி நடைபெற்றது. கல்வி, சுகாதாரம், குளங்கள், ஏரிகள் பராமரிப்பு, சாலைகள் பராமரிப்பு போன்ற கிராம நலன்களைக் கவனிக்க 'ஊர்ச்சபை' என்னும் அமைப்பு

இருந்தது. இவ்வமைப்பே வரி வசூலிக்கும் பொறுப்பையும் ஏற்றிருந்தது.

பொதுவாக, அரசர்கள் போர்வேட்கையுடையவர்களாகவே இருந்தனர். அவர்கள் தம் கடமைகளைப் பெரிதும் மதித்தனர். நெறிதவறாத நீதி வழங்குதலும், மக்களைப் பாதுகாப்பதும் அவர்கள் கடமைகளாகக் கருதினர். அரசர்கள் மிகச்சிறந்த அறிவும் ஆற்றலும் உடையவர்களாக விளங்கினர். அவர்கள் கல்வியைப் போற்றினர்; கவிஞர்களுடன் நெருங்கிப் பழகினர். கவிஞர்கள் அரசர்களுக்குத் துணைவர்களாகவும் தூதுவர்களாகவும் பணியாற்றினர். அரசர்கள், 'புலவர் கழகம்' தோற்றுவித்துத் தமிழ்மொழியை வளர்த்தனர். மதுரையில் நிறுவுப்பட்ட மூன்றாம் சங்கத்தில் நக்கீரர், இறையனார், கபிலர், சாத்தனார் போன்ற சிறந்த புலவர்கள் இருந்தனர். இச்சங்கத்தில் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை பதினெண் கீழ்க்கணக்கு ஆகிய நூல்கள் தோன்றின. மற்றும் கடைச்சங்க கால முடிவில் ஐம்பெருங் காப்பியங்களும் தோன்றின. இந்நூல்கள் பண்டைத் தமிழரின் நாகரிகத்தையும் பண்பாட்டையும் விளக்குகின்றன.

## பயிற்சிகள்

### I. விரிவான விடை எழுதுக

1. கரிகாற் சோழரின் சிறப்பினை விளக்குக.
2. சேரன் செங்குட்டுவனது சிறப்பு யாது?
3. பாண்டியன் நெடுஞ்செழியனின் பெருமையை எழுதுக.
4. பண்டைத் தமிழ் மக்கள் பண்பாட்டை விவரிக்கவும்.

### II. சுருக்கமான விடை எழுதுக

1. மூவேந்தர்களின் தலைநகரங்கள் யாவை?
2. மூவேந்தர்களின் துறைமுகப்பட்டினங்கள் யாவை?
3. இளங்கோவடிகள் எழுதிய நூல் எது?
4. மூவேந்தரின் கொடிகள் யாவை?
5. செங்குட்டுவன் காலத்திய இலங்கை மன்னர் யார்?

III. A பகுதியில் உள்ளவற்றை B பகுதியில் உள்ளவற்றில் பொருத்த மானவற்றுடன் இணைக்கவும் :

| | A | B | |
|---|---|---|---|
| (அ) 1. | பூம்புகார் | பாண்டியர் துறைமுகம் | ( ) |
| 2. | வஞ்சிமாநகர் | சோழர் துறைமுகம் | ( ) |
| 3. | கொற்கை | பாண்டியர் தலைநகர் | ( ) |
| 4. | முசிறி | சோழர் தலைநகர் | ( ) |
| 5. | உறையூர் | சேரர் தலைநகர் | ( ) |
| | | சேரர் துறைமுகம். | ( ) |

| | A | B | |
|---|---|---|---|
| (ஆ) 1. | உருத்திரங்கண்ணனார் | இலங்கை மன்னர் | ( ) |
| 2. | நெடுஞ்செழியன் | பட்டினப்பாலை ஆசிரியர் | ( ) |
| 3. | செங்குட்டுவன் | சேர மன்னர் | ( ) |
| 4. | இளங்கோவடிகள் | பாண்டிய மன்னர் | ( ) |
| 5. | முடத்தாமக் கண்ணியார் | சோழ மன்னர் | ( ) |
| 6. | கயவாகு | சிலப்பதிகார ஆசிரியர் | ( ) |
| | | பொருநராற்றுப்படை ஆசிரியர் | ( ) |

IV. நீங்களே செய்யுங்கள்

1. தமிழகத்தின் படத்தில் சேர, சோழ, பாண்டிய நாடு களையும் அவற்றின் தலைநகரங்கள், துறைமுகங்கள் ஆகியவற்றையும் குறிப்பிடுக.
2. மூவேந்தர் கொடிகளின் படங்களை வரைக.

# 8. குஷாணரும் சாதவாகனரும்

## (அ)குஷாணர்கள் (கி. பி. முதல் இரண்டு நூற்றாண்டுகள்)

இந்திய கலாசார வரலாற்றில் குஷாணர் காலம் சிறப்பு மிக்கதாகும். அக்காலத்தில் வளர்ச்சி மிக்கதொரு கிறித்துவச் சமயத்துடன் புத்த சமயம் செழிப்புடன் விளங்கியது. மௌரியர் ஆட்சிக்குப்பின் குஷாணர் காலத்தில் நமது நாடு இதர உலக

நாடுகளுடன் தொடர்பு கொண்டிருந்தது. குஷாணர் காலம் குப்தர் காலத்திற்கு முன்னோடியாக அமைந்தது. இக்காலத்தில் மதம், இலக்கியம், சிற்பம் ஆகிய துறைகளில் பெரும் மாறுதல்கள் ஏற்பட்டன. மகாயான புத்தமதமும் காந்தாரக் கலையும் இக்காலத்தில் ஏற்பட்ட முக்கிய மாறுபாடுகளாகும்.

குஷாணர்கள் சீன எல்லைப் பகுதியில் வாழ்ந்து வந்த யூயெச்சி மரபினரின் ஒரு கிளையாவர். இவர்கள் நாடோடி வாழ்க்கை நடத்தி வந்தனர். இவர்கள் மங்கோலியருடன் போரிட்டுத்தோற்றனர். தோற்றவர்கள் ஆசியாவின் மேற்குப் பகுதிகளில் குடியேறினர். பின்னர் இந்தியாவின் வடமேற்குக் கணவாய்களின் வழியாக நகர்ந்து இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் குடியேறினர். குடியேறிய பகுதிகளில் சிற்றரசுகளை ஏற்படுத்திக்கொண்டனர்.

குஷாணர்களின் முதல் அரசர் முதலாம் காட்பீஸஸ் ஆவார். இவர் பிரிந்திருந்த சிற்றரசுகளை ஒன்றுபடுத்தினார். மேலும் தமது அதிகாரத்தை ஆப்கானிஸ்தானத்தின் மீதும் பரப்பினார். முதலாம் காட்பீஸசுக்குப்பின் அவரது மகன் இரண்டாம் காட்பீஸஸ் ஆட்சிக்கு வந்தார். இவர் இந்தியாவின் மீது ஆதிக்கம் செலுத்தினார். பஞ்சாப் மற்றும் கங்கைப் பள்ளத் தாக்கின் ஒரு பகுதி ஆகியவை இவருடைய அரசின் ஒரு பகுதி யாக விளங்கின. இவ்வரசர்களது ஆட்சிக்கு அவர்களால் வெளியிடப்பட்ட நாணயங்கள் சான்றுகளாக விளங்குகின்றன.

**கனிஷ்கர்** *(கி. பி. 78—120)*

குஷாணர்களில் தலைசிறந்த மன்னர் கனிஷ்கர் ஆவார். சாக சகாப்தத்தை கி. பி. 78- ல் துவக்கி வைத்தார். எனவே, இவர் கி. பி. 78-ல் அரியணை ஏறினார் எனக் கருதப் படுகின்றது.

**கனிஷ்கரின் வெற்றிகள்**

கனிஷ்கர் ஆட்சிக்கு வந்தபோது இவரது அரசில் ஆப்கானிஸ்தானம், சிந்து மாகாணத்தின் பெரும் பகுதி, பார்த்தியாவில் சில பகுதிகள் மற்றும் பஞ்சாப் ஆகியவை

அடங்கியிருந்தன: தமது படைவலிமையைக் கொண்டு காஷ்மீரை இணைத்துக்கொண்டார். அங்குக் கனிஷ்கபுரம் என்ற




படம் 16. கனிஷ்கர் பேரரசு

நகரை உருவாக்கினார். மகத நாட்டுடன் போரிட்டுப் பாடலி புத்திரத்தைக் கைப்பற்றினார். பாடலிபுத்திரத்திலிருந்து

அஷ்வகோஷர் என்ற பௌத்த அறிஞரையும் அழைத்துச் சென்றார். சாகர்களுடன் போரிட்டு மாளவத்தின் ஒரு பகுதியை வென்றார். இவர் சீனப் பேரரசுகளுடன் போரிட்டு காஷ்கர், கோட்டான், யார்க்கண்டு ஆகிய மாகாணங்களைப் பெற்றார். இவரது ஆட்சி மேற்கில் காஸ்பியன் கடல் முதல் கிழக்கில் யமுனை, கங்கை நதிகள் வரையிலும், வடக்கில் மத்திய ஆசியா விலிருந்து தெற்கில் விந்தியமலை வரையிலும் பரவியிருந்தது. இப்பேரரசின் தலைநகர் புருஷபுரம். தற்போது இந்நகர் பெஷாவர் என அழைக்கப்படுகிறது. இத்தலைநகர் இவரது பேரரசின் மத்தியில் அமைந்திருந்தது.

மகாயான புத்த சமயம்

ஆரம்ப காலத்தில் கனிஷ்கர் பல தெய்வங்களை வழி பட்டார். பின்னர் பழைய மத நம்பிக்கையைக் கைவிட்டு பௌத்த மதத்தைப் பின்பற்றினார். அசோகரைப் போலவே பௌத்த மதத்துக்குப் பல தொண்டுகள் ஆற்றினார். பழைய பௌத்த மடங்களைப் புதுப்பித்தார்; புதிய மடங்களைக் கட்டினார்; புத்தர் நினைவாக ஸ்தூபிகளையும் அமைத்தார்; பௌத்த மகாசபைகளைக் கூட்டினார். இவர் காலத்தில் பௌத்தமதம் இரண்டு பிரிவுகளாயிற்று.

அசோகர் காலத்தில் புத்தர் ஓர் உயர்ந்த மனிதராகக் (முனிவராக) கருதப்பட்டார். இம்முறை 'பழைய முறை' அல்லது ஹீனயானம் எனப்பட்டது. கனிஷ்கர் காலத்தில் புத்தர் கடவுளாகக் கருதப்பட்டார். புத்தருக்குக் கோயில்கள் கட்டி உருவ வழிபாடு நடத்தப்பட்டது. போதி சத்துவர்களும் வழி பாட்டிற்குரியவர்களானார்கள். திருவிழாக்கள் நடத்தப்பட்டன. இம்முறை 'புதியமுறை' அல்லது மகாயானம் எனப்பட்டது. இப்புதியமுறையை சீனா, ஜப்பான், மத்திய ஆசியா ஆகிய நாடுகளில் பரப்பினார். இப்புதிய வழிபாட்டு நூல்கள் வட மொழியில் எழுதப்பட்டன. இப்புதிய முறை இந்து சமயத் தோடு ஒத்திருந்தது. எனவே பௌத்த மத வளர்ச்சி தடைப் பட்டது. மகாயான புத்த சமயத்தை வகுத்தவர்கள் அஷ்வ கோஷர், நாகார்ஜுனர் என்ற புத்த சமய அறிஞர்களாவர்.

கலையும் இலக்கியமும்

கனிஷ்கர் ஒரு சிறந்த அறிஞர் ஆவார். இவர் கற்றவர்களைப் போற்றினார். பல பேரறிஞர்களைத் தமது அவையில் அமர்த்திக்கொண்டார். புத்த சரித்திர நூலாசிரியர் அஷ்வகோஷர் கனிஷ்கரது அவையில் இருந்தவர்களில் மிகச் சிறந்தவர் ஆவார். 'மகாவிபாஷா' என்னும் வேதாந்த நூலை இயற்றிய வசுமித்திரர், 'மத்தியமிக சூத்ரா' என்னும் நூலை இயற்றிய மகாயான தத்துவஞானி நாகார்ஜுனர், மருத்துவ நூலாசிரியர் சரகர், இரண சிகிச்சை நூலாசிரியர் சுசிருதர் ஆகியோரும் கனிஷ்கரது அவையில் இருந்த அறிஞர்கள் ஆவர்.

கனிஷ்கர் ஒரு கட்டடப் பிரியர். புருஷபுரம், மதுரா, தட்சசீலம், கனிஷ்கபுரம் ஆகிய நகரங்களில் உள்ள கட்டடங்கள் இதற்கு எடுத்துக்காட்டுகளாக உள்ளன. மேற்கு ஆசிய நாடுகளுடன் அடிக்கடி ஏற்பட்ட தொடர்பால் ஒரு புதிய கட்டடக்கலை உருவாயிற்று. முற்காலத்தில் காபூல் பள்ளத்தாக்கிற்குக் காந்தாரம் என்று பெயர். அங்கு கிரேக்கர்கள் குடியேறி இருந்தனர். அவர்களது கட்டடக்கலையும் இந்தியக் கட்டடக்கலையும் இணைந்ததே இப்புதிய கலையாகும். கிரேக்க பாணியில் இந்திய (புத்த) உருவங்கள் அமைக்கப்பட்டன. இதனைக் காந்தாரக் கலை என்று வழங்கினர். இக்கலை பஞ்சாபின் வடமேற்குப் பகுதி, காஷ்மீரம் மட்டுமன்றி ஆப்கானிஸ்தானத்திலும் கனிஷ்கர் காலத்தில் புகழ் பெற்றிருந்தது.

வாணிகம்

கனிஷ்கரது ஆட்சிக் காலத்தில் வாணிகம் சிறப்புற நடைபெற்றது. உள்நாட்டு வாணிகமும் அயல் நாட்டு வாணிகமும் சிறப்புற்றிருந்தது. அயல்நாட்டு வாணிகம் முக்கியமாக ரோமப் பேரரசுடன் கடல் வழியாகவும் தரைவழியாகவும் நடைபெற்றது.

குஷாணர்களின் வீழ்ச்சி

கனிஷ்கரை அடுத்து, ஹுவிஷ்கர், வாசுதேவர் ஆகியோர் ஆண்டனர். வாசுதேவர் காலத்தில் குஷாணர்

அரசு வீழ்ச்சியடையத் தொடங்கியது. மேற்கு ஆசியாவில் ஸஸ்ஸேனிய மன்னர்கள் குஷாணர்களைத் தோற்கடித்தனர். அதனால் இந்தியாவில் குஷாணர் ஆட்சி முடிவடைந்தது.

## (ஆ) சாதவாகனர்கள்-ஆந்திரர்கள் (கி.மு. 225-கி.பி. 220)

ஆந்திரர்கள் திராவிட இனத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் கிருஷ்ணா—கோதாவிரி ஆறுகளுக்கு இடைப்பட்ட தெலுங்குமொழி பேசும் பகுதியில் வாழ்ந்த பூர்வீகக் குடிகள் ஆவர். சாதவாகனர் அரசு வட இந்தியாவிற்கும் தென் இந்தியாவிற்கும் இடையில் தக்காணத்தில் அமைந்திருந்தது.

சாதவாகனர் மரபைத் தோற்றுவித்தவர் சிமுகர் என்பவர் ஆவார். இவர் கி.மு. 225-ல் அரசரானார். சிமுகர் பௌத்த சமணக் கோயில்களைக் கட்டினார். ஆந்திர இராஜ்யம் ஸ்ரீசாத கர்ணி என்ற மன்னரின்கீழ்ப் புகழ்பெற்று விளங்கியது. இவருடைய தலைநகரம் கோதாவரி நதிக் கரையில் உள்ள பிரதிஸ்தானம் அல்லது பைதான் ஆகும். இவர் காலத்தில் ஆந்திரப் பேரரசு ஆந்திரம், பீரார், மகாராஷ்டிரம், கிழக்கு மாளவம், குஜராத் ஆகிய பகுதிகளைக் கொண்டிருந்தது. ஆந்திரப் பேரரசின் வளர்ச்சியினால் ஆந்திரர்களுக்கும் மேற்கு இந்தியாவிலிருந்த சாகர்களுக்கும் அடிக்கடி போர் நடந்தது. சாகர்கள் ஒரு முறை சாதவாகனர்களைத் தோல்வியுறச் செய்தனர். ஆயினும் சாதவாகன அரசர் கௌதமி புத்திர சாதகர்ணி சாகர்களையும், பார்த்தியர்களையும், கிரேக்கர்களையும் வென்றார். மேலும் இவர் இம்மரபின் சிறந்த அரசராகத் திகழ்ந்தார். இவருக்குப்பின் ஆட்சிக்கு வந்த வசிஷ்ட புத்திரபுளுமாயி, ஸ்ரீயக்ஞ சாதகர்ணி முதலிய ஆந்திர அரசர்களின் காலத்தில் மொழி, கல்வி, கலை முதலியன சிறப்பான வளர்ச்சி பெற்றன.

சாதவாகனர்களுக்குப் பிறகு இட்சுவாகு வம்சம் தக்காணத்தை ஆள முற்பட்டது. கி.பி. நான்காம் நூற்றாண்டில் தென்னிந்தியாவில் பல்லவர்களின் ஆட்சி செழித்தோங்கியது. வீழ்ச்சியடைந்து கொண்டிருந்த சாதவாகனர் வம்சம் இவ்வாறு அழிவுற்றது.

## பயிற்சிகள்

**I விரிவான விடையளிக்கவும்**

1. கனிஷ்கர் தலைசிறந்த அரசர் எனப்படுவது ஏன் ?
2. ஹீனயானம், மகாயானம், புத்தமதப் பிரிவுகளில் உள்ள வேற்றுமைகள் யாவை ?
3. காந்தாரக் கலையை விளக்குக.
4. ஆந்திரர்பற்றிக் குறிப்பு வரைக.

**II. சுருக்கமான விடையளிக்கவும்**

1. கனிஷ்கரது தலைநகர் எது ?
2. கனிஷ்கரது அவையில் இருந்த அறிஞர்களில் இருவரைக் குறிப்பிடுக.
3. சாதவாகன மரபைத் தோற்றுவித்தவர் யார் ?
4. சாதவாகன மரபு அரசர்களில் இருவரைக் குறிப்பிடுக.

**III. காலி இடங்களை நிரப்புக**

1. குஷாணர்கள் ________ மரபினரின் ஒரு கிளையினர் ஆவர்.
2. கி. பி. ________-ல் துவங்கிய சாக சகாப்தத்தைத் தோற்றுவித்தவர் ________ ஆவார்.
3. கனிஷ்கர் ________ என்னும் நகரை நிறுவினார்.
4. ________ கலையின் கலப்பால் ஏற்பட்டதே காந்தாரக் கலையாகும்.
5. ________ பற்றிய நூலைச் சரகரும், ________ பற்றிய நூலைச் சுசிருதரும் எழுதினார்கள்.

**IV. நீங்களே செய்யுங்கள்**

1. இந்தியப் படத்தில் கனிஷ்கரது பேரரசையும், புருஷபுரம், காஷ்கர், யார்க்கண்டு, கோட்டான் ஆகியவற்றையும் குறிப்பிடுக.
2. குஷாணர் காலத்திய நாணயங்கள், கட்டடக்கலை, ஸ்தூபிகள் முதலியவற்றின் படங்களைச் சேகரித்து உனது படத் தொகுப்பு ஏட்டில் ஒட்டவும்.

# 9. குப்தப் பேரரசு

மௌரியர் ஆட்சியின் வீழ்ச்சிக்குப் பின்னர், அந்நிய வம்சத்தினர் வடமேற்கு இந்தியாவின் மீது படையெடுத்து வந்தனர். அவ்வாறு ஒரு வல்லரசை ஏற்படுத்தியவர்களில் குஷாணர்கள் முக்கியமானவர்கள். குஷாணர் ஆட்சியின் வீழ்ச்சிக்குப் பின்னர் வட இந்தியாவில் குழப்பம் ஏற்பட்டது. சிற்றரசர்களிடையே ஒற்றுமையின்மை காணப்பட்டது. மக்கள் நிலையான ஆட்சியின்றித் தவித்தனர். இக்குறைபாட்டினைத் தவிர்க்கும் வகையில் கி.பி. 4ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மகத நாட்டில் குப்த மரபினர் தோன்றினர். இம்மரபினர் சுமார் 200 ஆண்டுகள் ஆட்சிபுரிந்து இந்திய நாட்டு வரலாற்றிற்குப் பெரும்புகழ் அளித்தனர். மகத நாட்டின் ஒரு பகுதிக்குத் தலைவராக விளங்கிய ஸ்ரீகுப்தரே இம்மரபைத் தோற்றுவித்தவர் ஆவார். இம்மரபின் முக்கியமான பேரரசர்கள் முதலாம் சந்திர குப்தர், சமுத்திரகுப்தர், இரண்டாம் சந்திர குப்தர் ஆகிய மூவரே ஆவர். இவர்களது ஆட்சியைப்பற்றி அறிந்துகொள்ள உதவும் முக்கியமான சான்றுகள், குப்தர்கள் வெளியிட்ட நாணயங்களும், சீனப் பயணியான பாஹியானின் குறிப்புகளும், அலகாபாத் தூணில் காணப்படும் சமுத்திர குப்தரின் சேனாதிபதியான ஹரி சேனாவின் குறிப்பும் ஆகும்.

## முதலாம் சந்திரகுப்தர் (கி.பி. 320—330)

குப்த மரபின் முதல் முக்கிய அரசர் இவரே. இவர் கி.பி. 320-ல் அரியணை ஏறினார். இவர் செல்வாக்கு நிறைந்த லிச்சாவி வம்சத்து இளவரசியான குமாரதேவியை மணந்தார். அத்தொடர்பு தமது சிறிய நாட்டைப் பெருக்கிச் கொள்ளவும் ஆதிக்கத்தை வலுப்படுத்திக்கொள்ளவும் துணை நின்றது. மேலும் பாடலிபுத்திரம் இவரது வசமானது. இதுவே குப்தர்களின் தலைநகராகவும் ஆயிற்று. இவரது அரசு பீகாரின் தென்பகுதி, அலகாபாத், அயோத்தி ஆகிய பகுதிகளைக் கொண்டு விளங்கியது. இவரே முதன்முதலில் ‘மகா ராஜாதி ராஜன்’ எனத் தம்மைத்தாமே அழைத்துக் கொண்டார். இவர்

கி.பி. 320 முதற்கொண்டு 'குப்த சகாப்தம்' என்ற புதிய சகாப்தத்தைத் தொடங்கினார். இவரது ஆட்சி நெடுங்காலம் நீடிக்கவில்லை. கி.பி. 330-ல் இவர் மறைந்தார். இவரது மறைவிற்குப்பின் இவரது மகன் சமுத்திரகுப்தர் அரியணை ஏறினார்.

சமுத்திரகுப்தர் (கி.பி. 330—380)

சமுத்திரகுப்தர் குப்த வம்சத்தின் சிறந்த மன்னராவார். இவரது ஆட்சியைப்பற்றி இவரது சேனாதிபதியான அரிசேனர் குறிப்பிட்டுள்ளார். இது அலகாபாத்திலுள்ள அசோகரது நினைவுச் சின்னத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. மேலும் இவர் வெளியிட்ட நாணயங்களும் இவரைப்பற்றிய விவரங்களைத் தெரிவிக்கின்றன.

கொல்லாமை, சமாதானம் போன்ற கொள்கைகளைக் கடைப்பிடித்த அசோகருக்கு இவர் மாறானவர். போரையும் படையெடுப்பையும் இவர் பெரிதும் விரும்பினார். இவர் வட இந்தியாவில் கங்கைச் சமவெளிப் பகுதிகளை வென்று தமது ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்தார். மேலும் தக்காணத்தின் மீதும் தென்னிந்தியாவின்மீதும் படையெடுத்தார். இவர் கிழக்குக் கரையோரமாகத் தெற்கில் காஞ்சிநகர் வரை 'திக் விஜயம்' செய்து திரும்பினார். படையெடுப்புகளில் இவர் ஒரு முறைகூடத் தோல்வி கண்டதில்லை. தாம் அடைந்த வெற்றிகளின் அறிகுறியாக 'அஸ்வமேத யாகம்' ஒன்றைச் செய்தார். இவர் 'இந்திய நெப்போலியன்' என்று அழைக்கப்படுகிறார். தென்னிந்தியப் பகுதிகளைத் தம்முடைய பேரரசுடன் சேர்த்துக் கொள்ளவில்லை. இவர் ஒரு சிறந்த கவிவாணர்; இசை, ஓவியம், கணிதம் போன்ற கலைகளில் வல்லவர். இந்து மதத்தில் பற்று மிக்க இவர் பிற மதத்தினரையும் அன்புடன் நேசித்தார்.

இரண்டாம் சந்திரகுப்தர் (கி.பி. 380—415)

சமுத்திரகுப்தருக்குப்பின் அவரது மைந்தரான இரண்டாம் சந்திரகுப்தர் ஆட்சிக்கு வந்தார். தமது தந்தையைப் போலவே வீரமும் புகழும் பெற்றிருந்தமையினால் இவர், 'விக்கிரமாதித்தர்' (கதிரவனை ஒத்த வீரம் படைத்தவர்) என்ற சிறப்புப் பெயர் பெற்றார். இவர் சாகர்களைத் தோற்கடித்து

மாளவம், கூர்ச்சரம் ஆகிய நாடுகளைத் தமது அரசில் சேர்த்துக்கொண்டார். சாகர்களை வென்றதால் இவர் 'சாகாரி' என அழைக்கப்பட்டார். வன்மைவாய்ந்த வாகாட மன்னருக்குத்

படம் 17. குப்தப் பேரரசு

தமது மகளை மணம் செய்து வைத்துத் தக்காணத்தில் செல்வாக்குப் பெற்றார். இவர் உஜ்ஜயினியைத் தமது இரண்டாவது தலைநகராகக் கொண்டார்.

இவர் போரில் மட்டுமன்றிப் பல துறைகளிலும் திறமை மிக்கவர். கல்வியையும் கலையையும் போற்றி வளர்த்தார். இவரது அவையில் நவரத்தினங்கள் என்ற ஒன்பது பேரறிஞர்கள் இருந்தனர். காளிதாசர், தன்வந்திரி முதலானோர் நவரத்தினங்களில் சிலராவர். அறிவாற்றல் மிக்க பேரறிஞர்களைப் போற்றிய சிறப்பு இவரைச் சாரும்.

பாஹியான் : இரண்டாம் சந்திரகுப்தர் காலத்தில் பாஹியான் என்ற சீனப் பயணி இந்தியாவிற்கு வந்தார். இவர் பௌத்தர்களின் புண்ணிய நாடான இந்தியாவைக் காணவும், புத்த ஸ்தலங்களைத் தரிசிக்கவும், புத்தமத நூல்களைத் திரட்டவும், நம் நாட்டிற்கு வந்தார். இவர் பாடலிபுத்திரத்தில் பல ஆண்டுகள் தங்கியிருந்தார். தாம் கண்டவற்றையும் கேட்டவற்றையும்பற்றிப் பல குறிப்புகள் தயாரித்துள்ளார். இக் குறிப்புகள் குப்தர் கால அரசியல், சமூக, பொருளாதார நிலைமைகளை அறிய உதவுகின்றன. குப்தர்கள் ஆட்சி பற்றி இவரது கருத்துகளாவன : 'மக்கள் மகிழ்ச்சியுடன் அமைதியாக வாழ்ந்தனர். கடுமையான தண்டனைகள் இல்லை. கொலைத் தண்டனை விதிக்கப்படவில்லை. இந்து சமயம் வளர்ச்சியடைந்திருந்தது. எனினும், பௌத்த மதக் கொள்கைகள் பெரும்பாலும் மக்களால் கடைப்பிடிக்கப்பட்டன. கொல்லாமையும் மது அருந்தாமையும் போற்றப்பட்டன. நல்லொழுக்கத்துடன் மக்கள் வாழ்க்கை நடத்தினர்'.

## குப்தப் பேரரசின் வீழ்ச்சி

இரண்டாம் சந்திர குப்தருக்குப் பின்னர் அவரது மைந்தரான குமார குப்தர் அரியணை ஏறினார். குமார குப்தருக்குப்பின் ஸ்கந்த குப்தர் ஆட்சிக்கு வந்தார். அவரது காலத்தில் மத்திய ஆசியாவிலிருந்து வந்த ஹூணர்கள் என்ற முரட்டுக் கூட்டத்தினர் படையெடுத்தனர். அவர்களை ஆரம்பத்தில் ஸ்கந்த குப்தர் விரட்டியடித்தார். ஸ்கந்த குப்தருக்குப் பின் அரியணை ஏறிய அரசர்கள் பலமற்றவர்கள். ஹூணர்கள் தொடர்ந்து படையெடுத்து வந்தனர். இதனால் குப்தப் பேரரசு பல சிறு பகுதிகளாகப் பிரிந்தது.

குப்தர்களின் பொற்காலம்

குப்தர்கள் காலத்தில் இலக்கியம், அறிவியல், கலை முதலிய எல்லாத் துறைகளும் மிகச் சிறந்த நிலையில் இருந்தன. இந்திய கலாச்சாரத்தில் ஒருமைப்பாடு ஏற்பட்டது. குப்தர்கள் நாட்டில் அமைதியையும் கட்டுப்பாட்டையும் ஏற்படுத்தியமையால் செல்வ வளங்கள் செழித்தோங்கின. உள்நாட்டு வாணிகமும் அயல்நாட்டு வாணிகமும் சிறப்புற்றன. இக்காலம் 'குப்தர்களின் பொற்காலம்' என வரலாற்றில் குறிப்பிடப்படுகிறது. அவற்றை ஈண்டு காண்போமாக.

நிர்வாகம் : குப்தர்களின் சிறந்த ஆட்சி பேரரசில் ஒற்றுமையை ஏற்படுத்தியது. அவர்களது ஆட்சி முறை திறமையானதாகவும் பாராட்டக்கூடியதாகவும் அமைந்திருந்தது. அவர்களது ஆட்சிமுறை ஏறத்தாழ மௌரியர் ஆட்சி முறையை ஒத்திருந்தது. நிலவரியே அரசுக்கு முக்கிய வருமானமாக இருந்தது. அது உற்பத்தியில் ஆறில் ஒரு பங்காக இருந்தது. சுங்க வரியும் வசூலிக்கப்பட்டது. மக்களிடையே அமைதியும் ஒழுங்கும் நிலை பெற்றிருந்தன. மக்கள் சட்டத்தை மதித்து நடந்தனர். கொடுந்தண்டனைகள் ஏதும் அவர்களுக்கு விதிக்கப்படவில்லை. கொலைத் தண்டனையும் இல்லை.

சமூக பொருளாதார நிலை : குப்தர் காலத்தில் சாதி முறைகள் இருந்தன. பல்வேறு சாதியினரும் ஒற்றுமையுடன் வாழ்ந்தனர். பெண்கள் பெரிதும் மதிக்கப்பட்டனர். பொதுவாக மக்களின் வாழ்க்கைத் தரம் பெரிதும் உயர்ந்திருந்தது. நாட்டில் அமைதி நிலவியதால் பொருளாதார நிலை செழித்தோங்கியது. உள்நாட்டு வாணிகம் பெருகியது. பர்மா, ஜாவா, கம்போடியா ஆகிய தென்கிழக்கு ஆசிய நாடுகளுடனும், ரோம் மற்றும் மத்திய ஆசியாவுடனும் அயல்நாட்டு வாணிகம் சிறப்புற நடைபெற்றது. மேற்குக் கடற்கரையில் உள்ள பாருகச்சம், சோப்ரா முதலிய துறைமுகங்கள் கடல் வாணிகத்திற்கு உதவின.

சமயம் : குப்தர் காலத்தில் இந்து சமயம் சிறந்து விளங்கியது. குப்தர்கள், விஷ்ணு பக்தர்களாயினும் சைவமும்

பௌத்தமும் செழித்து விளங்கின. வேத வேள்விகள் குறைந்தன. பலியிடல் தவிர்க்கப்பட்டது. 'மகாபாரதம்', 'இராமாயணம்' போன்ற பழைய நூல்கள் மாற்றங்களுடன் மீண்டும் எழுதப்பட்டன. புராண மற்றும் இதிகாசக் கடவுளர் கள் பெரிதும் போற்றப்பட்டனர். விஷ்ணு, சிவன், கார்த்திகேயன், இலக்குமி, சக்தி முதலிய தெய்வங்களின் உருவ வழிபாடுகள் சிறப்படைந்தன. குப்தர்கள் காலத்தில் இந்து மதம் மறுமலர்ச்சி பெற்று விளங்கியபோதிலும் பிற மதங்களும் கௌரவிக்கப்பட்டன.



படம் 18. டில்லி இரும்புத்தூண்

கலையும் சிற்பமும் : இந்தியக் கலை, சிற்பம் மற்றும் குகை ஓவியங்கள் குப்தர்காலத்தில் மேம்பாடடைந்தன. குப்தர்கள் கோயில்களைக் கட்டுவதற்குச் செங்கற்களைப் பயன்படுத்தினர். ஜான்சிக்கு அருகில் உள்ள தசாவதாரக் கோயில், பூமராவில் உள்ள சிவன் கோயில் முதலியன குப்தர் காலக் கட்டடக்கலைக்குச் சான்றுகளாக விளங்குகின்றன. செம்பு, வெண்கலம் ஆகிய உலோகங்களால் நுண்ணிய சிற்ப வேலைப்பாடுகள் அடங்கிய விக்கிரகங்கள் செய்யப்பட்டன. மேலும் உலோகங்களின் பயனை நன்கு அறிந்திருந்தனர். டில்லியில் உள்ள இன்றும் துருப்பிடிக்காத இரும்புத் தூணும், நாளந்தாவில் உள்ள புத்தரின் வெண்கலச் சிலையும் குப்தர்கால உலோக வேலைப்பாட்டிற்குச் சிறந்த எடுத்துக்காட்டு

களாகும். ஓவியக்கலையும் குப்த அரசர்களால் பெரிதும் போற்றப்பட்டது. இதற்கு எடுத்துக்காட்டாக அஜந்தா குகைச் சித்திரங்கள் விளங்குகின்றன. இக்குகைச் சித்திரங்களில் சில புத்தரின் வாழ்க்கையைச் சித்திரிக்கின்றன.

**இலக்கியமும் விஞ்ஞானமும்:** குப்த மன்னர்கள் பேரறிஞர் பலரைப் போற்றி வந்தனர். குப்தர்கள் காலத்தில் வடமொழி உயர்நிலை அடைந்திருந்தது. குப்த மன்னர் அவையில் இருந்த நவரத்தினங்களில் தலைசிறந்தவர் கவியரசர் காளிதாசர் ஆவார். 'சாகுந்தலம்', 'மேகதூதம்', 'குமார சம்பவம்', 'விக்கிரம ஊர்வசியம்', 'ருது சம்ஹாரம்,' 'மாளவிகாக்னி மித்திரம்,' 'ரகுவம்சம்' முதலிய நூல்களைக் காளிதாசர் இயற்றியுள்ளார். பஞ்சதந்திரக் கதைகள் புதிய மெருகுடன் தோன்றின. விசாகதத்தர் 'முத்திராராட்சசம்' என்ற நூலை எழுதினார். அமரசிம்மர் வடமொழியில் 'அமரகோசம்' என்ற அகராதியைத் தொகுத்தார். இவர்கள் இயற்றிய நூல்கள் தவிர 'வாயு புராணம்,' 'மத்ஸ்ய புராணம்.' 'விஷ்ணு புராணம்' முதலிய நூல்களும் குப்தர் காலத்தில் எழுதப்பட்டன.



படம் 19. அஜந்தா குகை ஓவியங்கள்

விஞ்ஞானம், மருத்துவம், கணிதம் ஆகிய கலைகளும் குப்தர் காலத்தில் சிறந்து விளங்கின. ஆரியபட்டர் என்னும் அறிஞர், பூமி தன்னைத் தானே சுற்றும் உண்மையை எடுத்துரைத்தார். பூஜ்யத்தின் தத்துவம், தசாம்சக் கணக்கு முறைகள் இந்திய அறிஞர்களால் பயன்படுத்தப்பட்டன.

## பயிற்சிகள்

**I. விரிவான விடையளிக்கவும்**

1. சமுத்திர குப்தருடைய வெற்றிகளை விளக்குக.
2. சாகாரி என்பவர் யார்? ஏன் அவர் அவ்வாறு அழைக்கப் பட்டார்?
3. பாஹியான் இந்தியாவிற்கு ஏன் வந்தார்? அவரது குறிப்பு களிலிருந்து நாம் அறிவன யாவை?
4. குப்தர் பொற்காலத்தை விவரி.

**II. சுருக்கமான விடையளிக்கவும்**

1. குப்த மரபைத் தோற்றுவித்தவர் யார்?
2. குப்த அரசர்களில் மிகச் சிறந்த மூவர் யாவர்?
3. 'குப்த சகாப்தம்' எந்த ஆண்டில் தொடங்கப்பட்டது?
4. 'இந்திய நெப்போலியன்' என்று பெயர் பெற்ற குப்த மன்னர் யார்?
5. நவரத்தினங்களில் தலை சிறந்தவர் யார்?
6. குப்தப் பேரரசின் இரண்டாம் தலைநகர் எது?
7. குப்தர் காலத்தில் எழுதப்பட்ட தலை சிறந்த நூல்களில் நான்கினைக் குறிப்பிடுக.
8. குப்தர் காலத்தில் இந்தியாவிற்கு வந்த சீனப் பயணி யார்?
9. ஹூணர்கள் யாவர்?

**III. ஆசிரியர்களை அவர்கள் எழுதிய நூல்களோடு இணைக்கவும்**

| | | | |
|---|---|---|---|
| 1. | காளிதாசர் | 'முத்திரா ராட்சசம்' | (   ) |
| 2. | சூத்திரகர் | 'மிருச்சகடிகம்' | (   ) |
| 3. | அமரசிம்மர் | 'குமாரசம்பவம்' | (   ) |
| 4. | விசாகதத்தர் | 'அமரகோசம்' | (   ) |
| | | பஞ்சதந்திரம் | (   ) |

**IV. நீங்களே செய்யுங்கள்**

1. இந்தியா வரைபடத்தில் குப்தப் பேரரசையும், சமுத்திர குப்தர் திக்விஜயம் செய்த வழியையும், பாடலிபுத்திரம், பிரயாகை, உஜ்ஜயினி, நாளந்தா, மாளவம், கூர்ச்சரம் ஆகியவற்றையும் குறிப்பிடுக.
2. 'சாகுந்தலம்' நாடகத்தில் சில காட்சிகளை நடிக்கவும்

# 10. ஹர்ஷர்

குப்தர்களின் பேரரசு ஏறக்குறைய இருநூறு ஆண்டுகள் நீடித்திருந்தது. ஹூணர்கள் இவர்களுடைய ஆட்சியை வீழ்ச்சியடையச் செய்தனர். எனினும் ஹூணர்களால் நிலையானதோர் அரசை நம் நாட்டில் ஏற்படுத்த இயலவில்லை. ஹூண அரசரான தோரமானர் வட இந்தியாவிலும் மத்திய இந்தியாவிலும் திறமையான அரசை ஏற்படுத்த முயன்றார். இவரது மைந்தர் மிகிரகுலர் தமது தந்தையைப் போன்று நிலையான அரசை ஏற்படுத்த முயன்றார். இவரது கொடுமையான முப்பது ஆண்டுகால ஆட்சி மக்களிடையே வெறுப்பை ஏற்படுத்தியது. நாட்டு மக்கள் அனைவரும் இவருக்கு எதிராகக் கொதித்து எழுந்தனர். இதன் விளைவாக நாடு சிதறுண்டது. அவ்வாறு சிதறுண்ட அரசுகளில் ஒன்றே வர்த்தனர் ஆட்சி செய்த தானேஸ்வர அரசாகும். இச்சிற்றரசு நாளடைவில் மிகப் பெரிய பேரரசாக வளர்ந்து இந்திய வரலாற்றில் கி. பி. ஏழாவது நூற்றாண்டில் சிறப்புற்று விளங்கியது.

## ஹர்ஷர், தானேஸ்வரம், கன்னோசி மன்னராதல்

கி. பி. ஏழாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் பிரபாகரவர்த்தனர் தானேஸ்வரத்தைத் தலைநகராகக் கொண்ட ஒரு சிற்றரசைத் தோற்றுவித்தார். இவர் போரிடுவதில் மிகத் திறமையானவர். ஹூணர்களை எதிர்த்து வெற்றி பெற்றார். இந்தியாவில் ஹூணர்களின் ஆதிக்கம் பரவாமல் தடுத்தவர் இவரே. கி.பி.605-ல் இவருடைய மரணத்திற்குப்பின் இவரது மூத்த மகன் இராஜ்யவர்த்தனர் அரசரானார்.

இராஜ்ய வர்த்தனரின் தங்கை இராஜ்யஸ்ரீ கன்னோசி மன்னர் கிருக வர்மனை மணந்தார். மாளவ மன்னருடன் நடைபெற்ற போரில் கிருகவர்மன் கொல்லப்பட்டார். இராஜ்யஸ்ரீயும் கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டார். இச்செய்திகளைக் கேள்விப்பட்ட இராஜ்ய வர்த்தனர் மாளவ மன்

னரைப் பழிவாங்கப் படைகளுடன் சென்றார்; வெற்றியும் பெற்றார்.[6] ஆனால் இவர் நாடு திரும்பவில்லை. மாளவ மன்னரின் நண்பரும், வங்காள மன்னருமான சசாங்களால் முறையற்ற வழியில் கொலை செய்யப்பட்டார். இராஜ்யஸ்ரீ சிறையிலிருந்து தப்பி விந்திய மலைக்குச் சென்றுவிட்டார். இத்தகைய துன்பம் சூழ்ந்த நிலையில் இராஜ்ய வர்த்தனருக்குக் குழந்தை இல்லாததால் ஹர்ஷர் தானேஸ்வர அரசரானார்.

ஹர்ஷர் தானேஸ்வர அரசை கி. பி. 606-ல் ஏற்றார். இவர் மாளவ மன்னரைத் தோற்கடித்தபின் பதவியேற்றதும் தமது தங்கையை மீட்கச் சென்றார். தமது தங்கையின் இருப்பிடத்தை ஹர்ஷர் விரைவிலேயே பௌத்தத் துறவி ஒருவரின் உதவியால் கண்டறிந்தார். தீக்குளித்துத் தம்மை மாய்த்துக் கொள்ள இருந்த தம் தங்கையைச் சரியான நேரத்தில் மீட்டார். தம் தங்கையின் விருப்பத்தின்படி கன்னோசி அரசும் பொறுப்பை ஏற்றார். இதன் விளைவாகத் தானேஸ்வர அரசும் கன்னோசி அரசும் ஒன்றாக இணைந்து ஹர்ஷரின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. இப்பேரரசின் தலைநகரைத் தானேஸ்வரத்திலிருந்து கன்னோசிக்கு மாற்றினார்.

## ஹர்ஷரின் வெற்றிகள்

ஹர்ஷர் பல நிலப்பகுதிகளை வென்று ஒரு பேரரசை ஏற்படுத்த முயன்றார். கூர்ச்சரம், வங்காளம் ஆகிய நாடுகளை வென்றார். இவரது பேரரசு மேற்கே சட்லெஜ் நதியிலிருந்து கிழக்கே வங்காளம் வரை பரவியிருந்தது. வட இந்தியாவின் பெரும்பகுதி இவரது ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. ஹர்ஷரது பேரரசு சந்திர குப்த விக்கிரமாதித்தரது அரசின் அளவை விடச் சற்று அதிகமாக இருந்தது. ஹர்ஷர் தமது பேரரசை மேலும் விரிவுபடுத்தும் நோக்கத்துடன் தக்காணத்தின்மீதும் படையெடுத்தார். கி. பி. 620-ல் நடைபெற்ற தக்காணப் படையெடுப்பின்போது சாளுக்கிய மன்னர் இரண்டாம் புலிகேசியால் நர்மதை ஆற்றங்கரையில் ஹர்ஷர் தோற்கடிக்கப்பட்டார் இதன் விளைவாக ஹர்ஷரது ஆதிக்கம் நர்மதை ஆற்றிற்கு அப்பால் பரவவில்லை.

### ஹர்ஷரது நிர்வாகம்

ஹர்ஷரது நிர்வாகம் திறமை மிக்கதாக இருந்தது. ஆட்சித் துறையில் அரசரே முதலிடம் பெற்றிருந்தார். எல்லா அரசுத் துறைகளையும் அரசரே சீரிய முறையில்




படம் 20. ஹர்ஷரின் பேரரசு

நேரடியாகக் கவனித்து வந்தார். பேரரசு, நிர்வாக வசதிக்காகப் பல மாகாணங்களாகவும், மாவட்டங்களாகவும்,

கிராமங்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தது. கிராமமே நிர்வாகத்தின் அடிப்படை அம்சமாக இருந்தது. நிலவரியே பேரரசின் முக்கிய வருமானம் ஆகும். அது உற்பத்தி மதிப்பில் ஆறில் ஒரு பங்காக இருந்தது. இராணுவம் மிகச் சிறந்த முறையில் பராமரிக்கப்பட்டிருந்தது. குற்றவாளிகள் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். எனினும், விழாக் காலங்களில் குற்றவாளிகள் விடுவிக்கப்பட்டனர். குப்தர்கள் காலத்தைப் போன்று மக்கள் சாலைகளில் பயமின்றிச் செல்ல இயலவில்லை. இலவச மருத்துவமனைகளும், தர்ம சத்திரங்களும் மக்கள் நலனுக்காகக் கட்டப்பட்டன.

### ஹர்ஷரது சமயம்

ஆரம்ப காலத்தில் ஹர்ஷர் இந்து சமயத்தைச் சார்ந்தவராக இருந்தார். பிற்காலத்தில் புத்தமதத்தைப் பின்பற்றினார். பிற மதங்களையும் மதித்தார். இவர் சிவன், சூரியன், புத்தர் ஆகிய எல்லாத் தெய்வங்களையும் வணங்கினார். ஹர்ஷர் புத்த மதத்திற்கு ஆதரவு அளித்த போதும் அம்மதத்தின் வளர்ச்சி நாட்டில் குன்றத் தலைப்பட்டது. இந்து சமயம் வளர்ச்சியுற்றது. ஹர்ஷர் ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை பிரயாகையில் (தற்காலத்திய அலகாபாத்) சமயத் திருவிழா நடத்தினார். அவ்விழாவின் கடைசி நாளன்று தமது செல்வங்கள் அனைத்தையும் ஏழைகளுக்கும், சமயச் சான்றோர்களுக்கும் நன்கொடையாக வழங்கினார்.

### கல்வி, இலக்கிய வளர்ச்சி

ஹர்ஷரது இலக்கியப் பணி இன்றும் போற்றப்படுகிறது. ஹர்ஷரே தலைசிறந்த கவிஞராகவும், நாடக ஆசிரியராகவும் விளங்கினார். இவர் 'இரத்தினாவளி', 'பிரியதர்சிகா', 'நாகானந்தம்' ஆகிய மூன்று நாடகங்களைப் படைத்தார். இவரது அவையில் இருந்த தலைசிறந்த கவிஞர்களில் பாணர் சிறந்தவர். இவர் 'ஹர்ஷ சரிதம்', 'காதம்பரி' என்னும் அரிய இலக்கியங்களைப் படைத்தார். இக்காலத்திய நூல்கள் வடமொழியிலேயே எழுதப்பட்டன.

### நாளந்தா பல்கலைக் கழகம்

குப்தர் காலத்தில் குமாரகுப்தரால் தோற்றுவிக்கப்பட்ட நாளந்தா பல்கலைக் கழகம் இவர் காலத்தில் ஓர் ஒப்பற்ற கல்வி நிலையமாக விளங்கியது. இது ஒரு புகழ்பெற்ற பன்னாட்டுப் பல்கலைக் கழகமாகச் சிறந்து விளங்கியது. பௌத்தமதச் சார்புள்ள ஜப்பான், சீனா, தென்கிழக்கு ஆசியா ஆகிய அயல்நாடுகளிலிருந்தும் மாணவர்கள் இப்பல்கலைக் கழகத்திற்கு வந்தனர். மாணவர்களுக்கு இலவசக் கல்வி அளிக்கப்பட்டது. இங்கு பத்தாயிரம் மாணவர்களும், ஆயிரத்து ஐந்நூறு ஆசிரியர்களும் இருந்தனர். வடமொழி மூலம் போதனை இருந்தது. பௌத்தம், தர்க்க சாத்திரம், வேதாந்தம், சட்டம், அறிவியல், மருத்துவம், நுண்கலைகள் போன்ற பாடங்கள் போதிக்கப்பட்டன. இப்பல்கலைக் கழகத்தில் மேற்படிப்பு படித்தோரும் ஆசிரியர்களும் ஆசிய நாடுகளில் போற்றப்பட்டனர். காஞ்சியைச் சேர்ந்த தரும பாலர் ஹர்ஷர் காலத்தில் துணை வேந்தராக இருந்தார். இவரைத் தொடர்ந்து சீலபத்திரர் என்ற அஸ்ஸாம் மாநிலத்தவர் துணைவேந்தராகப் பணியாற்றினார்.

### யுவான் சுவாங்கின் வருகை

பாகியானுக்குப் பிறகு நம்நாட்டிற்கு வந்த சீனப் பயணி யுவான் சுவாங் ஆவார். இவர் ஒரு பௌத்தப் பேரறிஞர். பௌத்த மத நூல்களைத் திரட்டிச் செல்லவும், புத்த புனிதத் தலங்களைத் தரிசிக்கவும் இவர் இந்தியாவிற்கு வந்தார். இவர் பல ஆண்டு காலம் இந்திய நாடு முழுவதையும்



படம் 21. யுவான்சுவாங்

சுற்றிப் பார்வையிட்டார். இவர் நாளந்தா பல்கலைக் கழகத்திற்குச் சென்றார். அப்பொழுது சீலபத்திரர் துணை வேந்தராக இருந்தார். ஹர்ஷர் யுவான் சுவாங்கை கௌரவிக்க ஒரு பேரவையைக் கன்னோசியில் கூட்டினார். யுவான் சுவாங் தாம் இந்தியாவில் கண்ட விவரங்களை 'சியூக்கி' என்னும் நூலில் எழுதியுள்ளார்.

## வர்த்தனர்களின் வீழ்ச்சி

வட இந்தியாவில் ஆட்சி புரிந்த கடைசி இந்துப் பேரரசர் ஹர்ஷரே ஆவார். ஹர்ஷர் இறந்த பின் வட இந்தியாவில் குழப்பம் நிலவியது. ஹர்ஷரது பேரரசு பல சிற்றரசுகளாகச் சிதறுண்டது.

## பயிற்சிகள்

I. விரிவான விடையளிக்கவும்

1. ஹர்ஷர் தானேஸ்வரத்திற்கும் கன்னோசிக்கும் எவ்வாறு மன்னரானார் ?
2. யுவான் சுவாங் இந்தியாவிற்கு வந்தது ஏன் ?
3. நாளந்தா பல்கலைக் கழகம்பற்றிக் குறிப்பு வரைக.
4. ஹர்ஷரது ஆட்சிமுறையை விவரிக்கவும்.

II. சுருக்கமான விடையளிக்கவும்

1. ஹர்ஷர் யாரால் தோற்கடிக்கப்பட்டார் ?
2. ஹர்ஷர் எழுதிய நூல்களில் இரண்டினைக் கூறுக.
3. 'ஹர்ஷ சரித'த்தின் ஆசிரியர் யார் ?
4. யுவான் சுவாங் வருகையின்போது நாளந்தா பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் யார் ?

III. மிகச் சிறந்த விடையை அடைப்புக் குறியினுள் குறிக்கவும்.

இந்திய வரலாற்றில் யுவான் சுவாங் நீங்காத இடம் பெற்றிருக்கக் காரணம், அவர்

(a) நாளந்தாவில் பயின்றது

(b) ஹர்ஷரை மதித்தது

(c) வடமொழியில் சிறந்த அறிவு பெற்றிருந்தது

(d) ஹர்ஷரது ஆட்சிபற்றிய குறிப்புகள் எழுதியது

IV. நீங்களே செய்யுங்கள்

1. ஹர்ஷரது பேரரசை இந்தியா வரைபடத்தில் வரைக.

2. விந்திய மலைப் பகுதியில் ஹர்ஷர் இராஜ்யஸ்ரீயைச் சந்திக்கும் காட்சியை நடித்துக் காட்டுக.

# 11. தென்னிந்தியாவில் தோன்றிய பக்தி இயக்கம்

## நாயன்மார்கள், ஆழ்வார்கள், ஆச்சார்யர்கள்

இந்திய மக்களில் பெரும்பாலோர் இந்து மதத்தவரே ஆவர். இந்துமதம் மிகப்பழமையானதும் புனிதமானதும் ஆகும். தென்னிந்தியாவிலும் இந்துமதமே சிறந்து விளங்கியது. இம்மதத்துடன் வடஇந்தியாவில் தோன்றிய புத்த சமண மதங்களும் பரவி இருந்தன. கடைச்சங்க காலத்தில் இவ்விருமதங்களின் கொள்கைகள் சமூகம், கலாச்சாரம் முதலிய எல்லாத் துறைகளிலும் ஊடுருவின. தென்னிந்திய மக்களும் இதனை வரவேற்றுத் தங்களது சமயப் பொறுமையைக் காட்டினர். நாளடைவில் இந்து சமயத்தின் புகழ் மங்கத் தொடங்கியது. நலிவடைந்த இந்து சமயத்திற்குப் புத்துயிர் அளிக்கப் பல பெரியோர்கள் தோன்றினர். புகழ் மங்கிய இந்து சமயம் செழிக்க நாயன்மார்களும் ஆழ்வார்களும் நெஞ்சுருகும் தெய்வீகப்பாடல்களைப் பாடினர். இவ்வழிபாட்டுப் பாடல்கள் தமிழில் இயற்றப்பட்டதால் அவை மக்களை வெகுவாகக் கவர்ந்தன. இவர்களது எளிய முன் மாதிரியான ஆன்மிக வாழ்க்கை மக்களைச் சமயப்பற்று மிக்கவர்களாக்கியது. இவ்வியக்கம் பக்தி இயக்கம் என அழைக்கப்படுகிறது. இவ்வியக்கம் கி.பி. 7ஆம் நூற்றாண்டில் ஆரம்பமானது. நாயன்மார்கள், ஆழ்வார்கள் ஆகியோரைப் போன்றே இந்து சமயம் தழைத்தோங்க

சங்கரர், இராமானுஜர், மத்துவர் போன்ற சமயச் சான்றோர்கள் தோன்றினர். இவர்கள் இந்துமதக் கொள்கைகளை ஒழுங்குபடுத்தி எல்லா மக்களும் புரிந்து கொண்டு ஏற்றுக் கொள்ளும் வகையில் அமைத்தனர். இவர்களது போதனைகள் சமண, பௌத்த சமய வளர்ச்சியைத் தடுத்தன. இவ்வியக்கத்தால் இந்து சமயம் புத்துயிர் பெற்று மீண்டும் செழித்தோங்கியது.

### நாயன்மார்கள்

நாயன்மார்கள் சிவபெருமானைத் தெய்வமாகக் கொண்டவர்கள். இவர்கள் எண்ணிக்கையில் அறுபத்து மூவர். இவர்களில் அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்கள் நால்வரும் 'சமயக் குரவர் நால்வர்' என்று அழைக்கப்படுகின்றனர். இவர்களோடு காரைக்காலம்மையார், நந்தனார், சிறுத்தொண்டர் முதலிய நாயன்மார்களும் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவார்கள். நாயன்மார்கள் அறுபத்து மூவரின் வரலாறுகளைச் சேக்கிழார் தமது 'பெரியபுராணம்' என்னும் நூலில் விவரித்துள்ளார்.

அப்பர், சுந்தரர், சம்பந்தர் ஆகியோரின் பக்திப் பாடல்களின் தொகுப்பு 'தேவாரம்' ஆகும். இதனைத் தொகுத்தவர் நம்பியாண்டார் நம்பி என்பவராவார். மாணிக்கவாசகரின் பாடல்களின் தொகுப்பிற்குத் 'திருவாசகம்' என்று பெயர். திருவாசகம் மிகச் சிறந்த வழிபாட்டு நூலாகும். எனவே 'திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' எனப் புகழப்படுகின்றது. இவை சைவ சமய நூல்களாக விளங்குகின்றன. சமய நூல்களான தேவாரம், திருவாசகம் முதலிய நூல்களிலுள்ள பாடல்கள் இன்றும் கோயில்களில் இன்னிசை ஓதுவார்களால் பாடப்படுகின்றன.

### ஆழ்வார்கள்

ஆழ்வார்கள் திருமாலைத் தெய்வமாகக் கொண்டவர்கள். இவர்கள் எண்ணிக்கையில் பன்னிருவர் ஆவர். அவர்

களுள் முக்கியமானவர்கள் பெரியாழ்வார், நம்மாழ்வார், ஆண்டாள் ஆகியோர் ஆவர். 'கடவுள் பக்தியே முக்தியடைய சிறந்த வழி' என ஆழ்வார்கள் போதித்தனர். இவர்கள் பாடிய துதிப் பாடல்களின் தொகுதியே 'நாலாயிர திவ்யப் பிரபந்தம்' எனப்படும். இதனைத் தொகுத்தவர் நாதமுனி என்பவராவார். ஆண்டாள் பாடிய திருப்பாவையும், நம்மாழ்வாரின் திருவாய் மொழியும், பெரியாழ்வார் பாடிய திருப்பல்லாண்டும் வைணவர்களின் சிறந்த வழிபாட்டு நூல்களாக விளங்குகின்றன.

பௌத்த, சமண மதங்களின் கொள்கைப்பிடிப்பிலிருந்து மக்களின் கவனத்தை இந்துசமயத்தின்மீது திருப்ப நாயன்மார்களும் ஆழ்வார்களும் பல வழிகளை மேற்கொண்டனர். கல்வி, கலை, இலக்கியம், இன்னிசை இவற்றின் மூலமாக இந்து சமயத்தின் பெருமையை நிலைநாட்டினர். மக்களுக்குத் தொண்டாற்றுவதைச் சமயப் பணியாக ஏற்றுக்கொண்டனர். இவ்வாறு, இழந்த செல்வாக்கையும் சிறப்பையும் மீண்டும் இந்து சமயம் அடைய வழி வகுத்தனர்.

### மூன்று மதாச்சாரியர்கள்



படம் 22. சங்கரர்

**சங்கரர்:** சங்கரர் கி. பி. 788-ஆம் ஆண்டில் கேரள மாநிலத்திலுள்ள காலடி என்னும் ஊரில் பிறந்தார். இவர் இளமையிலேயே தம் தந்தையை இழந்தார். தமது ஐந்தாவது வயதில் கல்வி கற்கத் தொடங்கினார். பதினாறாம் வயதிற்குள் வேதங்கள், உபநிடதங்கள் ஆகிய எல்லா மத நூல்களையும் கற்றுத் தெளிந்தார். பின்னர் துறவியாகி இந்தியா முழுவதும் பயணம் செய்து இந்து மதத்தின் மேன்மையையும், சிறப்பையும் மக்களுக்கு

விளக்கினார். இவர் போதித்த நெறி அத்வைதம் எனப்பட்டது. இவர் கடவுளைப் 'பரமாத்மா' என்றும், உடலிலுள்ள உயிரை ஜீவாத்மா என்றும் குறிப்பிட்டார். 'பரமாத்மாவிற்கும் ஜீவாத்மாவிற்கும் இடையே வேறுபாடுஇல்லை' என்றும், 'ஜீவாத்மா பரமாத்மாவாக இருப்பதே முக்தி' என்றும் குறிப்பிட்டார். இத்தகைய இணைப்பிற்கு முழு அறிவும் (ஞான மார்க்கம்), கடவுள் பக்தியும் (பக்தி மார்க்கம்) வழிகளாக உள்ளன என்றும் போதித்தார்.

சங்கரர் இந்துமதக் கொள்கைகளை எல்லா மக்களும் புரிந்துகொள்ளக்கூடிய வகையில் ஒழுங்குபடுத்தியவர்களில் முக்கியமானவர். பிரம்ம சூத்திரங்களுக்கும் உபநிடதங்களுக்கும் இவர் சிறந்த உரை எழுதியுள்ளார். இவ் உரைக்குச் 'சங்கர பாஷ்யம்' என்று பெயர். இவர் பகவத் கீதைக்கும் உரை எழுதியுள்ளார். இவர் நமது நாட்டின் பல இடங்களில் மடங்களை ஏற்படுத்தினார். இவர் தமது முப்பத்திரண்டாம் வயதில் காலமானார்.



படம். 23. இராமானுஜர்

இராமானுஜர் : இவர் கி. பி. 11ஆம் நூற்றாண்டில் செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள திருப்பெரும்புதூர் என்னுமிடத்தில் பிறந்தார். இவர் காஞ்சியில் யாதவப் பிரகாசர் என்னும் பேரறிஞரிடம் ஞான நூல்களைக் கற்றுத் தேர்ந்தார். இவர் பல ஆண்டுகள் இல்லற வாழ்க்கையில் ஈடுபட்டுப் பின்னர் துறவியானார். திருவரங்கத்தில் தங்கி வைணவ சமயத்தைப் போதிக்கலானார். இதனால் சைவ சமயத்தில் பற்றுமிக்க சோழ மன்னரால் இடையூறு ஏற்பட்டது. எனவே, இவர் மைசூருக்குச் சென்றார். மைசூரை ஆண்ட மன்னர் வைணவ

சமயத்தைப் போற்றி வளர்த்தார் நாடு முழுவதும் பயணம் மேற்கொண்டு இவர் வைணவ மதத்தைப் போதித்தார். இவர் பல ஆண்டுகள் இறை பணியில் ஈடுபட்டு முதிர்ந்த வயதில் இம்மண்ணுலக வாழ்வை நீத்தார்.

இவர் போதித்த நெறி விசிஸ்டாத்வைதம்; பரமாத்மாவின் ஓர் அங்கமே ஜீவாத்மா. கடவுளுக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டு அவருக்கும் அவரால் படைக்கப்பட்ட எல்லா உயிர்களுக்கும் தொண்டு புரிவதால் மக்கள் முக்தியடைவார்கள்.

இந்து சமூகத்தின் முதல் சீர்திருத்தவாதியென இராமானுஜர் காந்தியடிகளால் புகழப்பட்டார். ஏனெனில், இவர் வேதங்களை எல்லோரும் கற்கலாம் என்றும், அவை குறிப்பிட்ட ஒரு சமூகத்தினருக்கு மட்டுமல்ல என்றும் கூறினார். சங்கரரைப் போன்றே இராமனுஜரும் பிரம்ம சூத்திரங்களுக்கும் உபநிடதங்களுக்கும் சிறந்த உரை எழுதினார்.

மத்துவர்: இவர் தென் கன்னட மாவட்டத்திலுள்ள உடுப்பி என்னும் ஊரில் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் பிறந்தார். இவர் பிரம்ம சூத்திரத்திற்கும், பகவத்கீதைக்கும் சிறப்பான உரை எழுதினார். இவர் நாட்டின் பல பாகங்களுக்கும் சென்று இந்து சமயக் கருத்துகளைப் போதித்தார். இவர் உடுப்பியில் ஒரு மடத்தை ஏற்படுத்தினார். உடுப்பியில் ஸ்ரீ கிருஷ்ணருக்குக் கோயில் கட்டினார். அங்கு பல சமய நெறிகளைப் போதித்தார். இவரது போதனைகளாவன: 'ஜீவாத்மா என்பது வேறு; பரமாத்மா என்பது வேறு. முக்தியடைந்தாலும் ஜீவாத்மா பரமாத்மாவுடன் இணைவதில்லை. ஆண்டவனுடைய அருள் பெற முக்தி அவசியம்'. இவர் போதித்த இந்நெறி 'த்வைதம்' எனப்பட்டது.

## பயிற்சிகள்

**I. விரிவான விடையளிக்கவும்**

1. தென்னிந்தியாவில் தோன்றிய பக்தி இயக்கத்தைப்பற்றி ஐந்து வாக்கியங்கள் எழுதுக.
2. சங்கரரின் போதனைகள் யாவை ?
3. இராமானுஜரின் போதனைகளை விளக்குக.
4. 'த்வைதம்' பற்றிச் சில வாக்கியங்கள் எழுதுக.
5. இந்துமத வளர்ச்சிக்கு நாயன்மார்களும் ஆழ்வார்களும் ஆற்றிய தொண்டு யாது ?
6. குறிப்பு எழுதுக.

   (a) தேவாரம் (b) நாலாயிர திவ்யப் பிரபந்தம். (c) சமயக்குரவர் நால்வர் (d) ஆண்டாள் (e) திருவாசகம்.

**II. சுருக்கமான விடையளிக்கவும்**

1. சங்கரர் பிறந்த இடம் எது ?
2. இராமானுஜர் பிறந்த இடத்தைக் கூறுக.
3. மத்துவர் எங்கே பிறந்தார் ?
4. 'பெரிய புராண' நூலாசிரியர் யார் ?

**III. காலி இடங்களைத் தக்க சொற்களால் நிரப்புக**

1. தேவாரத்தைத் தொகுத்தவர் ________ ஆவார்.
2. மாணிக்கவாசகரின் பாடல்களின் தொகுப்பு ________ என வழங்கப்படுகிறது.
3. ஆழ்வார்கள் பாடிய துதிப்பாடல்களின் தொகுப்பு ________ என வழங்கப்படுகிறது.
4. ஆண்டாள் இயற்றிய ________ம், நம்மாழ்வாரின் ________ம் வைணவர்களின் பாராயண நூல்களாக விளங்குகின்றன.

**IV. நீங்களே செய்யுங்கள்**

1. தேவாரம், திருப்பாவை, திருவாய்மொழி முதலிய நூல்களிலுள்ள பக்திப் பாடல்களைப் பாடிப் பழகவும்.
2. ஆழ்வார்கள்; நாயன்மார்கள், மதாச்சாரியர்களின் படங்களைச் சேகரித்து உன் படத்தொகுப்பேட்டில் ஒட்டவும்.

# 12. பல்லவ, சாளுக்கிய, இராஷ்டிரகூட அரசுகள்

முன்னுரை : மௌரியப் பேரரசு வீழ்ச்சியடைந்தபின், தக்காணத்தில் சாதவாகனர்கள் ஆட்சி புரிந்தனர் என நாம் படித்தோம். சாதவாகனர்களுக்குப் பிறகு தக்காணத்திலும் தென்னிந்தியாவிலும் பல அரசுகள் தோன்றின. அவற்றுள் முக்கியமானவை பல்லவர் அரசும் சாளுக்கியர் அரசும் ஆகும். சாளுக்கியர் வீழ்ச்சிக்குப் பின் இராஷ்டிரகூடர்கள் அரசு புரிந்தனர். இந்த மூன்று அரசுகளைப்பற்றி இங்குப் படிப்போம்.

## பல்லவர்கள்

முக்கிய மன்னர்கள் : பாலாறு, தென்பெண்ணை பாயும் பகுதியைப் பல்லவர்கள் ஆரம்பத்தில் ஆண்டனர். அவர்களது தலைநகரம் காஞ்சிபுரம் ஆகும். காஞ்சியில் ஆண்ட முதல் பெரிய பல்லவ மன்னர் சிவஸ்கந்தவர்மர் என்பவர் ஆவார். இவர் கி. பி. மூன்றாம் நூற்றாண்டில் ஆட்சி செய்ததாகக் கருதப்படுகிறது. சமுத்திரகுப்தரை எதிர்த்து கி.பி. நான்காம் நூற்றாண்டில் போராடிய விஷ்ணுகோபன் என்பவரே தொடக்க காலப் பல்லவ அரசர்களில் சிறந்தவராக விளங்கினார். சிம்ம விஷ்ணு என்னும் அரசர் கி. பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதியில் ஆண்டார். இவரைத் தொடர்ந்து பல அரசர்கள் ஆண்டனர். அவர்களில் முதலாம் மகேந்திரவர்மரும் முதலாம் நரசிம்மவர்மரும் மிகச் சிறந்தவர்கள் ஆவர்.

### முதலாம் மகேந்திரவர்மர் (கி. பி. 600 — 630)

பல்லவ மன்னர் சிம்ம விஷ்ணுவுக்குப் பின்னர், முதலாம் மகேந்திரவர்மர் அரியணை ஏறினார். இவர் முப்பதாண்டு காலம் நல்லாட்சி செய்தார். இவரது ஆட்சிக் காலத்தின் போது வாதாபியிலிருந்து ஆட்சி செய்த மேற்குச் சாளுக்கிய அரசு வலிமை பெற்றிருந்தது. சாளுக்கிய மன்னரான இரண்டாம் புலிகேசிக்கும் மகேந்திரவர்ம பல்லவருக்கும் இடையே போர் மூண்டது. இப்போரில் மகேந்திரவர்மர் தமது தலை

நகரான காஞ்சியைக் காப்பாற்றிக் கொண்ட போதும் தோல்வி யடைந்தார். ஆயினும் மகேந்திரவர்மர் சோழ மன்னருடன் போரிட்டுத் திருச்சிராப்பள்ளியைக் கைப்பற்றினார்.

மகேந்திரவர்மர் தமது ஆட்சியை நிலைநாட்டிய பின் நாட்டின் முன்னேற்றத்தில் நாட்டம் கொண்டார். இவர் முதன் முதலில் சமண சமயத்தைத் தழுவியிருந்தார். பின்னர் சைவ சமயக் குரவர்களில் மிகச் சிறந்தவரான அப்பர் எனப்படும் திருநாவுக்கரசரின் முயற்சியால் சைவ சமயத்தை ஏற்றுக் கொண்டார். இவர் கட்டடம் மற்றும் கலைத்தொண்டிலும், ஓவியம், கல்வி, இசை, நடனம் முதலியவைகளிலும் சிறந்து விளங்கினார். திருச்சிராப்பள்ளி, வல்லம், மகேந்திரவாடி முதலிய இடங்களில் மலைகளைக் குடைந்து குகைக் கோயில் களை அமைத்தார். சித்தன்னவாசலில் உள்ள சமணச் சார் புள்ள குகை ஓவியங்கள் இவர் காலத்தில் தீட்டப்பட்டவை ஆகும்.

மகேந்திரவாடி என்னும் நகரை இவர் நிறுவினார். அங்கு நீர்ப்பாசன வசதிக்காகப் பெரிய ஏரி ஒன்றை வெட்டினார். இது இவரது காலத்தின் நீர்ப்பாசன வசதிக்கு எடுத்துக் காட்டாக இன்றும் விளங்குகிறது.

### நரசிம்மவர்மர் (கி. பி. 630—655)

முதலாம் மகேந்திரவர்மருக்குப் பின் அவரது மைந்தரான முதலாம் நரசிம்மவர்மர் அரசரானார். இவர் பல்லவ மன்னர் களிலேயே மிகச் சிறந்தவர் ஆவார். இவர் சாளுக்கிய மன்னரான இரண்டாம் புலிகேசியை முறியடித்துத் தம் தந்தைக்கு ஏற்பட்ட இழுக்கைப் போக்கிக் கொண்டார். சாளுக்கியரின் தலைநகரான வாதாபியைத் தீக்கிரையாக்கினார். அதனால் 'வாதாபி கொண்டான்' என்ற விருதுப் பெயர் இவருக்கு உரியதாயிற்று. நரசிம்மவர்மருக்கு 'மாமல்லர்' என்ற மற்றொரு சிறப்புப் பெயரும் உண்டு. நரசிம்மவர்ம ரிடம் சிறந்த கப்பற்படை ஒன்றும் இருந்தது. இப்படையுடன் இலங்கையைத் தாக்கித் தமது நண்பரான மானவர்மரை மீண்டும் அரியணையில் அமர்த்தினார்.

தமது தந்தையாரைப் போன்றே நரசிம்மவர்மரும் கட்டடம், கலை முதலிய தொண்டுகளில் ஆர்வம் கொண்டிருந்தார். இவர் வங்கக் கடற்கரையில் முன்பே இருந்த துறைமுகத்தைப் பெரிதாக்கி ஒரு கலை நிலையமாக்கினார். அதனால் அது அவர் சிறப்புப் பெயரில் 'மாமல்லபுரம்' என்றழைக்கப்பட்டது. இத்துறைமுகம் சென்னையிலிருந்து சுமார் 50 கி. மீ. தூரத்தில் உள்ளது. இங்கு, மாமல்லர் பல்லாயிரக்கணக்கான சிற்பிகளைக் கொண்டு பாறைகளைக் குடைந்து சிற்பங்களையும் கோயில்களையும் அமைத்தார். இக்கோயில்கள் இரதங்கள் போலக் குடையப்பட்டன. அவை



படம் 24. மாமல்லபுர இரதங்கள்

களில் 'பஞ்சபாண்டவர் இரதங்கள்' சிறந்தவை ஆகும். மேலும் கற்பாறைகளில் சித்திரங்களைச் செதுக்குவது நரசிம்ம வர்மர் காலத்தில் சிறந்து விளங்கியது. இவ்வாறு செதுக்கப்பட்ட சித்திரங்களில் 'அர்ச்சுனனின் தவக்கோலம்' இன்றும் அற்புதமாகக் காட்சியளிக்கின்றது. பல்லவர் கலைத் தொண்டின் சின்னங்கள் இன்றும் அழியாது உலகப் புகழ் மிக்கவைகளாக விளங்குகின்றன. மேலும் தமது தலைநகரான காஞ்சியிலும்

பல கோயில்களைக் கட்டினார். இவர் காலத்தில் காஞ்சி மாநகர் வடமொழிக் கல்விக்குச் சிறப்பிடமாக விளங்கியது.

சீனப் பயணியான யுவான் சுவாங், நரசிம்மவர்மர் காலத்தில் காஞ்சிக்கு வருகை தந்தார். இவர் தாம் எழுதிய 'சியூக்கி' என்னும் நூலில் பல்லவர் ஆட்சி, நாட்டின் செழிப்பு, கலைத் தொண்டு, கட்டடப் பணி, மக்களது வீரம் முதலியவற்றைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார்.

முதலாம் நரசிம்மவர்மருக்குப் பின் அவரது மைந்தர் இரண்டாம் மகேந்திரவர்மர் ஆட்சிக்கு வந்தார். இவரைத் தொடர்ந்து ஆட்சி புரிந்த பிற்காலப் பல்லவ மன்னர்களில் பலர் திறமையற்றவர்கள். கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் முடிவில் ஆண்ட கடைசி பல்லவ அரசரான அபராஜிதவர்மனை முதலாம் ஆதித்தர் என்னும் சோழ மன்னர் வென்றார். இதற்குப் பின்னர் பல்லவர் ஆட்சி முடிவுற்றது. சோழர் ஆட்சி தொடங்கியது.

## சாளுக்கியர்கள்

சாளுக்கியரில் மூன்று பிரிவினர் இருந்தனர். இவர்கள் முறையே வாதாபியைத் தலைநகராகக் கொண்ட மேலைச் சாளுக்கியர் (கி.பி. 550—753), வெங்கியைத் தலைநகராகக் கொண்ட கீழைச் சாளுக்கியர், கல்யாணிபுரத்தைத் தலைநகராகக் கொண்ட பிற்காலச் சாளுக்கியர் ஆகியோராவர். நாம் இப்பொழுது மேலைச் சாளுக்கியரைப்பற்றிப் படிப்போம்.

மேலைச் சாளுக்கிய அரசை முறையாக ஏற்படுத்திய முதல் அரசர் முதலாம் புலிகேசி ஆவார். சாளுக்கிய மன்னர்களில் மிகவும் சிறந்தவர் இரண்டாம் புலிகேசி ஆவார். இவர் பல்லவ மன்னர் முதலாம் மகேந்திரவர்மரை வெற்றி கொண்டார். மேலும், இவர் வட இந்தியப் பேரரசரான ஹர்ஷரை நர்மதை நதிக்கரையில் வென்றார். இவ்வெற்றியினால் ஹர்ஷரது அரசு தக்காணத்தில் பரவ இயலவில்லை. சீனப் பயணி யுவான் சுவாங் இரண்டாம் புலிகேசியின் அரசவைக்கு வருகை தந்தார். சாளுக்கிய மன்னரையும் அவரது அரசையும் புகழ்ந்து குறிப்புகள் எழுதியுள்ளார்.

மாவீரரான இரண்டாம் புலிகேசி பல்லவ மன்னர் நரசிம்ம வர்மரிடம் கி. பி. 642-ல் போரிட்டுத் தோற்றார். வாதா பியும் தீக்கிரையாயிற்று; அப்பொழுது புலிகேசி மடிந்தார்.

இரண்டாம் புலிகேசியைத் தொடர்ந்து முதலாம் விக்கிரமாதித்தர் அரியணை ஏறினார். இவர் பல்லவர்களைப் போரில் வென்று தமது தலைநகர் வாதாபியை மீட்டுக் கொண்டார். இவருக்குப் பின் ஆட்சிக்கு வந்த இரண்டாம் விக்கிரமாதித்தர் பல்லவரது தலை நகரைக் கைப்பற்றினார். இரண்டாம் விக்கிரமாதித்தருக்குப் பிறகு அரசாட்சிக்கு வந்த இரண்டாம் கீர்த்திவர்மனை இராஷ்டிரகூடர்கள் வென்று அவர்களது ஆட்சியை ஏற்படுத்திக் கொண்டனர்.

## இராஷ்டிரகூடர்கள்

மேற்குச் சாளுக்கியர்களுக்குப் பின் இராஷ்டிரகூடர்கள் தக்காணத்தில் ஏறத்தாழ இருநூறு ஆண்டுகள் தங்களுடைய ஆதிக்கத்தைச் செலுத்தினர். இவர்கள் முதலில் சிற்றரசர் களாகவே இருந்தனர். பின்னர் அக்கால அரசுகளை வென்று ஒரு வலிமை மிக்க அரசை ஏற்படுத்தினர். ஹைதராபாத்திற்கு அருகிலுள்ள மான்ய தேசம் அல்லது மால்கேதம் என்பதே இவர்களது தலைநகராக விளங்கியது.

இராஷ்டிரகூட மரபின் உயர்வுக்கு அடிகோலிய முதல் அரசர் தந்தி துர்க்கர் ஆவார். இவர் பல போர் முயற்சிகளில் ஈடுபட்டார்; பல வெற்றிகளையும் அடைந்தார்: காஞ்சி யையும் கைப்பற்றினார். அவருக்குப் பின் முதலாம் கிருஷ்ணர் மன்னர் ஆனார். இவர் ஒரு சிறந்த போர்வீரராக விளங்கியதோடல்லாது கலை வளர்ச்சியில் ஈடுபாடு கொண்டவ ராகவும் இருந்தார். உலகப் புகழ்பெற்ற எல்லோராவில் உள்ள கயிலாயநாதர் குகைக் கோயில் இவர் காலத்தில்தான் அமைக்கப்பட்டது. இவரை அடுத்து ஆண்ட அரசர்களில் மூன்றாம் கோவிந்தர், முதலாம் அமோகவர்ஷர் முக்கிய மானவர்கள். மூன்றாம் கோவிந்தர் வட இந்தியாவில் இருந்த கூர்ஜரர்களையும் பாலர்களையும் வென்றார்.

அமோகவர்ஷர் சமண சமயத்தைப் பின்பற்றினார். கற்று திந்த பெருமக்களை நன்கு ஆதரித்தார். தாமும் இலக்கியத் துறையில் ஆர்வம் கொண்டவராக இருந்தமைக்கு எடுத்துக் காட்டாக, 'கவிராஜ மார்க்கம்' என்ற நூலைக் கன்னட மொழியில் இயற்றினார் என்று சொல்லப்படுகிறது. இம்மரபின் கடைசி தலைசிறந்த மன்னர் மூன்றாம் கிருஷ்ணராவார். இவருக்குப் பின்வந்த அரசர்கள் வலிமையற்றவர்களாக இருந்ததால் இராஷ்டிரகூடரின் ஆதிக்கம் வீழ்ச்சி அடைந்தது.

இராஷ்டிரகூடரின் ஆட்சியில் இந்து சமயம் மக்களிடையே செல்வாக்குடன் விளங்கியது. அரசர்கள் பல கோயில்களைக் கட்டினர். பாறைகளைக் குடைந்து குகைக் கோயில்களை அமைத்தது இவர்களது வியத்தகு சாதனையாகும். எல்லோரா குகைக் கோயில்கள் இதற்குச் சான்று களாக இன்றும் விளங்குகின்றன. இராஷ்டிரகூட மன்னர்களில் சிலர் சமண சமயத்தைச் சார்ந்தவர்களாக விளங்கினர். அவர் களில் அமோகவர்ஷர் ஒருவராவார். பௌத்த மதம் இவர்களது காலத்தில் வீழ்ச்சியடைந்தது.

## பயிற்சிகள்

I. விரிவான விடை எழுதவும்.

1. முதலாம் மகேந்திரவர்மரைப்பற்றிச் சில வாக்கியங்கள் எழுதுக.
2. முதலாம் நரசிம்மவர்மரின் பெருமையை விளக்குக.
3. மாமல்லபுரத்தைப்பற்றி நான்கு வாக்கியங்கள் எழுதுக.

II. சுருக்கமான விடை எழுதவும்.

1. சமுத்திர குப்தரை எதிர்த்துப் போரிட்ட பல்லவ அரசர் யார்?
2. பல்லவ அரசர்களில் மிகச் சிறந்தவர் யார்?
3. மேலைச் சாளுக்கிய அரசைத் தோற்றுவித்தவர் யார்?
4. கடைசிப் பல்லவ மன்னரின் பெயர் யாது?
5. சாளுக்கிய அரசின் தலைநகர் எது?

6. இராஷ்டிரகூட அரசின் தலைநகர் எது ?
7. எல்லோராவில் உள்ள கயிலாயநாதர் குகைக்கோயிலை அமைத்த அரசர் யார் ?

III. ஒவ்வொரு வாக்கியத்திற்கும் எதிரே ஒதுக்கப்பட்டுள்ள இடத்தில் 'ஆம்' அல்லது 'இல்லை' என்பதைக் குறிப்பிடுக.

1. சாளுக்கிய மன்னரான இரண்டாம் புலிகேசியை முதலாம் மகேந்திரவர்மர் தோற்கடித்தார். ( )
2. பல்லவர்களது தலைநகர் காஞ்சியாகும். ( )
3. முதலாம் நரசிம்மவர்மரும் ஹர்ஷரும் சமகாலத்தில் வாழ்ந்த அரசர்களாவர். ( )
4. ஹர்ஷரை இரண்டாம் புலிகேசி தோற்கடித்தார். ( )
5. இராஷ்டிரகூடர்கள் சாளுக்கியர்களை வென்று தங்களுடைய அரசை ஏற்படுத்தினர். ( )
6. இராஷ்டிரகூட மன்னரான அமோக வர்ஷர் 'கவிராஜ மார்க்கம்' என்ற நூலை எழுதியுள்ளார். ( )

IV. நீங்களே செய்யுங்கள்.

1. தென்னிந்தியா வரைபடத்தில் சாளுக்கியர், பல்லவர் அரசுகளைக் குறிப்பிட்டு — வாதாபி, காஞ்சி, எல்லோரா, மாமல்லபுரம் ஆகிய இடங்களைக் குறிக்கவும்.
2. மாமல்லபுரம், காஞ்சி, எல்லோரா ஆகிய இடங்களில் உள்ள கோயில்களின் படங்களைச் சேகரித்து உனது படத் தொகுப் பேட்டில் ஒட்டவும்.
3. மாமல்லபுரம், காஞ்சிபுரம் ஆகிய இடங்களுக்குக் கல்விப் பயணம் சென்று பார்க்கவும்.

# 13. சோழப் பேரரசர்கள்

## முன்னுரை

சோழ இராச்சியம் தொன்மை வாய்ந்த ஒன்றாகும். இவ்வரசினைப்பற்றி நாம் முன்னொரு பாடத்தில் படித்தோம். பழைய சோழர்கள் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் புகழ் மிக்கவர்களாக இருந்தனர். கரிகால் சோழருக்குப் பிறகு

இவர்களின் வலிமை குன்றியது. மறுபடியும் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் சோழர்கள் வலிமை பெற்றுப் புகழுடன் ஆட்சி செய்யத் தொடங்கினர். இவர்கள் 'பிற்காலச் சோழர்கள்' என அழைக்கப்பட்டனர். இம்மரபின் முதல் அரசர் விசயாலயச் சோழர் ஆவார். எனவே இம்மரபினை 'விசயாலயச் சோழர் மரபு' எனவும் குறிப்பிடுகின்றனர். இம்மரபின் வழிவந்த அரசர்கள் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டமையினால் இவர்களைத் 'தஞ்சைச் சோழர்கள்' என்றும் கூறுகின்றனர்.

## முக்கிய மன்னர்கள்

விசயாலயச் சோழரை அடுத்து முதலாம் ஆதித்தச சோழர் ஆட்சிக்கு வந்தார். இவர் பல்லவ மன்னர் அபராஜி தரை வென்று சோழ அரசை வலிமையுடையதாக்கினார். இவருக்குப்பின் முதல் பராந்தகச் சோழர் கி. பி. 907 முதல் 953 வரை ஆட்சி செய்தார். பராந்தகர் பாண்டியர் களுடனும், இராஷ்டிரகூடர்களுடனும் போரிட்டு அவர்களை வென்று தென்னிந்தியாவில் சோழர் ஆதிக்கத்தை நிலை நாட்டினார். பராந்தகர் சிதம்பரத்திலுள்ள சோழர்களின் குலதெய்வமான நடராசப் பெருமான் கோயிலில் உள்ள சிற்றம்பலத்திற்குப் பொன் வேய்ந்தார். இவரைத் தொடர்ந்து ஆண்ட அரசர்களில் இராசராசச் சோழரும் இராசேந்திரச் சோழரும் மிகச் சிறந்தவர்களாவர்.

## முதலாம் இராசராசர் (கி. பி. 985—1014)

சோழ அரசர்களில் மிகச் சிறந்தவர் இராசராசர் ஆவார். இவர் தென்னிந்தியாவை ஆண்ட மிகப் பெரிய அரசர்களில் ஒருவர். இவர் மிகச் சிறந்த வெற்றி வீரர் மட்டு மன்றி மிகப்பெரிய அரசை ஏற்படுத்தியவருமாவார். இவரது பேரரசு வளமிக்க காவிரிக்கரையில் பரவியிருந்தமையால் இவர் 'பொன்னியின் செல்வன்' என்று அழைக்கப்பட்டார். காவிரிக்குப் பொன்னி நதி என்னும் பெயரும் உண்டு. இவர் தமது ஆட்சிக் காலத்தில் பெற்ற வெற்றிகள் பல. சேரரது கடற்படையைத் தோல்வியுறச் செய்து தமது முதல் வெற்றியைப் பெற்றார். பின்னர் பாண்டியர்களை வென்று மதுரையைக் கைப்பற்றினார்.

சாளுக்கிய மன்னர் இவரிடம் தோற்றுப் போனார். இலங்கை நாட்டின் ஒரு பகுதியையும் மைசூரின் பெரும்பகுதியையும் இவர் தமது இராச்சியத்துடன் சேர்த்துக்கொண்டார். தமது கடற் படையின் உதவியினால் மாலத் தீவுகளையும் கைப்பற்றினார். இவரது பேரரசு துங்கபத்திரா நதி வரையிலான தென்னிந்தியா முழுவதையும், இலங்கையின் ஒரு பகுதியையும், மற்றும் மாலத்தீவுகளையும் கொண்டிருந்தது. இவர் தமது மகளை வேங்கி நாட்டு இளவரசருக்கு மணம் செய்து கொடுத்தார். இதனால் சோழர்களுக்கும் சாளுக்கியர்களுக்கும் இடையே ஒற்றுமை ஏற்பட்டது.

இராசராசர் குடிமக்களின் நலன் நாடும் மன்னராகத் திகழ்ந் தார். இவர் பல நாடுகளை வென்றதோடு மட்டுமல்லாது அவற்றை மிகத் திறமையாகவும் நிர்வகித்தார். நீர்ப்பாசன வசதிகளுக்காக அணைகள் பல கட்டப்பட்டன; குளங்கள் வெட்டப்பட்டன. தன்னாட்சி முறையினை எல்லா கிராமங் களிலும் நடைமுறைக்குக் கொண்டுவந்தார். தமது மகன் இராசேந்திரரை இளவரசராக்கி நிர்வாகப் பொறுப்பில் அமர்த்தி வைக்குவித்தார்.

இராசராசர் சைவ சமயத்தைச் சார்ந்தவராதலின் சைவ சமயம் தழைத்தோங்கப் பாடுபட்டார். எனினும் பிற மதங் களையும் போற்றினார். உலகப் புகழ்பெற்ற பிரகதீசுவரர் கோயிலைத் தஞ்சையில் கட்டுவித்தவரும் இவரே. இக்கோயில் 'பெரிய கோயில்' என்றும், 'இராசராசேசுவரர் கோயில்' என்றும் அழைக்கப்படுகின்றது. இக்கோயிலில் உள்ள ஒரே பாறையில் செதுக்கப்பட்ட நந்தியும், சிறந்த சிற்பங்களும் அக்கால சிற்பிகளின் கலைத்திறனுக்கு எடுத்துக்காட்டுகளாக விளங்கு கின்றன. செழுமை வாய்ந்த காவிரிச் சமவெளியில் உள்ள தஞ்சையில் பாறைகள் கிடையாது எனினும், பெரிய கோயில் கற்களைக்கொண்டே கட்டப்பட்டுள்ளது. இத்தகைய வேலைப் பாடு சோழ மன்னனது பெருமைக்கும் மக்களின் அயராத உழைப்புக்கும் சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. இராசராசர் இசை, நடனம், ஓவியம் முதலிய கலைகளைப் போற்றி வளர்த்தார். சோழ அரசர்களில் ஈடு இணையற்றவர்

இவரே. இவருக்குப் பல சிறப்புப் பெயர்கள் வழங்கப்பட்டன. அவற்றில் 'சிவபாத சேகரர்', 'மும்முடிச் சோழர்', 'திருமுறை



படம் 25. பிரகதீசுவரர் கோயில்

கண்ட சோழர்', 'இராசகேசரி' என்பன சில. இவருக்குப்பின் இவரது மைந்தர் இராசேந்திரர் சோழ மன்னரானார்.

முதலாம் இராசேந்திரர் *(கி.பி. 1014—1044)*

ஆட்சிக்கு வருமுன் இளவரசராக இருந்து நிர்வாகப் பொறுப்பேற்றிருந்தமையால் இராசேந்திரர் சிறந்த ஆட்சித் திறமை படைத்தவராகவும் புகழ்மிக்க வீரராகவும் விளங்கினார்.

அரியணை ஏறிய சில ஆண்டுகளுக்குள் இலங்கை முழு வதையும் தமது ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்தார். தமது திறமை மிக்க கடற்படையின் உதவியினால் ஸ்ரீவிஜயா, கடாரம், முதலிய நாடுகளையும், அந்தமான் - நிக்கோபார் தீவுகளை யும் வென்றார். ஸ்ரீவிஜயா என்பது தற்காலத்திய சுமத்திரா ஆகும். கடாரம் என்பது தற்காலத்திய மலேசியாவாகும்.

இவ்வெற்றியினால் இராசேந்திரர் 'கடாரங்கொண்டான்' எனப் பெயர் பெற்றார். தமது மகளைக் கீழைச் சாளுக்கியருக்கு மணம் செய்துகொடுத்துத் தமது அரசை வலுப்படுத்திக் கொண்டார். வட கிழக்கிந்தியப் பகுதியின்மீதும் இவர் படை யெடுத்தார். இவரது படை கோதாவரி நதியையும், பஸ்தார், ஒரிஸ்ஸா பகுதிகளையும் கடந்து மேற்கு வங்கத்திற்குச் சென்று, அந்நாட்டு மன்னரான மகிபாலரை வென்றது. மேற்கு வங்கம் கங்கைச் சமவெளியைச் சார்ந்திருந்தமையினால் இராசேந்திரர், 'கங்கை கொண்ட சோழர்' எனப் பெயர் பெற்றார். இவ்வெற்றியின் அடையாளமாகக் 'கங்கை கொண்ட சோழபுரம்' என்னும் நகரை அமைத்து, அதனைத் தமது தலைநகராக்கிக் கொண்டார். அங்கு பிரகதீஸ்வரர் கோயில் போன்று ஒரு பெரிய கோயிலை எழுப்பினார்.

தமது தந்தையைப் போன்றே இராசேந்திரரும் கல்வி, கலைகள் முதலியவற்றைப் போற்றி வளர்த்தார். இராசேந்திரரை 'மிகச் சிறந்த தந்தையின் மிகச் சிறந்த மைந்தர்' எனக் கூறுவது மிகவும் பொருத்தமாகும்.

## குலோத்துங்கச் சோழர்கள்

இராசேந்திர சோழரின் ஆட்சிக்குப் பின்னர் சோழ அரசுக்குப் பல ஆபத்துகள் ஏற்பட்டன. சோழ அரசை எதிர்த்துப் பாண்டியர்களும், சேரர்களும், கங்கர்களும் குழப்பம் விளைவித்தனர். மேற்குச் சாளுக்கியர்கள் சோழ நாட்டின் மீது படையெடுத்து வெற்றி பெற்றனர். அடிக்கடி ஏற்பட்ட போர்களின் விளைவாக இராசேந்திரருக்குப் பின்னர் வந்த ஐந்து சோழ மன்னர்களும் சேர்ந்து ஏறத்தாழ இருபத்தெட்டு ஆண்டுகளே ஆட்சி செய்தனர். இத்தகைய நிலையிலிருந்த சோழ நாட்டை மீட்க முதலாம் குலோத்துங்கர் ஆட்சி ஏற்பட்டது.

முதலாம் குலோத்துங்கர் (கி. பி. 1070—1120) : இராசராச சோழரின் மகளும், பின்னர் இராசேந்திர சோழரின் மகளும் சாளுக்கிய மன்னர்களை மணந்துகொண்டனர் என்பதை ஏற்கெனவே படித்துள்ளோம். இவர்கள் மரபில்

வந்தவரே இராசேந்திர சாளுக்கியர் ஆவார். சோழப் பேரரசில் அரச பதவிக்காகப் போட்டி ஏற்பட்டபோது, தம்மைச் சோழப் பேரரசராக முடிசூட்டிக் கொண்டார். இவரே முதலாம் குலோத்துங்கர் எனப் பெயர் பெற்றார். இவர் அரசு பொறுப்பை ஏற்றதால் சோழ அரசும் சாளுக்கிய அரசும் ஒன்றுபட்டது. இவர் கலிங்க நாட்டின் மீது படையெடுத்து அதனை வென்றார். ஆனால் அதனைச் சோழப் பேரரசுடன் சேர்த்துக்கொள்ளவில்லை. இப்போரை, சோழ மன்னர் அவையிலிருந்த ஜெயங்கொண்டார், கலிங்கத்துப் பரணியில் விவரித்துள்ளார். நாட்டில் நிலையான அமைதி நிலவியது. அதனால் செல்வம் செழித்தோங்கியது. எனவே, இவர் இறக்குமதிப் பொருள்களின் மீதான சுங்கவரியை நீக்கினார். இதன் காரணமாக இவர் 'சுங்கம் தவிர்த்த சோழர்' என்னும் பெயர் பெற்றார். இவர் காலத்தில் நிலங்கள் அளக்கப்பட்டு வரி நிர்ணயம் செய்யப்பட்டது. நிலவரி மட்டுமே அரசரால் வசூலிக்கப்பட்டது.

இவர் சாளுக்கிய மற்றும் சோழ மரபினைச் சார்ந்தவ ராதலால் தெலுங்கு மற்றும் தமிழ் மொழிகளுக்குப் பேராதரவு அளித்தார். இவரது காலத்தில் காஞ்சி ஒரு சிறந்த நகராக மீண்டும் விளங்கியது.

முதலாம் குலோத்துங்கருக்குப் பிறகு அவரது மைந்தர் விக்கிரம சோழர் அரசரானார். விக்கிரம சோழரை அடுத்து இரண்டாம் குலோத்துங்கர் அரியணை ஏறினார்.

இரண்டாம் குலோத்துங்கர் (கி.பி. 1133 — 1150). இவருக்கு அநபாயன் என்ற பெயரும் உண்டு. இவர் கலையார்வம் கொண்டவர் ; கட்டடப்பிரியர். சிதம்பரம் நடராசர் கோயிலுக்குப் பெரும் நன்கொடைகள் அளித்தார். இவர் சைவ சமயத்தவர். இவரது அமைச்சராக விளங்கியவர் சேக்கிழார் ஆவார். சேக்கிழார் அறுபத்து மூன்று நாயன்மார் களின் வரலாற்றைப் பாடினார். இரண்டாம் குலோத்துங்கர் காலத்தில்தான் இப்பாடல்கள் அனைத்தும் பெரிய புராணமாகத் தொகுக்கப்பட்டன. இந்நூலுக்குத் 'திருத்தொண்டர் புராணம்'

என்னும் பெயர் வழங்கப்படலாயிற்று. இதுவே இரண்டாம் குலோத்துங்கரின் மிகச் சிறந்த சைவத் தொண்டாகும். ஒட்டக்கூத்தர், கம்பர், புகழேந்தியார் முதலான தமிழ்ப் புலவர்கள் சோழ அரசரின் அவைக்களப் புலவர்களாக விளங்கினர். இரண்டாம் குலோத்துங்க சோழரையடுத்து ஆட்சிக்கு வந்த அரசர்களில் முக்கியமானவர் மூன்றாம் குலோத்துங்கராவார்.

மூன்றாம் குலோத்துங்கர் (கி.பி. 1178 — 1216) : இவரது ஆட்சிக் காலத்தின் பெரும் பகுதி சோழ நாட்டின் அண்டை நாடுகளுடன் போரிடுவதிலேயே கழிந்தது குறிப்பாக, பாண்டிய நாட்டுடன் இவர் நெடுங்காலம் போரிட வேண்டியதாயிருந்தது. அடிக்கடி கலகம் செய்துகொண்டிருந்த பாண்டிய மன்னர்களை வென்று அவர்களது நாட்டைக் கைப்பற்றினார். 'சோழ பாண்டியன்' என்னும் பட்டப் பெயரும் பெற்றார். இவர் காலத்தில் சோழ அரசு தெற்கே குமரி முனையிலிருந்து வடக்கே வேங்கி நாடு வரை பரவியிருந்தது. கலை, சிற்பங்களில் பேரார்வம் கொண்டவராகத் திகழ்ந்தார். சோழ மன்னர்களில் கடைசிப் பேரரசராக விளங்கியவர் இவரே. தம்முடைய தனிப்பட்ட திறமையால் சோழ அரசின் வீழ்ச்சியைத் தடுத்தார். எனினும், இவருக்குப் பின் உள்நாட்டுக் குழப்பங்களாலும், பாண்டிய மன்னர்களது எழுச்சியாலும் சோழ அரசு வலிமை குன்றிச் சிதறுண்டது.

### இலக்கிய, கலை வளர்ச்சி

பிற்காலச் சோழர்களின் ஆட்சிக் காலத்தில் தமிழ் இலக்கியம் செழித்தோங்கியது. தமிழ் நூல்கள் கடவுள் பக்தியை வலியுறுத்தி எழுதப்பட்டன. இவ்வாறு எழுதப்பட்ட நூல்களில் பெரியபுராணம், திருவிளையாடற் புராணம், திருமுறை கண்டபுராணம் முதலியவை மிகச் சிறந்தவை. இக்காலத்தில் கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தியார் முதலாய தலைசிறந்த புலவர்கள் வாழ்ந்ததாகத் தெரிகிறது. பிற்காலச் சோழர் காலத்தில் திராவிடர் சிற்பக்கலை உன்னத நிலையை அடைந்திருந்தது. சைவ மதத்தைச் சோழமன்னர்கள் தழுவினர். அதனால் பல சைவக் கோயில்களைக் கட்டினர்.

சோழ மன்னர்கள் வலிமை பொருந்திய கப்பற்படையினைப் பெற்றிருந்தனர். இதனால் இவர்கள் கடல் கடந்து சென்று அயல் நாடுகளிலும் தங்கள் ஆதிக்கத்தை ஏற்படுத்தினர். வங்காள விரிகுடா சோழர் ஏரியாக விளங்கியது. இந்தியாவின் கிழக்குக் கடற்கரை 'சோழ மண்டலக்கரை' எனப் பெயர் பெற்றது. இவையனைத்திற்கும் மேலாக மிகச் சிறந்த நிர்வாகத்தையும் இவர்கள் ஏற்படுத்தினர்.

## சோழர்களது ஆட்சிமுறை

சோழர்களுடைய ஆட்சிமுறை தமிழ்நாட்டின் ஆட்சி முறைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். பேரரசானது மண்டலம், கோட்டம், நாடு, கூற்றம் எனப் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. சோழர்களது ஆட்சியில் கிராம ஆட்சி குறிப்பிடத்தக்கது. கிராம விவகாரங்களைக் கவனிக்க கிராம சபை அமைக்கப்பட்டிருந்தது. இச் சபையில் உறுப்பினராவ தற்குத் தகுதிகள் நிர்ணயிக்கப்பட்டிருந்தன. சொந்த மனையில் வீடும், கால் வேலி நிலமும், சிறந்த கல்வியறிவும், குறிப்பிட்ட வயதை அடைந்தவராகவும் இருக்கவேண்டு மென்பது இன்றியமையாத தகுதிகளாகும். பொதுப்பணிகளில் ஈடுபட்டு அதற்குரிய கணக்குக் காட்டாதவர், கையூட்டு (இலஞ்சம்) வாங்கியவர், பொதுச் சொத்துகளைக் கவர்ந்தவர், சமூகத் துரோகிகள் முதலானோர் உறுப்பினராவதற்குத் தகுதி யற்றோர் ஆவார்கள். குறிப்பிட்ட பகுதியில் வாழும் தகுதி படைத்த எல்லோருடைய பெயர்களையும் தனித்தனி ஓலைத் துண்டுகளில் எழுதி, கட்டாகக் கட்டி அதனை ஒரு குடத்தில் இடுவர். ஊர்ப்பெருமக்கள் முன்னிலையில், குறிப்பிட்ட ஒரு நாளில், ஒன்றுமறியாத இளைஞன் ஒருவனைக்கொண்டு, குடத்தில் இடப்பட்ட கட்டிலிருந்து ஓர் ஓலையை எடுக்கச் செய்வர். ஓலையில் எழுதப்பெற்ற பெயருடையவர் அப் பகுதியின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினராகக் கருதப் படுவார். இம் முறை சமூகத்தில் வளமிக்க, சுதந்திரமான இனிய வாழ்வை நிர்ணயிப்பதில் ஒவ்வொரு குடிமகனும் பங்கேற்க வாய்ப்பளித்தது.

நாட்டின் நிர்வாகத்தின் தலைவராக அரசரே விளங்கினார். உயர் அதிகாரிகளும் அமைச்சரவையினரும் அரசருக்கு நிர்வாகத்தில் உதவியாக இருந்தனர். அரசரே மாறுவேடம் பூண்டு மக்களின் நலன்களைக் கவனித்து வந்தார். திறமையான ஒற்றர்களும் நாட்டின் உண்மை நிலையை வேவு பார்த்து அறிந்து வந்து மன்னருக்குத் தெரிவித்தனர்.

சோழ மன்னர்கள் கல்விக்குப் பேராதரவு அளித்தனர். திரிபுவனை, எண்ணாயிரம் முதலிய இடங்களில் தமிழ் மற்றும் வடமொழி வளர்ச்சிக்காகக் கல்லூரிகள் ஏற்படுத்தினர். ஆலய வழிபாடுகளில் தமிழ்ப்பாடல்கள் இசையுடன் பாடப்பட்டன. ஆலயங்களிலும் மடாலயங்களிலும் சமயக் கல்வி போதிக்கப்பட்டது. இசை, நடனம், சிற்பம், ஓவியம் முதலிய நுண்கலைகளை வளர்க்க நிறுவனங்கள் ஏற்படுத்தப்பட்டன.

உழவுத்தொழிலே மக்களின் முக்கியத் தொழிலாக விளங்கியது. உழவுத்தொழில் வளர்ச்சிக்குச் சோழ மன்னர்கள் சிறப்பான பாசனத் திட்டங்களை ஏற்படுத்தினர். ஆறுகளின் குறுக்கே அணைகள் கட்டியும், ஏரிகள் மற்றும் கிணறுகள் வெட்டியும் உழவுத்தொழிலுக்குப் பேராதரவு காட்டினர். இத்திட்டங்களை உழவர்கள் நன்கு பயன்படுத்திக் கொண்டனர். இதன் பயனாக விளைச்சல் பெருகியது. எனவே, 'சோழ வளநாடு சோறுடைத்து' எனச் சோழ நாடு சிறப்பிக்கப் பெற்றது.

## பயிற்சிகள்

**1. விரிவான விடை எழுதவும்.**

1. 'தஞ்சைப் பெரிய கோயில்' பற்றிக் குறிப்பு எழுதுக.
2. இராசேந்திர சோழரின் வெற்றிகளைக் குறிப்பிடுக.
3. முதலாம் குலோத்துங்கரின் ஆட்சியை விவரி.
4. இரண்டாம் குலோத்துங்கரின் அரும்பணிகள் யாவை ?
5. தமிழுக்கும் கலைக்கும் சோழர்கள் ஆற்றிய தொண்டு யாது?
6. சோழர்கள் ஆட்சியின் சிறப்பு அம்சங்கள் யாவை ?

II. சுருக்கமான விடையளிக்கவும்.

1. பிற்காலச் சோழர்களுக்கு வழங்கும் வேறு பெயர்கள் யாவை ?
2. இராசராசருக்கு வழங்கும் வேறு பெயர்களுள் இரண்டினைக் கூறுக.
3. பிற்காலச் சோழர்களின் தலைநகரம் எது ?
4. கங்கைகொண்ட சோழபுரத்தை அமைத்த அரசர் யார் ?
5. இராசேந்திர சோழருக்கு வழங்கும் வேறு பெயர்கள் யாவை ?
6. கலிங்கத்துப் பரணியின் ஆசிரியர் யார் ?
7. 'சுங்கம் தவிர்த்த சோழர்' யார் ?
8. பெரியபுராணத்தை இயற்றியவர் யார் ?
9. 'பெரியபுராணம்' எந்தச் சோழ அரசர் காலத்தில் இயற்றப் பட்டது ?
10. சோழர் காலத்தில் வாழ்ந்த புலவர்களில் இருவரைக் குறிப்பிடுக.

III. மிகப்பொருத்தமான விடையை அடைப்புக் குறியினுள் இடுக.

1. உலகப் புகழ்வாய்ந்த பிரகதீஸ்வரர் ஆலயத்தைக் கட்டியவர்
   (a) முதலாம் இராசராசர்
   (b) முதலாம் இராசேந்திரர்
   (c) முதலாம் குலோத்துங்கன்
   (d) இரண்டாம் குலோத்துங்கன் ( )
2. முதலாம் இராசேந்திரருக்கு வழங்கிய வேறு பெயர்
   (a) மும்முடிச் சோழர்
   (b) இராசகேசரி
   (c) சிவபாதசேகர்
   (d) கடாரங்கொண்டான் ( )
3. தமிழ்ப் புலவர் செயங்கொண்டார் இம்மன்னர் காலத்தில் வாழ்ந்தார்
   (a) முதலாம் குலோத்துங்கர்
   (b) இரண்டாம் குலோத்துங்கர்
   (c) மூன்றாம் குலோத்துங்கர்
   (d) விக்கிரமச் சோழர் ( )

4. கங்கை கொண்ட சோழபுரத்தை நிர்மாணித்த அரசர
   (a) மூன்றாம் குலோத்துங்கர்
   (b) முதலாம் இராசராசர்
   (c) முதலாம் இராசேந்திரர்
   (d) விசயாலயச் சோழர் ( )

IV. நீங்களே செய்யுங்கள்.

1. பிற்காலச் சோழர் காலத்திய கோயில்களின் படங்களைச் சேகரித்து, அவற்றை உன்னுடைய படத்தொகுப்பேட்டில் ஒட்டவும்.
2. கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தியார், சேக்கிழார் முதலான புலவர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படிக்கவும்.
3. கலிங்கத்துப் பரணி, பெரியபுராணம், திருவிளையாடற் புராணம் போன்ற நூல்களிலிருந்து சில பாடல்களை இசை நயத்துடன் பாடவும்.
4. தஞ்சாவூர், உத்திரமேரூர் போன்ற இடங்களைச் சென்று பார்க்கவும்.

# 14. பிற்காலப் பாண்டியர்

## முன்னுரை

சங்க காலப் பாண்டியர்களான நெடுஞ்செழியன்களைப் பற்றி முன்னொரு பாடத்தில் படித்தோம். கி. பி. 7ஆம், 8ஆம் நூற்றாண்டுகளில் பாண்டியர்கள் ஆதிக்கம் தென்னித்தியாவில் ஏற்பட்டது. அவர்களுள் முக்கியமானவர் அரிகேசரி மாறவர்மன் என்பவர் ஆவார். இவர் கி.பி. 670–710 வரை ஆட்சி செய்தார். இவர் முதலில் சமண சமயத்தைப் பின்பற்றினார். பின்னர் திருஞானசம்பந்தரால் சைவ சமயத்தை ஏற்றுக்கொண்டார். இவருக்கு முதுகு வளைந்திருந்ததாகவும், பின்னர் அது சிவனருளால் நீங்கி அவர் நிமிர்ந்து நின்றார் எனவும் கூறப்படுகிறது. அதனால் அவர் 'கூன் பாண்டியன்'

என்றும், 'நின்றசீர் நெடுமாறன்' என்றும் அழைக்கப்பட்டார். கி.பி. 7,8 நூற்றாண்டுகளில் ஆட்சி செய்த பாண்டியர்கள் 'இடைக்காலப் பாண்டியர்கள்' என அழைக்கப்படுகின்றனர். இவர்கள் ஆட்சி முடிந்ததும் பிற்காலத் தஞ்சைச் சோழர்கள் தென்னிந்தியாவில் ஆதிக்கம் செலுத்தினர். கி.பி. 13ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சோழப் பேரரசு வீழ்ச்சி யடையவே பாண்டியர்கள் ஆட்சி ஏற்பட்டது. இவர்களே 'பிற்காலப் பாண்டியர்' எனப்படுவர்.

### முக்கிய மன்னர்கள்

முதல் மாறவர்மன் சுந்தர பாண்டியர் (கி.பி. 1216—1238): பிற்காலப் பாண்டிய மன்னர்களில் முதல் சிறந்த மன்னர் மாறவர்மன் சுந்தர பாண்டியர் ஆவார். இவர் சோழர்களை வென்று சோழ நாட்டைத் தமது அரசுடன் சேர்த்துக் கொண்டார்.

சடையவர்மர் சுந்தர பாண்டியர் (கி.பி. 1251—1272): முதல் மாறவர்மன் சுந்தர பாண்டியருக்குப் பின்னர் ஆண்ட அரசர்களில் சிறந்தவர் சடையவர்மன் சுந்தர பாண்டியர் ஆவார். இவர் ஒரு சிறந்த வீரராவார். இவர் தென்னிந்தியாவில் ஆட்சி செய்த மிகச்சிறந்த மன்னர்களில் ஒருவராவார். பாண்டிய நாட்டை மிகச்சிறந்த நிலைக்குக் கொண்டுவந்த பேரரசரும் இவரே. இவர் முதலில் சேர நாட்டின்மீது படையெடுத்து வெற்றியும் கண்டார். சேர அரசரைத் தமக்குக் கப்பம் செலுத்துமாறு செய்தார். இவர் ஹோய்சாலர்களையும், கொங்கு மன்னர்களையும் வென்றார். மேலும் காகதீய மன்னரை வென்று நெல்லூரைக் கைப்பற்றினார். இவரது பேரரசு தென்னிந்தியாவில் நெல்லூர் நகரம் வரை பரவி யிருந்தது. இவர் இலங்கையின்மீதும் படையெடுத்தார். இலங்கை மன்னரை வென்று அவரிடமிருந்து யானைகளையும், முத்து போன்ற பலவகை மணிகளையும் கப்பமாகப் பெற்றார். இவ்வாறு பல நாடுகளை வென்று செல்வச் செழிப்புடன் விளங்கினார். இவர் சைவர்களுக்கும் வைணவர்களுக்கும் உரிய கோயில்களான சிதம்பரம் நடராசர் கோயில், ஸ்ரீரங்கம் பெரிய கோயில் முதலியவற்றிற்குத் திருப்பணிகள் பல செய்தார்.

மாறவர்மன் குலசேகரர் (கி.பி. 1272-1311) : முதல் சடையவர்மன் சுந்தர பாண்டியருக்குப் பின் மாறவர்மன் குலசேகரர் அரியணை ஏறினார். இவர் மிகச் சிறந்த அரசராவார். சேர நாட்டில் ஏற்பட்ட உள்நாட்டுக் குழப்பத்தை அடக்கித் தமது ஆதிக்கத்தை அந்நாட்டின் மீது செலுத்தினார். இலங்கையின் மீதும் படையெடுத்தார். இவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர். போர்களில் தாம் கைப்பற்றிய பொருள்களைக் கொண்டு திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலை விரிவு படுத்தினார்.

## மார்கோ போலோவின் வருகை

குலசேகரப் பாண்டியர் காலத்தில் இத்தாலிய நாட்டு வெனிசு நகரத்தைச் சேர்ந்த மார்கோபோலோ பாண்டிய நாட்டிற்கு வந்தார். இவர் பாண்டிய நாட்டின் சிறப்பு, மன்னர்களின் ஆட்சிமுறை, வாணிகம் முதலியவற்றைப் பற்றித் தமது பயணக் குறிப்புகளில் எழுதியுள்ளார். தாமிரவருணி நதிக் கரையில் அமைந்திருந்த பாண்டியர்களின் துறைமுகப் பட்டினமாகிய காயல் மிகச் சிறந்து விளங்கியதாகவும் குறிப்பிட்டுள்ளார். குதிரைகள் மற்றும் விற்பனைக்குரிய பல பொருள்களை இத்துறைமுகத்திற்குக் கப்பல்கள் ஏற்றிக்கொண்டு வந்ததாகவும் எழுதியுள்ளார். "பாண்டிய நாடு முத்துகளுக்குச் சிறப்புற்று விளங்கியது. முத்துக் குளித்தலின் மூலம் அரசருக்கு அதிக வருவாய் கிடைத்தது. மக்களில் ஆண்-பெண் ஆகிய இருபாலாரும் தினமும் இரண்டுமுறை குளித்தனர்; உண்பதற்குத் தங்கள் வலக் கையைப் பயன்படுத்தினர். குற்றவாளிகளுக்குக் கடுமையான தண்டனைகள் வழங்கப்பட்டன" என்பன இவரது குறிப்புகளில் சில.

## பாண்டியர்களின் வீழ்ச்சி

குலசேகரரின் ஆட்சியின் கடைசிக் காலத்தில் இவரது மைந்தர்களிடையே பதவிச் சண்டைகள் ஏற்பட்டன. இவர் தமது இளைய மைந்தரான வீர பாண்டியரை அரசுப் பொறுப்பேற்கச் செய்தார். இவரது மூத்த மைந்தர் சுந்தரபாண்டியர் இதற்கு எதிராகக் கிளர்ச்சியில் ஈடுபட்டார். இக்கிளர்ச்சியே

பாண்டிய நாட்டின் அழிவிற்குக் காரணமாயிற்று. அலாவுதீன் கில்ஜியின் படைத் தலைவரான மாலிக்காபூர் குலசேகரரின் மூத்த மைந்தரின் அழைப்பின் பேரில் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்தார். இப்படையெடுப்பினால் பாண்டிய நாடு அழிவுற்றது.

## பாண்டியர் காலக் கலையும் சிற்பமும்

பாண்டிய மன்னர்கள் சமயப்பொறுமை உள்ளவர்களாகத் திகழ்ந்தனர். கலை, சிற்பங்கள், ஓவியங்கள் முதலியன போற்றப்பட்டன. மதுரை மீனாட்சி அம்மன் கோயிலும், திருவரங்கம் அரங்கநாதர் கோயிலும், தில்லை நடராசர் கோயிலும், திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலும் பாண்டியரது சிற்பத் திறனையும் கட்டடக் கலையையும் விளக்குகின்றன.

### பயிற்சிகள்

**I. விரிவான விடையளிக்கவும்**

1. பிற்காலப் பாண்டிய மன்னர்களில் மிகச் சிறந்தவர் யார்? காரணம் கூறுக.
2. மார்கோ போலோவின் பாண்டிய நாட்டு வருகைபற்றிக் குறிப்பு வரைக.

**II. சுருக்கமான விடையளிக்கவும்**

1. தில்லை நடராசர் கோயிலையும் திருவரங்கம் பெரிய கோவிலையும் அழகுபடுத்திய மன்னர் யார்?
2. பாண்டிய நாட்டிற்கு வருகை தந்த வெனிசு நகரப் பயணி யார்?

**III. காலி இடங்களைத் தக்க சொற்களால் நிரப்புக**

1. மார்கோ போலோ பாண்டிய நாட்டிற்கு வருகை தந்த போது ஆட்சியிலிருந்த பாண்டிய மன்னர் ————————.
2. பிற்காலப் பாண்டியரது துறைமுகப்பட்டினம் ————————
3. அலாவுதீன் கில்ஜியின் படைத்தலைவரான ———————— பாண்டிய நாட்டின் மீது படையெடுத்தார்.

**IV. நீங்களே செய்யுங்கள்**

1. பிற்காலப் பாண்டியர் போற்றிய கோயில்களின் படங்களைச் சேகரித்து உனது படத்தொகுப்பேட்டில் ஒட்டவும்.
2. மதுரைக்குக் கல்விப்பயணம் சென்று வரவும்.

# 15. இந்தியாவில் முஸ்லிம் ஆதிக்கத்தின் தோற்றம்

## முதல் முஸ்லிம் படையெடுப்பு

### அரேபியப் படையெடுப்பு (கி. பி. 712—கி. பி. 8ஆம் நூற்றாண்டு)

ஆசியாக் கண்டத்தின் தென்பகுதியில் மூன்று தீபகற்பங்கள் இருப்பதை நீங்கள் அறிவீர்கள். அவற்றுள் தென்மேற்கிலுள்ளது அரேபியாத் தீபகற்பம். அரேபியாவில் மெக்கா எனும் நகரில் கி. பி. 570-ல் முகமது நபி எனும் பெரியார் தோன்றினார். இவர் மக்களை நல்வழிப்படுத்த முயன்றார். இவர் போதித்த சமயம் இஸ்லாம் ஆகும். இஸ்லாம் சமயத்தைப் பின்பற்றுபவர்கள் முஸ்லிம்கள் ஆவர். திருக்குரான் இஸ்லாம் சமயத்தின் புனித நூலாகும்.

இஸ்லாம் சிரியா, எகிப்து, பாரசீகம், துருக்கி, ஆப்கானிஸ்தானம் முதலிய பகுதிகளில் விரைவாகப் பரவியது. பண்டைய காலத்தில் அரேபியர்கள் இந்தியாவுடன் வாணிகம் செய்து வந்தார்கள். இந்திய நாட்டின் செழுமையைப் பற்றியும், வளத்தைப்பற்றியும் இவர்கள் நன்றாக அறிந்திருந்தனர். இதனால் அரேபியர்கள் இந்தியாவின் மேற்குப் பகுதியைக் கைப்பற்றத் திட்டமிட்டனர். கி.பி. 712-ல் முகம்மது-பின்-காசிம் என்னும் அரேபியப் படைத் தலைவர் சிந்துவின்மீது படையெடுத்து அதைக் கைப்பற்றினார். அரேபியர்கள் அப்பகுதியைச் சில காலம் ஆண்டு வந்தார்கள். அவர்கள் ஆட்சி நீடித்து இருக்கவில்லை. சிந்து செழுமை வாய்ந்த பகுதி அல்ல. அதற்கு அருகில் வாழ்ந்து வந்த இராசபுத்திரர்களின் எதிர்ப்பினால் அரேபியர் முன்னேற முடியவில்லை. மேலும் தார் பாலைவனம் சிந்துவின் கிழக்கே இருந்தபடியால் அரேபியர்கள் சிந்துவைக் கடந்து கிழக்கே போக முடியவில்லை.

சிந்து படையெடுப்பு முஸ்லிம்கள் இந்தியாவின் மீது எடுத்த முதல் படையெடுப்பு ஆகும். இரண்டாவது முஸ்லிம் படையெடுப்பு 11ஆவது, 12ஆவது நூற்றாண்டுகளில் தொடங்கியது. அது துருக்கி ஆப்கானியர் படையெடுப்பாகும். இதனால் நிரந்தர முஸ்லிம் ஆட்சி ஏற்பட்டது. அந்தப் படையெடுப்பில் வந்த முதன்மையான முஸ்லிம் மன்னர்களுள் முக்கியமானவர் கஜினி முகம்மது ஆவார்.

## இரண்டாம் முஸ்லிம் படையெடுப்பு—துருக்கிய—ஆப்கானியப் படையெடுப்பு

(கி. பி. 11, 12 ஆம் நூற்றாண்டுகள்)

**கஜினி முகம்மது (கி. பி. 11ஆம் நூற்றாண்டு)**

இந்திய உபகண்டத்தின் வடமேற்கில் உள்ளது ஆப்கானிஸ்தானம். கி. பி. பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் ஆப்கானிஸ்தானில் கஜினி எனும் நகரைத் தலைநகராகக் கொண்டு ஒரு முஸ்லிம் அரசு தோன்றியது. இதனைத் தோற்றுவித்தவர் சபக்டிஜின் எனும் ஓர் அரசராவார். அவருக்குப் பின் அந்த நாட்டை ஆண்டவர் அவரது புதல்வரான முகம்மது ஆவார். அவர் சிறந்த ஆற்றலும் வீரமும் ஒருங்கே பெற்றவர்.

கஜினி முகம்மது இந்திய நாட்டின் வளத்தினைப்பற்றியும் செல்வத்தினைப்பற்றியும் கேள்வியுற்று இருந்தார். அவர் இந்தியாவின் மீது படையெடுத்து அந்நாட்டின் செல்வத்தை எடுத்துச் செல்ல வேண்டுமென்று விரும்பினார். அவர் இந்தியாவின் மீது படையெடுத்தது தம் சமயத்தினைப் பரப்பவோ நிலையான ஆட்சியினை ஏற்படுத்துவதற்கோ அல்ல. இவர் இந்தியாவின் மீது பதினேழு முறைகள் படையெடுத்து இந்தியாவில் பல வெற்றிகள் அடைந்தார். முதன் முதலாக கி. பி. 1001 இல் பஞ்சாபைத் தாக்கி அதன் அரசராகிய ஜெயபாலரைத் தோற்கடித்தார்.

பின்னர் கன்னோசி, வடமதுரை, கூர்ச்சரம் முதலிய பகுதிகளைத் தாக்கினார். அவருடைய முக்கிய படையெடுப்பு சோம

நாதபுரம் படையெடுப்பாகும். கி. பி. 1025-ல் முகம்மது கூர்ச்சரத்திலுள்ள சோமநாத புரத்தின் மீது படையெடுத்து அங்குள்ள ஆலயத்தினைத் தாக்கினார். அங்குள்ள இந்துக்கள் முகம்மதுவை மிகக் கடுமையாக எதிர்த்தனர். அவர்களின் எதிர்ப்பு முறிவுற்றது. ஆலயத்திற்குள் முகம்மது சென்று விக்கிரகத்தை உடைத்து அங்குள்ள செல்வத்தையெல்லாம் தம் நாட்டிற்கு எடுத்துச் சென்றார்.

தாம் இந்தியாவில் திரட்டிய செல்வத்தைக் கொண்டு கஜினியில் ஒரு பல்கலைக் கழகத்தை ஏற்படுத்தினார். அவர் காலத்தில் கஜினி கலைக்கும், இலக்கியத்திற்கும், அறிவியலுக்கும் ஒரு முக்கிய இடமாக விளங்கியது. முகம்மது கற்றோரைப் போற்றினார். இவருடைய அவையில் பல புலவர்கள் இருந்தனர். பாரசீகப் புலவர் பிர்தௌசி முகம்மது கஜினியின் அவையில் இருந்தார். இவர் 'ஷாநாமா' என்னும் நூலினை இயற்றியுள்ளார். முகம்மது கஜினியின் பேரரசு காஸ்பியன் கடலிலிருந்து பஞ்சாப் வரை பரவியிருந்தது.

முகம்மது கோரி (கி. பி. 12 ஆம் நூற்றாண்டு)

கஜினி முகம்மதுவிற்குப் பிறகு அவருடைய பேரரசு சிதறி வீழ்ச்சியடைந்தது. கஜினிக்கு அருகில் உள்ள கோரி என்னும் நகர் முன்னேற்றம் அடைந்தது. அதனையாண்ட அரசர் முகம்மது கோரி கி. பி. 1175 ல் இந்தியாவின்மீது படையெடுத்து மூல்தானைக்கைப்பற்றினார். 1186 ல் மறுபடியும் படையெடுத்து லாகூரை வென்றார். இந்தியாவில் ஒரு முஸ்லிம் அரசை நிறுவ வேண்டும் என்று அவர் விரும்பினார்.

அச் சமயத்தில் வடமேற்கு இந்தியாவில் பல சிறிய அரசுகள் இருந்தன. அவை இராசபுத்திர அரசர்களால் ஆளப்பட்டு வந்தன. இராசபுத்திர அரசர்களிடையே ஒற்றுமை நிலவவில்லை. கி.பி. 1191 ல் முகம்மது கோரி நம் நாட்டின் மீது மறுபடியும் படையெடுத்தார். ஆஜ்மீரையும் டில்லியையும் ஆண்டு வந்த பிருதிவிராஜன் கோரியை எதிர்த்தார். பிருதிவிராஜன் வீரமும் தீரமும் படைத்த அரசராவார். கி.பி. 1191ல் தானேஸ்வரத்திற்கு அருகில் உள்ள தரேயின் என்னுமிடத்

தில் கோரி முகம்மதுவிற்கும் பிருதிவிராஜனுக்குமிடையே போர் நடந்தது. பல இராசபுத்திர மன்னர்கள் தம் படைகளுடன் பிருதிவிராஜனுக்கு உதவி புரிந்தனர். ஆனால் கன்னோசியை ஆண்ட ஜெயச்சந்திரன் பிருதிவிராஜனுக்கு ஆதரவு அளிக்கவில்லை. இருப்பினும் இப்போரில் முகம்மது கோரி தோல்வியுற்று தம்நாடு திரும்பினார்.

தோல்வியைக் கண்டு மனம் தளராமல் முகம்மது கோரி அடுத்த ஆண்டே ஒரு வன்மை மிக்க படையைத் திரட்டிக் கொண்டு இந்தியாவின் மீது படையெடுத்தார். மறுபடியும் தரேயினில் கோரிக்கும் பிருதிவிராஜனுக்குமிடையே போர் நடந்தது. இம் முறை கோரி வெற்றி பெற்றார். பிருதிவிராஜன் தோல்வியுற்றார். அவர் போரில் கொல்லப்பட்டார். இந்த இரண்டாம் தரேயின் போர் வடஇந்தியாவில் முஸ்லிம் ஆதிக்கம் ஏற்பட அடிகோலியது. டில்லி முகம்மதுகோரியின் வசமாயிற்று. பிறகு ஆஜ்மீரையும் அவர் கைப்பற்றினார். கி.பி. 1194 ல் கன்னோசியைத் தாக்கி அதன் அரசர் ஜெயச்சந்திரனைத் தோல்வியுறச் செய்தார். ஜெயச்சந்திரர் கொல்லப்பட்டார். வடஇந்தியாவில் பெரும்பகுதியை முகம்மது கோரி வென்றார். தாம் வென்ற இந்தியப் பகுதிகளை ஆட்சி செய்யத் தம் நம்பிக்கைக்குரிய அடிமையாகிய குத்புதீன் ஐபக் என்பவரிடம் பொறுப்பினைக் கொடுத்து கோரி தம் நாட்டிற்குத் திரும்பினார். குத்புதின் முகம்மது கோரியின் பிரதிநிதியாக இருந்து ஆட்சி செலுத்தினார். கோரி இந்தியாவிலிருந்து ஆப்கானிஸ்தானத்திற்குத் திரும்பும்போது ஜீலம் நதிக்கரையில் தமது எதிரிகளால் கி.பி. 1205 ல் கொல்லப்பட்டார். இதன் காரணமாகக் குத்புதீன் டில்லியின் முதல் சுல்தானாகப் பதவியேற்று, 1206 ல் ஆட்சிக்கு வந்தார். குத்புதீன் கோரியின் அடிமையாய் இருந்து பின்பு தளகர்த்தராகவும் இராஜப் பிரதிநிதியாகவும் இருந்து கடைசியில் சுல்தானாகவும் ஆனார். இவரும் இவர் வழியில் இவருக்குப் பின் ஆண்ட சுல்தான்களும், அடிமை அரசர்கள் என அழைக்கப்பட்டார்கள். இராசபுத்திரர்களின் ஒற்றுமையின்மையும், அவர்களது பயனளிக்காத போர் முறைகளும் இந்தியாவில் முஸ்லிம் ஆதிக்கம் ஏற்பட வழிவகுத்தன.

# இந்தியாவில் முஸ்லிம் ஆட்சி
## (கி.பி. 1206 — 1526)

### அடிமை வமிசம் *(கி. பி. 1206—1290)*

குத்புதீன் *(1206 — 1210)* : முகம்மது கோரி இறந்த பின்னர் இராஜப் பிரதிநிதியாக இருந்த குத்புதீன் டில்லியின் முதல் சுல்தானாக விளங்கிஆட்சி புரிந்தார். வட இந்தியாவின் ஒரு பெரும்பகுதியைத் தம் குடையின் கீழ்க் கொண்டு வந்தார். நிலையான ஆட்சியை ஏற்படுத்தினார். இவர் தமது வெற்றிக்கு அறிகுறியாக டில்லியில் குதுப்மினார் என்னும் உயர்ந்த கோபுரத்தைக் கட்ட முனைந்தார். ஆனால், அதன் ஒரு பகுதியைத்தான் கட்டினார். இவர் கி.பி.1210 ல் இறந்தார்.



படம் 26. குதுப்மினார்

அல்டமிஷ் *(1211—1235)*

குத்புதீனுக்குப் பின்னர் வந்த திறம் படைத்த சுல்தான் அல்டமிஷ் ஆவார். இவர் குத்புதீனுடைய அடிமைகளில் தலைசிறந்தவர். குறை நின்ற குதுப்மினாரைக் கட்டி முடித்தார். இவர் ஆட்சியின் போது மங்கோலியத் தளகர்த்தரான செங்கிஸ்கான் இந்தியாவின் மீது படையெடுத்தார். அதிர்ஷ்டவசமாக அவர் மேலும் இந்தியாவிற்குள் செல்லாமல் தமது நாடு திரும்பினார்.

## சுல்தானா ரஸியா (1236-1239)

அல்டமிஷுக்குப் பிறகு அவரது மகளான சுல்தானா ரஸியா அரசுரிமைபெற்றார். டில்லி அரியணையில் வீற்றிருந்த முதல் பெண்ணரசி இவரேயாவார். சுல்தானா ரஸியா செல்வாக்கு படைத்தபிரபுக்களின் சூழ்ச்சிக்குப் பலியாகித் தம் கணவருடன் கொலையுண்டார்.

## கியாசுதீன் பால்பன் (1266—1287)

சுல்தானா ரஸியாவிற்குப் பின்னர் சிறந்த முறையில் டில்லி சுல்தானாக ஆட்சி செலுத்தியவர் கியாசுதீன் பால்பன் ஆவார். அவர் இராஜதந்திரம் படைத்தவர். அவர் வாழ்ந்த காலம் கடுமையான காலமாகும். இதனால் அவர் கண்டிப்பாக வும் விழிப்புடனும் இருந்தார். கோட்டைகளைக் கட்டி சிறந்த படையினரை நிறுத்தி மக்களுக்குப் பாதுகாப்பு அளித்தார். வடமேற்கு எல்லையில் மங்கோலியரது படையெடுப்பைத் தடை செய்ய முயற்சிகள் செய்தார். திறம் படைத்த ஒற்றர் முறையை ஏற்படுத்திப் பிரபுக்களின் சூழ்ச்சிகளை அறிந்து அவர்களின் சதித்திட்டங்களை ஒழித்தார். மூல்தானில் கவர்னராக இருந்த பால்பனின் மைந்தரான முகம்மது அவை யில் 'இந்தியாவின் கிளி' என்று போற்றப்படும் அமீர்குஸ்ரு என்ற புலவர் இருந்தார்.

## அடிமை வமிசத்தின் வீழ்ச்சி

பால்பனுக்குப் பிறகு அடிமை வமிசத்தில் சிறந்த சுல்தான் கள் எவருமில்லை. திறமையற்ற சுல்தான்களின் ஆட்சியாலும் அரசியல் சூழ்ச்சிகளாலும், பிரபுக்களிடையே ஏற்பட்ட போட்டி களாலும் அடிமை வமிசத்தின் வலிமை குன்றியது. ஜலாலுதீன் கில்ஜி என்பவர் டில்லி அரசைக் கைப்பற்றினார்.

# கில்ஜி வமிசம் (கி.பி.1290—1320)

## அலாவுதீன் கில்ஜி (1296—1316)

கில்ஜி வமிசத்தைத் தோற்றுவித்தவர் ஜலாலுதீன் கில்ஜி ஆவார். இவர் சுல்தானாகப் பதவியேற்றபோது எண்பது

வயது முதியவராகவும் வலிமை குன்றியவராகவும் இருந்தார். இவருடைய மருமகனான அலாவுதீன் கில்ஜி தளகர்த்தராக விளங்கினார். ஜலாலுதீன் கில்ஜியின் ஆணையின்படி மாளவத்தின் மீது அலாவுதீன் கில்ஜி படையெடுத்தார். அங்கிருந்து தேவகிரிக்குச் சென்று, அங்குள்ள மன்னரைத் தோற்கடித்து பெரும் பொருளைத் திரட்டி வந்தார். வெற்றி வாகையுடன் திரும்பிய அலாவுதீன் கில்ஜி நயவஞ்சகமாகத் தம் மாமனாரைக் கொன்று டில்லியின் ஆட்சி பீடத்தைக் கைப்பற்றினார்.

அலாவுதீனின் வெற்றிகள் : அலாவுதீன் கில்ஜி பிரபுக்களின் கிளர்ச்சிகளை ஒடுக்கினார். அவர்கள் தனித்தனியாகப் படை வைத்துக் கொள்வதைத் தடுத்தார். விருந்துகள் வாயிலாக பிரபுக்கள் சந்தித்துக் கொள்வதைத் தடுத்தார். ஒற்றர்கள் மூலம் பிரபுக்களின் நடவடிக்கைகளைக் கண்காணித்தார்.

மங்கோலியர்களால் அவராட்சிக்கு ஆபத்து ஏற்பட்டது. ஒரு பெரும் படைக்குத் தாமே தலைமை தாங்கிச்சென்று மங்கோலியர்களைத் தோற்கடித்து விரட்டினார். பின்னர் டில்லிக்கும் தம்முடைய அரசின் எல்லைக்குமிடையே இருந்த கோட்டைகளை வலிவாக்கி நிரந்தரப் படையினரை நிறுத்தித் தம் அரசைக் காத்தார்.

அலாவுதீன் இந்தியா முழுவதையும் வென்று ஒரு பேரரசை நிறுவ விருப்பங்கொண்டார். கூர்ச்சரம் இவராட்சியின்கீழ் வந்தது. ரான்தம்பூர், சித்தூர் முதலிய இராஜபுதன நகரங்களின் மீது படையெடுத்து வென்றார். தீரமிக்க இராசபுத்திரர்களின் தாயகமான மேவார் இராச்சியம் சுல்தானின் ஆட்சிக்கு அடிபணிந்தது.

அலாவுதீன் தென்னிந்தியாவைத் தமது பேரரசில் இணைத்துக் கொள்ள தமது தலைசிறந்த தளகர்த்தரான மாலிக்காபூர் தலைமையில் ஒரு பெரும்படையை அனுப்பினார்.

மாலிக்காபூர் தேவகிரியை ஆண்ட யாதவ மன்னரை அடிபணியச் செய்து டில்லி சுல்தானுக்குத் திறை செலுத்துமாறு செய்தார். வாரங்கலிலுள்ள காகதிய மன்னரை வென்றார்.

கி. பி. 1310-ல் துவாரசமுத்திரத்திலிருந்து ஆட்சி செய்து வந்த ஹோய்சாலர்களைத் தாக்கி அவர்களைச் சரணடையச் செய்தார். பின்னர் இவர் பாண்டியர்கள் ஆண்டுவந்த




படம் 27. அலாவுதீன் கில்ஜியின் பேரரசு

மதுரையைத் தாக்கி, வெற்றி பெற்று, பெருஞ் செல்வத்துடன் டில்லிக்குத் திரும்பினார்.

**அலாவுதீன் கில்ஜியின் நிர்வாகம்:** அலாவுதீன் வீரராக மட்டும் அல்லாமல் சிறந்த ஆட்சியாளராகவும் விளங்கினார். பிரபுக்கள் ஒடுக்கப்பட்டனர். ஒவ்வொரு பிரபுவின் ஜாகிரின் பரப்பும் குறைக்கப்பட்டது. அதனால் அவர் பலம் குறைந்தது. விவசாயிகள் தம் விளைச்சலில் அரைப் பங்கினை வரியாக சுல்தானுக்குக் கொடுத்தனர். இராணுவ வீரர்களின் ஊதியத்தை அவர் உயர்த்தவில்லை. ஆனால் குறைந்த ஊதியத்திலுள்ளோரும் தம் வாழ்க்கையை நிறைவாய் நடத்தப் பொருள்களின் விலைகளை நிர்ணயித்தார். நிலவரியைத் தானியமாகவோ பணமாகவோ அரசாங்கத்திற்கு விவசாயிகள் செலுத்தலாம் என ஏற்பாடு செய்தார். இதற்காக தானியக் களஞ்சியங்கள் ஏற்படுத்தப்பட்டன. தனிப்பட்டவர் தானியத்தைப் பதுக்கி வைப்பது தடை செய்யப்பட்டது. நிறுத்தல் அளவைகளுக்குரிய விதிகளை மீறிய வணிகர் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். அமீர்குஸ்ரு போன்ற புலவர்கள் அவர் அவையினை அலங்கரித்தனர்.

### கில்ஜி வமிசத்தின் வீழ்ச்சி

அலாவுதீனுக்குப் பிறகு கில்ஜி வமிசம் சீரழிந்தது. அவ்வமிசத்தின் கடைசி சுல்தானை கியாசுதீன் துக்ளக் தோல்வியுறச் செய்து டில்லியைக் கைப்பற்றினார். பிறகு டில்லியில் துக்ளக் வமிசத்தின் ஆட்சி தொடங்கியது.

## துக்ளக் வமிசம்

### முகம்மது பின் துக்ளக் *(1325—1351)*

கில்ஜிவமிசத்தைப் பதவியிலிருந்து நீக்கிய கியாசுதீன் துக்ளக் சிறிது காலமே ஆட்சி புரிந்தார். இவருக்குப்பின் இவரது மகன் ஜுனா, முகம்மது பின் துக்ளக் எனும் பெயரில் அரியணை ஏறினார். இவர் ஒரு சிறந்த அறிஞர். பாரசீகக் கவிதைகளை நன்கு கற்றுணர்ந்தவர். தர்க்க சாத்திரம் கிரேக்க தத்துவ சாத்திரம் ஆகியவற்றைக் கற்றவர். சிறந்த

கணித மேதையாகவும் அறிவியல் நாட்டம் கொண்டவராகவும் விளங்கினார். நேர்த்தியாக எழுதும் ஆற்றல் படைத்தவர். போர்த்திறன் படைத்துப் பல களங்களில் வெற்றி கண்டவர். அவர் எளிய பழக்கவழக்கங்களை மேற்கொண்டார். அவர் பண்புகளில் எளிமையும், தாராள மனப்பான்மையும் தலை சிறந்து விளங்கின. எனினும், அவர் மிகச் சிறந்த, ஆனால் நடைமுறைக்கு ஒத்துவராத குறிக்கோள்களைக் கடைபிடித்தார். சமயத்துறையில் பரந்த நோக்கம் உள்ளவராக இருந்தபோதிலும் அவர் இரக்கமற்றவராகவும் இருந்தார். அவரது விவேகமற்ற செயல்கள் டில்லி முஸ்லீம் ஆட்சியைப் பாழ்படுத்தின.

தலைநகர் மாற்றம் : டில்லி முஸ்லிம் இராச்சியத்தின் தலைநகராக இருந்தது. அலாவுதீன் கில்ஜி காலத்திலிருந்து இராச்சியம் பேரரசாக வளரவே, டில்லி பேரரசின் வடபகுதியில் இருப்பது நல்லதல்ல என்று முகம்மது துக்ளக் எண்ணினார். தலைநகரம் பேரரசின் நடுவில் இருக்க வேண்டுமென்று சுல்தான் விரும்பினார். மங்கோலிய ஆபத்தினின்றும் அதனைக் காக்க வேண்டுமென்று நினைத்தார். இதனால் தம் தலை நகரை டில்லியிலிருந்து தக்காணத்திலுள்ள தௌலதாபாத் என்று அழைக்கப்பட்ட தேவகிரிக்கு மாற்றினார். அங்குத் தம் அரசு அலுவலர்களும் மக்களும் வாழக் கட்டடங்களைக் கட்டினார். தலைநகரை மாற்றியது மட்டுமல்லாமல் டில்லியில் வாழ்ந்த மக்களையும் தௌலதாபாதிற்குச் செல்ல ஆணை பிறப்பித்தார். வழியில் மக்கள் பல இன்னல்களுக்கு உள்ளாயினர்; பலர் இறந்தனர். தலைநகர் மாற்றம் பல இன்னல்களை ஏற்படுத்தவே, முகம்மது தமது எண்ணத்தை மாற்றிக் கொண்டார். மக்களின் துன்பத்தைப் பாராது மீண்டும் டில்லிக்கே திரும்பிச் செல்லுமாறு அவர்களைப் பணித்தார். மக்கள் சொல்லொணாத் துயரங்களுக்கு உள்ளாயினர். இது ஒரு விவேகமற்ற செயல்.

நாணயச் சீர்திருத்தம் : நடைமுறைக்கு ஒத்துவராத திட்டங்களை அமுல்படுத்தியதன் காரணமாக சுல்தானின்

கருவூலம் காலியாயிற்று. ஆட்சியை நடத்துவதற்கும், நாடு களைக் கைப்பற்றும் திட்டங்களை நிறைவேற்றுவதற்கும் அவருக்குப் பெரும் பணம் தேவைப்பட்டது. அவர் காலத்தில் தங்க, வெள்ளி நாணயங்கள் வழக்கில் இருந்தன. இனிமேல் செப்பு, அல்லது பித்தளை நாணயங்களும்கூடத் தங்க வெள்ளி நாணயங்களைப் போன்று வழக்கில் இருக்கும் என்று உத்தர விட்டார். போலி செப்பு நாணயங்கள் வெளியிடப்பட்டன. ஒவ்வொரு கிராமமும் செப்பு நாணயம் வெளியிடும் ஆலை யாக மாறியது. போலி செப்பு நாணயங்கள் அரசரின் கரு வூலத்தில் வந்து குவிந்தன. தங்கமும் வெள்ளியும் அங்கிருந்து வெளியேறின. இதனால் வாணிகமும் தொழில்களும் பெரிதும் பாதிக்கப்பட்டன. அதனால் சுல்தான் செப்பு நாணயங்களை வெளியிடுவதை நிறுத்தினார். இது மற்றொரு விவேகமற்ற செயல்.

**இமயமலை நாடுகளுடன் போர்:** மூன்றாவதாக துக்ளக் இமயமலை நாடுகளுடன் போரிட எண்ணம் கொண்டார். ஒரு படையையும் அனுப்பினார். படைவீரர் பனிமூடிய சிகரங் களைக் கடந்து செல்ல வேண்டியவர்களாக இருந்தனர். அவர்கள் குளிரினால் பாதிக்கப்பட்டனர். குளிரில் தங்களைக் காப்பாற்றிக் கொள்ள அவர்களிடத்தில் போதிய சாதனங்களும் இல்லை. இப்படையெடுப்பில் ஆயிரக்கணக்கான படைவீரர்கள் உயிரிழந்தனர்.

**விவேகமற்ற திட்டங்களின் விளைவுகள்:** துக்ளக்கின் விவேகமற்ற திட்டங்களினால் பெருமளவிற்குப் பொருட்சேத மும் உயிர்ச்சேதமும் ஏற்பட்டன. மாநிலங்களிலுள்ள முஸ்லிம் ஆளுநர்களும் இந்துத் தலைவர்களும் இவரை எதிர்த்தனர். சில ஆளுநர்கள் தன்னாட்சி பெற்றனர். இவருடைய இறுதிக் காலம் அமைதியின்றிக் காணப்பட்டது.

## பிரோஸ்ஷா துக்ளக் (1351—1388)

முகம்மது பின் துக்ளக்கிற்குப் பின்னர் அவருடைய ஒன்று விட்ட சகோதரரான பிரோஸ்ஷா துக்ளக் டில்லி சுல்தான் ஆனார். முகம்மது பின் துக்ளக்கின் ஆட்சியில் நிகழ்ந்த

கொடுமைகளுக்கு உள்ளான மக்களின் துயரத்தைப் போக்க இவர் பாடுபட்டார். இவர் நியாயமற்ற வரிகளை நீக்கினார். இவர் விவசாயத்திற்குத் தனிக் கவனம் செலுத்தினார். நீர்ப் பாசனவசதிகளை அதிகரித்து நீர்ப்பாசன வரியை விதித்தார். பிரோஸ்ஷா துக்ளக் மசூதிகளையும் கல்லூரிகளையும் கட்டினார், அவர் பல நகரங்களை அமைத்தார். அவற்றுள் முக்கியமானவை ஜான்பூர், ஹிஸ்ஸார், பிரோஸ்ஷாபாத் முதலியன ஆகும். அவருக்குப் பிறகு வந்த சுல்தான்கள் திறமையற்றவர்கள். கி. பி. 1398 ல் சாமர்கண்டின் அரசரான தைமூர் என்பவர் டில்லியின் மீது படையெடுத்து வந்து கொள்ளை அடித்தார். தைமூரின் படையெடுப்பு துக்ளக் ஆட்சியின் வீழ்ச்சியைத் துரிதப்படுத்தியது. இந்தியாவில் குழப்பமும் அமைதியின்மையும் நிலவின.

## சையது வமிசம் (கி.பி. 1414—1451)

தைமூரின் படையெடுப்பிற்குப் பிறகு ஏறக்குறைய பதினைந்து ஆண்டுகளுக்கு நிலையான சுல்தான்களின் ஆட்சி டில்லியில் நடைபெறவில்லை. பின்னர் சையது வமிசத்தவரான கிஸீர்கான் டில்லி சுல்தானாகப் பதவியேற்றார். இவருக்குப் பின் இவ்வமிசத்தைச் சேர்ந்த சுல்தான்கள் மூவர் டில்லியையும் அதைச் சுற்றியுள்ள இடங்களையும் ஆண்டுவந்தனர். சையது சுல்தான்கள் அராபியர்கள்.

## லோடி வமிசம் (கி.பி. 1451—1526)

சையது வமிசத்துக் கடைசி சுல்தான் அலாவுதீன் ஆவார். அவர் திறமையற்றவர். அவர் லாகூரின் ஆளுநரான பஹ்லோல் கான் லோடியினிடத்தில் அரசாட்சியை ஒப்படைத்து விட்டு பதௌன் என்னும் இடத்திற்குச் சென்று அங்கு இன்ப கேளிக்கைகளில் காலங்கழித்தார். பஹ்லோல் லோடி ஓர் ஆப்கானியர் ஆவார். லோடி வமிசத்தின் சிறந்த சுல்தான் சிக்கந்தர் லோடி ஆவார். அவருடைய மைந்தரான இப்ரஹீம் அவருக்குப்பின் அரியணை ஏறினார். இப்ராஹீம் லோடி இவ்வமிசத்தின் கடைசி சுல்தான் ஆவார். இவர்

கொடுங்கோலாட்சி புரிந்தார். மக்கள் இவரை வெறுத்தனர். லாகூரின் ஆளுநர் தௌலத்கான் லோடி சுல்தானை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தார். அவர் காபூலினை ஆட்சி செய்துகொண்டு இருந்த பாபரை இந்தியாவின்மீது படையெடுக்கும்படி அழைத்தார். அதைப் பயன்படுத்தி பாபர் இந்தியாவின்மீது படையெடுத்து கி.பி. 1526 ல் நடைபெற்ற முதல் பானிப்பட்டு போரில் இப்ராஹீம் லோடியைத் தோல்வியுறச் செய்தார். பாபரால் இந்தியாவில் மொகலாய அரசு முதன்முதலில் நிறுவப்பட்டது.

## டில்லி சுல்தான்களின் ஆட்சியால் ஏற்பட்ட விளைவுகள்

### இஸ்லாம் மத வளர்ச்சி

டில்லி சுல்தான்களின் ஆட்சி இந்தியாவில் சுமார் முந்நூறு ஆண்டுகளுக்குமேல் நடைபெற்றது. ஆட்சிமுறை பெரும்அளவிற்குச் சமயத்தினைச் சார்ந்திருந்தது. நீடித்த காலத்திற்குச் சுல்தான்களின் ஆட்சி இருந்த காரணத்தினால் இஸ்லாம் சமயம் பரவியது. இந்தியாவில் முஸ்லிம் சமூகத்தினர் முன்பு இருந்ததைவிட அதிகமாயினர்.

### மொழிகளின் வளர்ச்சி

சுல்தான்களின் ஆட்சியில் உருது மொழி வளர்ந்தது. பாரசீக மொழி, அராபிய மொழி, துருக்கி மொழி, வடமொழி, முதலியவற்றின் கலப்பால் உருது மொழி தோன்றியது. பல முஸ்லீம் கவிவாணர்கள் இந்தியில் கவிதைகளை இயற்றினர். இந்து எழுத்தாளர்கள் பாரசீக மொழியில் பல நூல்களை இயற்றியுள்ளனர். அமீர்குஸ்ரு என்னும் கவி, கவிதைகள் எழுதுவதில் சிறந்து விளங்கினார்.

### பக்தி இயக்கம்

இந்து சமயமும் இஸ்லாம் சமயமும் ஒன்றோடொன்று நட்புரிமையுடன் பழகின. இதன் பயனாக பக்தி இயக்கம் வட இந்தியாவில் தொடங்கியது. இராம நந்தர், வல்லபாச்

சாரியார், சைதன்யர் முதலியோர் இவ்வியக்கத்தில் ஈடுபட்டு எழுத்தறிவு படைக்காத மக்களிடையே பக்தி மார்க்கத்தைப் பரப்பினர். பக்தி நெறியை போதித்த இப்பெரியார்கள் எல்லாச் சமயங்களின் சமத்துவத்தை எடுத்து விளக்கினர். 'ஒருவனே தேவன்' என்னும் கருத்தை இவர்கள் எடுத்தியம்பினர். பக்தி நெறியைப் போதித்த பெரியார்களுள் சிறந்தவர் பக்த கபீர்தாஸர் ஆவார். பக்தி இயக்கத்தைப் பரப்பிய மீராபாய் இனிய பாக்கள் பலவற்றை இயற்றியுள்ளார்.

### இந்தோ-சாரசானிக் கட்டடக் கலை

இந்தியக் கட்டடக் கலையின் மேன்மைக்கு சுல்தான்களின் ஆட்சி சிறந்த முறையில் தொண்டாற்றியுள்ளது. இந்தியக் கலையும் இஸ்லாமியக் கலையும் ஒருங்கிணைந்து செயல்பட்டு பெருமை தேடிக்கொண்டன. புதியதாக உருவான கட்டடக் கலைக்கு குதுப்மினார் தூபி ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். கூர்ச்சரத்தில் கட்டப்பட்டுள்ள ஜாமி மசூதி 260 தூண்களைப் பெற்ற எழில்மிக்க, கண்ணைக் கவரும் கட்டடமாக அமைந்துள்ளது.

## சுல்தான்கள் ஆட்சியின் வீழ்ச்சி- காரணங்கள்

இறுதியாகச் சுல்தான்களின் ஆட்சி வீழ்ச்சியடைந்தது. அதற்குப் பல காரணங்கள் உண்டு. சுல்தான்கள் சுகபோக வாழ்வில் இன்பங்கண்டு ஆட்சியினைச் செம்மையாக நடத்தவில்லை. பிரபுக்களின் கிளர்ச்சியால் மாநிலங்கள் சுயேச்சை பெற்றன. முகம்மது-பின்-துக்ளக்கின் விவேகமற்ற செயல்கள் ஆட்சியைப் பலமிழக்கச் செய்தன. பிரபுக்களுக்கு ஜாகிர் வழங்கும் முறை அவர்களுடைய செல்வாக்கினை வளர்த்தது. தைமூரின் இந்தியப் படையெடுப்பும், இப்ராஹீம் லோடியின் கொடுங்கோன்மையான ஆட்சியும் டில்லி சுல்தான்களின் ஆட்சியின் வீழ்ச்சிக்கு அடிகோலின.

## பயிற்சிகள்

**I. விரிவான விடையளிக்கவும்**

1. கஜினி முகம்மது யார்? அவரைப்பற்றி குறிப்பு வரைக.
2. கோரி முகம்மது ஏன் இந்தியாவின்மீது படையெடுத்தார்? அவர் எப்போது தரேயினில் வெற்றி பெற்றார்?
3. அடிமை வமிசத்தின் சிறந்த சுல்தான் யார்? காரணங்கள் கூறுக.
4. அலாவுதீன் கில்ஜியின் சீர்திருத்தங்களைக் குறிப்பிடுக.
5. முகம்மது-பின்-துக்ளக் கடைபிடித்த விவேகமற்ற செயல்கள் யாவை?
6. டில்லி சுல்தான்களின் ஆட்சியால் ஏற்பட்ட விளைவுகளில் ஏதேனும் நான்கினைக் குறிப்பிடுக.
7. சுல்தான்களின் ஆட்சி ஏன் வீழ்ச்சியடைந்தது?

**II. சுருக்கமான விடையளிக்கவும்**

1. முதன்முதலாக நம் நாட்டின்மீது படையெடுத்த அரேபியப் படைத்தலைவர் யார்?
2. கஜினி முகம்மது எவ்வாண்டு சோமநாதபுரத்தைத் தாக்கினார்?
3. அடிமை வமிசத்தை டில்லியில் தோற்றுவித்தவர் யார்?
4. குதுப்மினாரைக் கட்டி முடித்த டில்லி சுல்தான் யார்?
5. அலாவுதீன் கில்ஜியின் படைத் தலைவர்களுள் தலைசிறந்தவர் யார்?
6. முதல் பானிப்பட்டுப் போர் யார் யாரிடையே எந்த ஆண்டில் நடந்தது?

**III. கோடிட்ட இடங்களை நிரப்புக**

1. அரேபியாவில் கி. பி. 570-ல் ———— என்னும் பெரியார் தோன்றினார். அவர் போதித்த சமயம் ———— ஆகும்.
2. கி. பி. 1191ஆம் ஆண்டில் டில்லியை ஆண்ட இராசபுத்திர மன்னர் பிருதிவிராஜன் ———— என்னுமிடத்தில் ————வைத் தோற்கடித்தார்.
3. ———— டில்லியை ஆண்ட முதல் பெண்ணரசி ஆவார்.

4. முகம்மது-பின்-துக்ளக் ———— லிருந்து ———— என்ற இடத்திற்குத் தம் தலைநகரை மாற்றினார்.
5. கி. பி. 1398-ல் இந்தியாவின்மீது படையெடுத்த அரசர் ———— ஆவார்.

**IV. நீங்களே செய்யுங்கள்**

1. இந்தியா வரைபடத்தில் அலாவுதீன் பேரரசைக் குறிக்கவும்.
2. டில்லி சுல்தான்களின் வமிசங்கள் ஆட்சியைப் பற்றிய விளக்கப்படம் தயாரிக்கவும்.

# 16. பாமினி அரசும் விஜயநகரப் பேரரசும்

## *(அ) பாமினி அரசு* (கி.பி. 1347-1482)

முகம்மது-பின்-துக்ளக்கின் ஆட்சியின் இறுதிக் காலத்தில் அமைதியின்மை நிலவியது. அப்பொழுது துக்ளக்கின் ஆதிக்கத்தினை ஏற்றுக்கொள்ளாமல் பாமினி அரசு தக்காணத்தில் தோன்றியது. கி.பி. 1347ஆம் ஆண்டில் அலாவுதீன் பாமன் ஷா என்பவர் பாமினி அரசை ஏற்படுத்தினார். அவரை இந்திய வரலாற்றில் ஹாசன் கங்கு பாமினி என்றும் அழைக்கின்றோம். ஹாசன், பாமன் என்ற பாரசீக வீரரின் வமிசத்தில் தோன்றியவர் ஆவர். அதனால் அவர் அமைத்த அரசு பாமினி அரசு என்றழைக்கப்படுகின்றது என்பது ஒரு கருத்து. மற்றொன்று 'கங்கு' என்ற பிராமணரின்கீழ் வேலை செய்து ஹாசன் உயர்ந்தவர் என்றும், அதனால் அவர் தமது நன்றியைத் தெரிவிக்க ஹாசன் கங்கு என்ற பெயரை வைத்துக்கொண்டதாகவும், அவர் தோற்றுவித்த அரசு பாமினி அரசு என்று அழைக்கப்பட்டது என்றும், பெரிஷ்டா என்ற வரலாற்று ஆசிரியர் கூறுகிறார்.

ஹாசன் கங்கு குல்பர்காவைத் தம் தலைநகராகத் தேர்ந்தெடுத்தார். தென்னகத்திலிருந்த நாடுகளைக் கைப்பற்ற ஹாசன் முனைந்தார். அவர் புகழ் உச்சநிலையிலிருந்த

போது, அவருடைய அரசு வடக்கில் வெயின் கங்கை ஆற்றிலிருந்து தெற்கில் கிருஷ்ணா ஆறு வரையும், மேற்கில் தௌலதாபாத்திலிருந்து கிழக்கில் போங்கீர் என்ற இடம் வரையும் பரவி நின்றது. ஆட்சி நலனைக் கருதி அவர் தம்முடைய அரசினை நான்கு மாநிலங்களாகப் பிரித்திருந்தார். அவை குல்பர்கா, தௌலதாபாத், பீரார், பீடார் ஆகும். ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஓர் ஆளுநரை நியமித்தார். உள்நாட்டுக் கலகங்கள் ஏற்படாதவாறு செய்துகொண்டார். அவர் நியாயமான அரசராக விளங்கினார். அவருடைய ஆட்சியில் மக்கள் இன்புற்று வாழ்ந்தனர்.

பாமினி அரசினைப் பதினான்கு சுல்தான்கள் ஆட்சி புரிந்தனர். பாமினி அரசு தோன்றுவதற்கு முன்பே தக்காணத்தில் விஜயநகரப் பேரரசு தோன்றியிருந்தது. இது ஓர் இந்து அரசாகும். பாமினி சுல்தான்கள் விஜயநகரப் பேரரசுடன் அடிக்கடி போரிட்டுக்கொண்டிருந்தார்கள்.

அஹமது ஷா என்பவர் பாமினி அரசை கி.பி. 1422 ஆம் ஆண்டு முதல் கி.பி. 1435ஆம் ஆண்டுவரை ஆட்சி புரிந்தார். அவர் பாமினி தலைநகரைக் குல்பர்காவிலிருந்து பீடார் என்னும் இடத்திற்கு மாற்றினார். அங்கு நிலவிய தட்பவெப்பநிலை உடல் நலத்திற்கு ஏற்றதாக இருந்தது.

அஹமது ஷாவிற்குப் பின் ஆண்ட மன்னர்களுள் மூன்றாம் முகம்மது ஷா என்பவர் ஆண்டபோது, பாமினி அரசு சிறப்பும் பொலிவும் பெற்று விளங்கியது. இதற்குக் காரணமாய் விளங்கியவர் பாமினி சுல்தானின் தலைமை அமைச்சர் முகம்மது கவான் ஆவார். அவர் மதிநுட்பம் படைத்தவர்; அவர் அரசியல் தந்திரம் அறிந்தவர். சுல்தானிடம் பயபக்தியுடன் பணியாற்றினார். அவர் ஒரு பாரசீகப் பிரபு. அதிக அதிகாரங்கள் கொண்டிருந்தபோதிலும், முகம்மது கவான் அவைகளைத் தம் சொந்த நலத்திற்காகப் பயன்படுத்தவில்லை. முகம்மது கவான் கொங்கணப் பகுதியிலிருந்த அரசர்களைப் பணியவைத்தார். பல கோட்டைகளையும் நகரங்களையும் கைப்பற்றினார். அவர் காலத்தில்தான்

காஞ்சிபுரம் தாக்கப்பட்டது. கவான் விஜயநகர அரசருடன் போரிட்டுக் கோவாவை வென்றார்.

முகம்மது கவான் ஓர் எளிய வாழ்க்கையினை நடத்தினார். கல்வி கற்பதில் நாட்டம் செலுத்தினார். கற்றோரின் நட்பினை




படம் 28. பாமினிப் பேரரசு

நாடினார். அவர் பீடாரில் ஓர் அழகான கல்லூரியையும், ஒரு பெரிய நூலகத்தையும் வைத்து நடத்தினார். முகம்மது கவான்

காலத்தில் தான் ருஷ்ய நாட்டு வணிகர் அதனேஷியஸ் நிகிடின் பீடார் நகருக்கு வந்திருந்தார்.

முகம்மது கவான் பாரசீக நாட்டு இஸ்லாமியர் ஆவார். இதனால் பாமினி சுல்தான் அவையிலிருந்த இந்திய இஸ்லாமிய பிரபுக்கள் கவானின் மீது பொறாமை கொண்டனர். அந்தப் பிரபுக்கள் அவர்மீது அரசத் துரோகக் குற்றம் சாட்டினர். குடி போதையிலிருந்த அரசர் அதை நம்பி கவானைக் கொன்றுவிட உத்திரவிட்டார். இது கி.பி. 1481 ஆம் ஆண்டில் நிகழ்ந்தது. பிறகு மூன்றாம் முகம்மது ஷா தம் தவற்றினை உணர்ந்தார். ஆனால் அது காலந்தாழ்ந்த விஷயமாகி விட்டது. கி.பி. 1482ஆம் ஆண்டில் மூன்றாம் முகம்மது ஷா மனம் நொந்து காலமானார்.

மூன்றாம் முகம்மது ஷாவிற்குப் பின் பாமினி அரசு சீர் குலைந்தது. அந்த அரசு ஐந்து சிறு அரசுகளாகப் பிரிந்தது. அவை பீஜப்பூர், கோல்கொண்டா, அகமது நகர், பீடார், பீரார் ஆகும்.

பாமினி அரசு காலத்தின் கலை

பாமினி சுல்தான்கள் கிழக்கு மாநிலங்களில் உழவுத் தொழில் செழிக்க நீர்ப்பாசன வசதிகளைச் செய்து கொடுத்தனர். வாய்க்கால்களையும் கிணறுகளையும் வெட்டினர். பாமினி சுல்தான்கள் வலிமைமிக்க கோட்டைகளைக் கட்டினர். பாமினி அரசர்களின் கட்டடங்களில் இந்திய, துருக்கிய, எகிப்திய, பாரசீகக் கட்டடக் கலையின் இணைப்புக் காணப் படுகிறது. குல்பர்காவிலுள்ள ஜாமி மசூதியும், தௌலதாபாதிலுள்ள சாந்த்மினாரும், பீடாரில் உள்ள முகம்மதுகவானின் கல்லூரியும் பாமினி அரசர்களின் கட்டடக் கலைக்குச் சான்றுகளாகும். பீஜப்பூரிலிருந்த கோல் கும்பாஸ் சமாதியின் சிறப்பு அதன் நீளமும், அகலமும், உயரமும் ஒரே அளவில் இருப்பதாகும். அது ஒரு சிறந்த கலைச்சின்னமாகும்.

## (ஆ) விஜய நகரப் பேரரசு (கி.பி.1336—1565)

### 1. சங்கம, சாளுவ வமிச அரசர்கள்

இடைக்கால இந்தியாவின் வரலாற்றில், தென்னிந்தியாவில் ஒரு சிறந்த பேரரசு விளங்கியிருந்தது. அது விஜயநகரப் பேரரசாகும். தென்னிந்தியாவில் முஸ்லிம் ஆதிக்கம் பரவவொட்டாமல் தடுக்கவும், இந்துதர்மத்தை முஸ்லிம்படையெடுப்புகளிலிருந்து காப்பாற்றவும் விஜயநகர அரசு தோற்றுவிக்கப்பட்டது. கி.பி. 1336ஆம் ஆண்டில் ஹரிஹரர், புக்கர் என்ற இரு சங்கம சகோதரர்கள் தங்கள் குருவான வித்தியாரண்யரின் அறிவுரைக்கு இணங்க துங்கபத்திரை ஆற்றங்கரையில் விஜய நகரத்தை நிறுவினர்.

சுமார் முந்நூறு ஆண்டுக் காலத்திற்கு இந்து சமயமும், பண்பாடும் தழைத்தோங்க விஜய நகரப்பேரரசு பாடுபட்டது. பாமினி அரசின் செல்வாக்கும் அதற்குப் பிறகு தோன்றிய ஐந்து சிறிய அரசுகளின் செல்வாக்கும் தென்னாட்டில் பரவாமல் செய்வதற்கு இந்த அரசு காரணமாய் இருந்தது.

விஜயநகரத்தை ஆண்ட முதல் வமிசம் சங்கம வமிசமாகும். இவ்வமிசத்து ஹரிஹரரும், அவருக்குப் பிறகு புக்கரும் ஆண்டுவந்தனர். இவர்கள் பல சிற்றரசுகளைத் தங்கள் ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்தனர். இவர்களுக்குப் பின் ஆண்ட இரண்டாம் ஹரிஹரர் தம் ஆட்சியைத் தென்னாட்டில் திருச்சிராப்பள்ளிவரை பரவச்செய்தார்.

சங்கம வமிசத்து கடைசி அரசர் விருபாட்சர் என்பவராவார். இவர் திறமையற்றவர். அப்போது நாட்டில் குழப்பமும் அமைதியின்மையும் நிலவின. இந்நிலையைப் பயன்படுத்திச் சந்திரகிரியை ஆண்ட நரசிம்ம சாளுவர் என்பவர் தகுதியற்ற தம் அரசரை நீக்கிவிட்டு, விஜயநகரின் அரியணை ஏறினார். அத்துடன் சங்கம வமிச ஆட்சி முடிந்து சாளுவ வமிச ஆட்சி தொடங்கியது. நரசிம்ம சாளுவர் தம் மக்களின் நம்பிக்கைக்கு உரியவரானார். தம்முடைய ஆறு ஆண்டு ஆட்சியில் பல கிளர்ச்சிசெய்த மாநிலங்களை மீண்டும் பெற்றார்.

சாளுவ வமிசத்து கடைசி மன்னரை துளுவவமிசத்தைச் சேர்ந்த வீர நரசிம்மர் நீக்கிவிட்டு கி.பி. 1506ஆம் ஆண்டில் விஜய நகரத்து அரசரானார். இவ்வமிசத்தின் தலைசிறந்த அரசர் கிருஷ்ண தேவராயர் என்பவராவர்.

படம் 29. விஜயநகரப் பேரரசு

### துளுவ வமிசம்—கிருஷ்ணதேவராயர் *(1509—1530)*

இந்திய வரலாற்றில் புகழ்பெற்ற அரசர்களுள் கிருஷ்ணதேவராயர் ஒருவராவார். கிருஷ்ணதேவராயர் செய்த

போர்களில் ஏறக்குறைய எல்லாப் போர்களிலும் வெற்றி பெற்றார். மைசூர், அவர் ஆட்சியின்கீழ் வந்தது. அவர் பீஜப்பூர் அரசரிடமிருந்து இராய்ச்சூர் தோவாப் பகுதியைக் கைப்பற்றி, ஒரிஸ்ஸாவின்மீது படையெடுத்து உதயகிரி, கொண்ட வீடு என்னும் பகுதிகளைக் கைப்பற்றினார். அவருடைய பேரரசு மேற்கில் தென்கொங்கணத்திலிருந்து, கிழக்கில் விசாகப்பட்டினம் வரை பரவி நின்றது.

கிருஷ்ணதேவராயர் நம் நாட்டிற்கு வந்த போர்ச்சுக்கீசியரிடம் சுமுகமான உறவு கொண்டிருந்தார். அதனால் விஜய நகர வாணிகம் வளர்ச்சியடைந்தது.

கிருஷ்ண தேவராயர் ஒரு கல்விமான்; கலையும் இலக்கியமும் தம் ஆட்சியில் தழைத்தோங்க ஊக்கமளித்தார். அவர் சில நூல்கள் இயற்றினார். அவர் அவையை அலங்கரித்த அறிஞர்கள் 'அஷ்டதிக்கஜங்கள்' என அழைக்கப்பட்டனர். அநேக கோயில்களைக் கட்டினார். சுருங்கக் கூறுமிடத்து, கிருஷ்ண தேவராயர் ஆட்சியில் விஜயநகரப் பேரரசு புகழேணியின் உச்சநிலையை அடைந்தது. கிருஷ்ணதேவராயர் கி. பி. 1530ஆம் ஆண்டில் இயற்கை எய்தினார்.

**தலைக்கோட்டை சண்டை (1565)**

கிருஷ்ண தேவராயருக்குப் பின் விஜயநகர அரசினை ஆண்டவர் அச்சுதராயர். அவருக்குப்பின் சதாசிவராயர் ஆண்டார். இராமராயர் என்பார் சதாசிவராயரிடத்தில் அமைச்சராகப் பணிஆற்றினார். சதாசிவராயர் இராமராயரின் கைப்பொம்மையாக இருந்தார். அரசில் உண்மையாக அச்சமயத்தில் ஆட்சி செலுத்தியவர் இராமராயர் ஆவார். அவர் தக்காணிய சுல்தான்களின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிட்டார். சிறிது காலத்திற்குப் பிறகு பீரார் தவிர மற்ற நான்கு தக்காணிய சுல்தான்கள் ஒன்று சேர்ந்து கி. பி. 1565-இல் தலைக்கோட்டை என்னுமிடத்தில் விஜயநகரத்துடன் போரிட்டனர். விஜயநகர அரசின் படை முறியடிக்கப்பட்டது. சுல்தான்களின் படையினர் விஜயநகரத்தினை அடியோடு அழித்தனர்.

**விஜயநகரப் பேரரசின் பொருளாதார நிலை**

விஜயநகரப் பேரரசு வளங்கொழிக்கும் அரசாக விளங்கியது. விவசாயம் சிறந்திருந்தது. நீர்ப்பாசன வசதிகள் செய்து கொடுக்கப்பட்டன. ஆடை நெய்தல், சுரங்கத் தொழில், உலோகத் தொழில் முதலியன முக்கியத் தொழில்களாகும். உள்நாட்டு வாணிகமும் கடல் கடந்த வாணிகமும் பெருகின. மலபார் கடற்கரையிலுள்ள கள்ளிக்கோட்டை ஒரு முக்கியத் துறைமுகமாக விளங்கியது. விஜயநகரப் பேரரசு பர்மா, மலேயா, சீனா, அரேபியா, பாரசீகம், போர்ச்சுகல் முதலிய நாடுகளுடன் வாணிகம் செய்தது.

விஜயநகரப் பேரரசின் முக்கிய வருவாய் நிலவரியாகும். வரியை மக்கள் பணமாகவும், தானியமாகவும் அரசாங்கத்திற்குச் செலுத்தலாம்.

**விஜயநகரப் பேரரசு காலத்திய இலக்கியமும் கலையும்**

பதினைந்து, பதினாறாம் நூற்றாண்டுகளில் இந்தியாவில் பயணம் செய்த அயல்நாட்டுப் பயணிகள் அனைவரும் விஜயநகரப் பேரரசைப் பற்றிப் புகழ்மிக்க கருத்துக்களைக் கூறிச் சென்றிருக்கின்றனர்.

விஜயநகர அரசர்கள் தெலுங்கு, வடமொழி, கன்னடம், தமிழ் முதலிய மொழிகளை ஆதரித்தனர். அவர்களுடைய ஆதரவின்கீழ் சிறந்த இலக்கிய நூல்கள் இயற்றப்பட்டன.

கிருஷ்ண தேவராயரின் ஆட்சி தென்னிந்திய இலக்கிய வரலாற்றில் ஒரு புதிய சகாப்தத்தைத் தோற்றுவித்தது. கிருஷ்ண தேவராயர் தெலுங்கு மொழியில் ஸ்ரீ ஆண்டாள் சரிதத்தை 'ஆமுக்த மால்யதா' என்ற தலைப்பில் எழுதினார். 'ஜாம்பவதி கல்யாணம்', 'உஷா பரிணயம்' என்னும் நாடக நூல்களை வடமொழியில் எழுதி உள்ளார். அவருடைய அவையினை எட்டு கவிவாணர்கள் அலங்கரித்தனர். அவர்களை 'அஷ்டதிக்கஜங்கள்' என்றழைக்கின்றோம். அவர்களில் சிறப்பிடம் பெற்றவர் 'அல்லசாணி பெத்தண்ணா' ஆவார். அவர் கிருஷ்ண தேவராயரின் அவைப் புலவராய் விளங்கினார்.

விஜயநகர மன்னர்களின் ஆட்சியில் ஓவியம், இசை, நடனம் முதலிய நுண்கலைகள் சிறப்பிடம் பெற்றன. கட்டடக் கலை சிறந்து விளங்கியது. சிறந்த வேலைப்பாடு அமைந்த மண்டபங்களும் அழகிய ஆலயங்களும் கட்டப்பட்டன. விஜய நகரத்தில் கிருஷ்ண தேவராயரால் கட்டப்பட்ட புகழ்பெற்ற 'ஹஸஹாரா இராமஸ்வாமி கோயில்' இந்து ஆலயக் கட்டடக் கலைக்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. அப் பேரரசர் அழகு வாய்ந்த விட்டலஸ்வாமி கோயிலையும் விஜய



படம் 30. விட்டலஸ்வாமி கோயில்

நகரத்தில் கட்டியுள்ளார். அவர் நாகலாபுரம் (நவீன ஹாஸ்பெட்) என்னும் புதிய நகரை அமைத்தார். ஹம்பியி லுள்ள பாழடைந்த சிற்பங்கள் விஜயநகரப் பேரரசின் சிறப்புக்கு எடுத்துக் காட்டுக்களாக விளங்குகின்றன.

## பயிற்சிகள்

I. விரிவான விடையளிக்கவும்

1. *முகம்மது கவானின் சிறப்பை விளக்குக.*
2. *கிருஷ்ணதேவராயரின் பெருமைகளை விளக்குக.*

3. விஜயநகரப் பேரரசு இலக்கியத்திற்கும் கலைக்கும் ஆற்றிய தொண்டு யாது ?

**II. சுருக்கமான விடையளிக்கவும்**

1. பாமினி அரசின் முதல் தலைநகரம் யாது ? பின்னர் எந்த இடத்திற்கு மாற்றப்பட்டது ?
2. விஜயநகரத்தை யார், எப்போது, ஏன் நிறுவினர் ?
3. சதாசிவ ராயர் ஆட்சி செய்தபோது இருந்த அமைச்சர் யார் ?

**III. கீழே கொடுக்கப்பட்டுள்ள கூற்றுகள் சரியா, தவறா என பதில் அளிக்கவும் (சரியாக இருந்தால் வலப்புறத்தில் கொடுக்கப்பட்டுள்ள அடைப்புக்குள் √ குறியிட்டுக்காட்டவும். தவறாக இருந்தால் × குறியிட்டுக் காட்டவும். )**

1. பாமினி அரசினை நிறுவியவர் அலாவுதீன் பாமன் ஷா ஆவார். [ ]
2. ஹரிஹரர், புக்கர் விஜயநகரத்தை கிருஷ்ணா ஆற்றங் கரையில் நிறுவினர். [ ]
3. கி. பி. 1565ஆம் ஆண்டில் தலைக்கோட்டைப் போர் நடந்தது. [ ]
4. கிருஷ்ண தேவராயர் காலத்தில் அவருடைய அரசவையை அலங்கரித்தவர்கள் 'நவரத்தினங்கள்' ஆவர். [ ]

**IV. நீங்களே செய்யுங்கள்**

1. இந்தியா வரைபடத்தில் பாமினி பேரரசைக் குறிக்கவும்.
2. இந்தியா வரைபடத்தில் விஜயநகரப் பேரரசைக் குறிக்கவும்.
3. அருங்காட்சி சாலையில் விஜயநகரச் சான்றுகளைக் காண்க.

# 17. முகலாயப் பேரரசு

## பாபர் (கி.பி. 1526—1530)

**பாபரின் இளமைப்பருவம்**

பாபர் தாய் வழியில் மங்கோல் செங்கிஸ்கானுடனும், தந்தை வழியில் தார்த்தர் தைமூரையும் முன்னோர்களாகக் கொண்டவர். கி.பி. 1494ஆம் ஆண்டில் அவர் பர்கானா என்னும் சிற்றரசுக்கு வேந்தரானார். அதனை விரைவில் இழந்து விட்டார். தம் இளமையிலேயே பல துயரங்களுக்கு உள்ளானதால் அவரிடத்தில் வீரமும் துணிவும் வளர்ந்தன. அவருடைய பர்கானாவை விட்டு வந்தபின் சிறு படையுடன் நாடோடியாய்த் திரிந்து கொண்டிருந்த பாபர் காபூலைக் கைப் பற்றி அதன் அரசரானார்.

அச்சமயத்தில் டில்லியை ஆண்டுவந்த இப்ராஹிம் லோடிக்குப் பல பகைவர்கள் இருந்தனர். அவர் பிரபுக்களை மரியாதையுடன் நடத்தவில்லை. மக்களைக் கொடுங்கோல் ஆட்சிக்கு உட்படுத்தினார். பஞ்சாபை ஆண்டு வந்த ஆளுநர் தௌலத்கான் லோடி பாபரை இந்தியாவின் மீது படையெடுத்து வர வேண்டினார்.

**முதல் பானிப்பட்டுப் போர் *(1526)***

பாபருக்கு இந்தியாவைக் கைப்பற்ற வேண்டும் என்ற எண்ணம் ஒன்று இருந்தது. தௌலத்கான் லோடி வேண்டு கோளுக்கிணங்கி இந்தியாவின் மீது பாபர் படையெடுத்தார். இப்ராஹிம் லோடியை கி.பி. 1526ஆம் ஆண்டில் வரலாற்றுப் புகழ் பெற்ற பானிப்பட்டுப் போர்க்களத்தில் பாபர் சந்தித்தார். இப்ராஹிம் லோடி ஒரு பெரும் படையைத் திரட்டி வந்தார். அப் போரில் பாபர் வென்றார். இப்ராஹிம் லோடி தோல்வி யுற்றுப் போர்க்களத்தில் மாண்டார். இப்போரில் இந்தியாவில் முதல்முறையாக பீரங்கிகள் பயன்படுத்தப்பட்டன. பாபர் இவற்றைப் பயன்படுத்தினார். முதல் பானிப்பட்டுப் போர் இந்தியாவில் மொகலாயப் பேரரசு தோன்ற அடிகோலியது.

### கான்வாகாப் போர் (1527)

பாபர் டில்லியையும் ஆக்ராவையும் கைப்பற்றிக் கொண்டார். இராஜபுத்திரர்கள் பாபருக்கு அடிபணியவில்லை. இவர்களுக்கு அரும்பெரும் தலைவராக இருந்தவர் இராணா சங்கா. இராணாசங்கா சிறந்த போர்.வீரர். இராஜபுத்திரர்கள் வீரமும், துணிவும், சுறுசுறுப்பும், தேசிய உணர்வும் பெற்றவர்கள். இவர்கள் இராணா சங்காவின் தலைமையில் பாபரை ஆக்ரா நகருக்கு மேற்கில் உள்ள கன்வா கா என்னும் இடத்தில் 1527 - ல் எதிர்த்தனர். இப்போரில் இராஜ புத்திரர்கள் தோல்வியுற்றனர்.

### கோக்ராப் போர் (1529)

வங்காளம், பீகார் ஆகிய மாநிலங்களிலுள்ள ஆப்கானியர் பாபருக்கு தொல்லைகள் கொடுத்துக் கொண்டிருந்தனர். பாபருக்கும் ஆப்கானியருக்கும் பாட்னா நகருக்கு வடக்கில் கோக்ரா நதி, கங்கை நதியுடன் சந்திக்கும் இடத்திற்கு அருகில் கி.பி. 1529ஆம் ஆண்டு பெரும் போர் நடந்தது. ஆப்கானியர்கள் படுதோல்வியடைந்தனர். இப்போருக்குப் பின்னர் மொகலாயப் பேரரசு நிலை பெற்றது.

### பாபரின் இலக்கிய ஆர்வம்

கி.பி. 1530-ல் பாபர் இறந்தார். இந்தியாவில் அவர் இருந்த 4 ஆண்டுகளில் பாபர் வடஇந்தியாவில் பெரும் பகுதியைத் தம் ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்தார். ஆனால் வென்றபகுதிகளில் சரியான ஆட்சிமுறையை அமைக்கவில்லை. போர் வீரம் படைத்திருந்தாலும் பாபர் ஒரு சிறந்த கவிஞராக விளங்கினார். பாரசீக மொழியில் சிறந்த கவிதைகளைப் படைத்துள்ளார். தம் தாய் மொழியான துருக்கியில் ஒரு மேதையாக விளங்கினார். இம்மொழியில் பாபர்நாமா என்னும் நூலை எழுதியுள்ளார். இதில் இந்திய நாட்டின் இயற்கை யழகையும், விலங்குகளையும், பறவைகளையும் பற்றியும் வர்ணித்துள்ளார். இந்நூல் வரலாற்று நூல்களுள் மிகச் சிறந்ததாகக் கருதப்படுகிறது.

# ஹுமாயூன் (கி.பி. 1530—1540 & 1555—1556)

## ஹுமாயூனுக்கு ஏற்பட்ட தொல்லைகள்

பாபர் காலமானதும் அவருடைய மூத்த மகன் ஹுமாயூன் பட்டத்திற்கு வந்தார். அவரைப்பல இன்னல்கள் சூழ்ந்தன. கிழக்கில் பீகாரிலும், வங்காளத்திலும் ஆப்கானியர்களின் தொல்லை கடுமையாக இருந்தது. தெற்கில் கூர்ச்சர சுல்தான் பகதூர் ஷா என்பவர் ஹுமாயூனுக்கு எதிரியாக விளங்கினார். ஹுமாயூனின் இளைய சகோதரர்கள் அவருக்கு அநேக தொல்லைகளைக் கொடுத்தனர்.

## ஹுமாயூனும் ஷெர்ஷாவும்

ஆப்கானியர்கள் கிழக்கில் கலகம் செய்து கொண்டிருந்தனர். ஷெர்கான் என்னும் ஆப்கானியத் தலைவர் பீகாருக்கும் வங்காளத்திற்கும் அதிபரானார்.

ஹுமாயூன் கிழக்கில் ஏற்பட்ட ஆப்கானியத் தொல்லையை ஒடுக்க வங்காளத்திற்குத் தம் படையுடன் சென்றார். ஹுமாயூன் வங்காளத்தில் இருந்த போது ஷெர்கான் பீகாரில் உள்ள மொகலாயப் பிரதேசங்களைக் கைப்பற்றினார். இதனால் ஹுமாயூன் ஆக்ராவுக்குத் திரும்பினார். வழியில் கி.பி. 1539-ல் ஷெர்கான் பக்ஸாருக்கு அருகில் சௌன்ஸா என்ற விடத்தில் ஹுமாயூனைத் தோற்கடித்தார். அதற்கு அடுத்த ஆண்டும் மொகலாயருக்கும் ஆப்கானியருக்கும் போர் ஏற்பட்டது. ஷெர்கான் கன்னோசியில் ஹுமாயூனை வென்றார். ஹுமாயூன் நாட்டைவிட்டு ஓட வேண்டியவரானார். ஷெர்ஷா ஆக்ராவையும், டில்லியையும் கைப்பற்றினார். பின்னர் டில்லியில் முடிசூட்டிக்கொண்டார்.

## ஹுமாயூன் ஆட்சி பீடத்தை மீண்டும் பெறுதல்

அரசு பதவியை இழந்த ஹுமாயூன் ஊர் ஊராகத்திரிந்தார். அவருடைய சகோதரர்கள் அவருக்கு உதவி புரியவில்லை. சிந்துவிற்குச் சென்றார். அங்கு அமரக் கோட்டை என்னுமிடத்தில் கி.பி. 1542 - ல் அவருக்கு ஒரு மகன் பிறந்தான்.

அவன் தான் அக்பர். இறுதியாக ஹுமாயூன் பாரசீகத்தை அடைந்தார். அந்நாட்டு வேந்தர் அவருக்கு உதவி செய்தார். ஒரு படை கொடுத்து உதவினார். இந்தப் படைக்குத் தலைமை தாங்கி இந்துஸ்தானை மீண்டும் கைப்பற்ற ஹுமாயூன் கி.பி. 1554-ல் புறப்பட்டார். இதற்கிடையில் ஷெர்ஷா காலமாகிவிட்டார். டில்லியில் திறமையற்றவர்கள் பட்டத்திற்கு வந்தனர். அதைப் பயன்படுத்தி கி.பி. 1555 இல் சர் ஹிந்த் என்னும் இடத்தில் சிக்கந்தர் சூரைத் தோற்கடித்து டில்லி அரியணை ஏறினார். ஆனால் அவர் நீண்ட நாட்கள் வாழவில்லை. அவர் அவருடைய நூலக மாடிப்படியினின்று தவறி வீழ்ந்து கி.பி. 1556 ஆம் ஆண்டு காலமானார்.

## ஷெர்ஷா (கி. பி. 1540—1545)

### ஷெர்ஷாவின் ஆதிக்க வளர்ச்சி

ஷெர்கான் அல்லது ஷெர்ஷா சூர் என்பவர் பீகாரில் வாழ்ந்து வந்த சூர் வம்சத்தைச் சேர்ந்த ஆப்கானியத் தலைவரின் புதல்வர். அவருடைய இயற்பெயர் பரீத். அவர் ஒரு சமயம் வேட்டையாடும் போது ஒரு புலியை தன்னந்தனியாகக் கொன்றதால் அவருக்கு 'ஷெர்கான்' என்ற பட்டப் பெயர் ஏற்பட்டது. இவர் தம் அதிகாரத்தை வளர்த்து, பீகாரைத் தன்னாட்சியின்கீழ் கொண்டு வந்தார். பின்னர் வங்காளத்தின் மீதும் தம் ஆதிக்கத்தைச் செலுத்தினார்.

ஷெர்ஷா ஹுமாயூனை சௌன்ஸா என்னுமிடத்தில் வென்றார். கி. பி. 1540-ல் மொகலாய வேந்தரை கன்னோசியில் தோற்கடித்து, அவரை நாட்டினின்றும் விரட்டினார். டில்லியில் அரியணை ஏறி, சூர் வமிசம் என்னும் இடைக்கால வமிசத்தை நிறுவினார்.

ஷெர்ஷா கி.பி. 1540 முதல் 1545 வரை வடஇந்தியாவின் பெரும்பகுதியைத் தம் ஆட்சிக்குட்படுத்தினார். கி.பி.1545-ல் கலிஞ்சார் கோட்டையை முற்றுகையிட்டார். அச்சமயம் வெடி மருந்து விபத்தால் அவர் மரணமடைந்தார். அவர் ஆண்ட காலம் குறுகிய காலம் இருப்பினும் பல சீர்திருத்தங்களைக் கொண்டு வந்தார்.

**ஷெர்ஷா சூரின் சீர்திருத்தங்கள்**

**அரசியல் நிர்வாகம் :** ஷெர்ஷா வெற்றிவீரர் மட்டு மல்லர். அவர் சிறந்த ஆட்சியாளராகவும் விளங்கினார். ஷெர்ஷா தம் பரந்த அரசினை 47 சர்க்கார்களாகப் பிரித்தார். ஒவ்வொரு சர்க்காரும் பல பர்கானாக்களாகப் பிரிக்கப்பட்டது. ஒவ்வொரு பர்க்கானாவும் பல கிராமங்களாகப் பிரிக்கப்பட்டது. அரசின் அடிப்படைப் பகுதி கிராமமாகும். அதிகாரிகளின் செல்வாக்கைத் தடுக்க 3 ஆண்டுகளுக்கு ஒரு முறை அவர்களை மாற்றி வந்தார். நிர்வாக இலாகா ஒவ்வொன்றும் அவருடைய மேற்பார்வையில் இருந்தது.

**நிலவரித் திட்டம் :** ஷெர்ஷாவின் நிலவரித் திட்டம் மிகவும் போற்றுதற்குரியது. நிலங்கள் யாவும் சரிவர அளக்கப்பட்டன. அவை தரம் வாரியாகப் பிரிக்கப்பட்டன. பின்னர் நிலத் தீர்வைகள் நிர்ணயிக்கப்பட்டன. அரசுக்கும் விவசாயிகளுக்குமிடையே நேரிடைத் தொடர்பு இருந்தது. குடியானவர் தம் விளைச்சலில் மூன்றில் ஒரு பங்கை வரியாகச் செலுத்த வேண்டும். அது தானியமாகவோ அல்லது பணமாகவோ செலுத்தப்படலாம். நிலத் தீர்வையை நிர்ண யிக்கும்போது அரசாங்க அதிகாரிகள் தாராளமாக இருக்கலாம் என்று கூறப்பட்டது. ஆனால் நிலவரி வசூலிக்கும்போது அவர்கள் கண்டிப்பாக இருத்தல் வேண்டும். இந்த நிலவரித் திட்டத்தை அக்பர் பின்பற்றியதிலிருந்து ஷெர்ஷாவின் பெருமை புலப்படுகிறது. ஷெர்ஷா 'அக்பரின் முன்னோடி' என்றழைக்கப்படுகிறார்.

**நிதி சம்பந்தமான சீர்திருத்தங்கள் :** மக்களின் பொருளாதார நிலையை உயர்த்த ஷெர்ஷா நாணய முறையை சீர்திருத்தினார். வெள்ளி நாணயம் இவரால் முதலில் வெளி யிடப்பட்டது. அதனுடைய எடையும் நிர்ணயிக்கப்பட்டது. தற்கால வெள்ளி நாணய முறையின் தந்தை ஷெர்ஷாவே ஆவார்.

**இதர சீர்திருத்தங்கள் :** ஷெர்ஷா போக்குவரவு வசதி களைப் பெருக்கினார். தற்காப்பின் பொருட்டும் மக்களின் வசதிக்காகவும் தம் இராச்சியத்தில் முக்கியமான இடங்களை

இணைக்க ஷெர்ஷா சாலைகளை அமைத்தார். ஆக்ராவி லிருந்து பர்ஹான்பூருக்கும், ஆக்ராவிலிருந்து ஜோதிபுரி, சித்தூருக்கும் நீண்ட சாலைகள் போடப்பட்டன. வழிப் போக்கர்களின் நலனைக் கருதி அரசர் அப்பாதைகளின் இருமருங்கிலும் நிழல்தரும் மரங்களை வளர்த்தார். தங்கு வதற்குச் சத்திரங்களைக் கட்டினார். ஒற்றர் படையும் திறமையாகப் பணியாற்றியது. காவற்படை சீர்த்திருத்தி அமைக்கப்பட்டது. குதிரைச் சவாரிமூலமாகத் தபால் எடுத்துச் செல்லும் முறையையும் அவர் அறிமுகப்படுத்தினார். நீதி வழங்குவதில் ஷெர்ஷா பாரபட்சமற்றவர்.

ஷெர்ஷாவிடத்தில் ஒரு திறமையான படையிருந்தது. அது கட்டுப்பாட்டுடன் விளங்கியது. படை வீரர்கள் அவர்தம் மேற்பார்வையில் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவருடைய குதிரைப்படை போற்றுதற்குரியது. தம்மை ஏமாற்றாமல் இருப்பதற்குக் குதிரைகளுக்கு முத்திரை இடப்பட்டது. நாட்டின் முக்கிய இடங்களில் படைகள் நிறுத்தப்பட்டன. இராணுவ அதிகாரிகள் அடிக்கடி இடமாற்றம் பெற்றனர்.

இடைக்கால இந்தியாவில் சிறப்புடன் விளங்கிய ஓச் அரசர் ஷெர்ஷா ஆவார்.

## மகா அக்பர் (கி.பி, 1556—1605)

மொகலாய மன்னர்களுள் புகழ்மிக்கவர் அக்பர். தந்தை ஹுமாயூன் இறந்தபோது அக்பருக்கு வயது பதின்மூன்று. கி. பி. 1556-ல் அக்பர் அரசரானார். அவர் மிக இளைஞ ராக இருந்த காரணத்தினால் அவருக்கு பைராம்கான் காப் பாளராக இருந்து ஆட்சியை நடத்தினார்.

### இரண்டாம் பானிப்பட்டுப் போர் (1556)

சூர் வமிச அரசர் அடில்ஷா என்பவரின் அமைச்சரும் படைத்தலைவருமான ஹெமு மொகலாயர்களை ஒழித்து ஓர் இந்து அரசை வடஇந்தியாவில் நிறுவ எண்ணங்கொண்டு அக்பரை எதிர்த்தார். அவர் ஆக்ராவையும் டில்லியையும் கைப்பற்றிக் கொண்டார். ஹெமு, அக்பரையும், பைராம்

கானையும் பானிப்பட்டில் கி.பி. 1556-ல் சந்தித்தார். இப்போரில் ஹெமு தோல்வியுற்றுக் கொலையுண்டார். இதுவே இரண்டாம் பானிப்பட்டுப் போர் எனப்படும். ஆப்கானியர் மொகலாயரின் ஆதிக்கத்தை ஏற்றுக் கொண்டனர். இரண்டாம் பானிப்பட்டுப் போரின் வெற்றியால் மொகலாய அரசு நிலைத்தது. தமது 18ஆம் வயது வரை அக்பர் பைராம்கானின் ஆதரவின் கீழ் இருந்தார். பிறகு சுயேச்சையாய் அவர் ஆளத்தொடங்கினார்.

## அக்பரின் வெற்றிகள்—மொகலாயப் பேரரசு விரிவடைதல்

அக்பர் வீரமும் துணிவும் உடையவர். முனைந்து காரியங்களில் ஈடுபடுபவர். தம் பேரரசை விரிவாக்க விருப்பங் கொண்டார். இதனால் போர்களில் ஈடுபட்டார். அக்பர் மாளவத்தையும் கோண்ட்வானாப் பிரதேசத்தையும் வென்றார். கோண்ட்வானா அரசி துர்காவதி ஒரு வீரஇராசபுத்திர மாதரசி ஆவார். அவர் அக்பரை எதிர்த்துப் போரிட்டு மாண்டார். பிறகு அக்பர் இராசபுத்திரர்களுடன் போரிட்டார். இராசபுத்திரர்களின் தலைவரான உதயசிங்கைத் தோற்கடித்தார். இராஜபுதனம் அவர் வசம் வந்தது. ஆனால், உதயசிங்கின் மைந்தரான இராணா பிரதாப்சிங் அரவல்லிக் குன்றுக்குச் சென்று அக்பருடன் இடைவிடாது போர்புரிந்து கொண்டே இருந்தார். மொகலாயருக்கு அடிபணியாமலிருந்த வீரர் இராணா பிரதாப்சிங் ஆவார். இராஜபுதனத்திற்குப்பின்பு அக்பர் கூர்ச்சரம், பீகார், வங்காளம் முதலிய பிரதேசங்களை வென்றார்.

இவ்வெற்றிகளுக்குப் பிறகு அக்பர், காபூல், காண்டகார், காஷ்மீரம், சிந்து முதலிய பிரதேசங்களைத் தம் பேரரசுடன் இணைத்தார். தம் ஆதிக்கத்தை வடஇந்தியாவிலும் மத்திய இந்தியாவிலும் நிலைநாட்டிய அக்பர், தம் ஆட்சியைத் தக்காணத்திலும் செலுத்த விழைந்தார். காண்டேஷ் அவர் ஆதிக்கத்தை ஏற்றுக்கொண்டது. அக்பர் அகமது நகரை முற்றுகையிட்டார். அகமது நகரை ஆண்டவர் வீர மாதரசி இராணி சாந்து பீபி ஆவார். சாந்து பீபி தமது மக்களாலே

கொல்லப்பட்டார். அக்பர் அகமது நகரைத் தம் வசமாக்கிக் கொண்டார். பேரார் அக்பர் வசமாயிற்று. அக்பரின் பேரரசு வடக்கில் இமயமலையிலிருந்து தெற்கில் பேரார், அகமது நகர் வரையிலும் மேற்கில் இந்துகுஷ், காண்டகார் முதற் கொண்டு கிழக்கில் வங்காளம் வரையிலும் பரவி இருந்தது.

## அக்பரின் நிர்வாகம்

அக்பர் தமது பரந்த அரசினை 15 மாநிலங்கள் அல்லது சுபாக்களாகப் பிரித்தார். சுபாவின் தலைவர் சுபாதார் ஆவார். ஒவ்வொரு சுபாவும் சர்க்கார்களாகப் பிரிக்கப்பட்டது. ஒவ்வொரு சர்க்காரும் பல பர்கானாக்களாகவும் கிராமங்களாகவும் பிரிந்திருந்தது. கிராம அலுவலர் கிராம விவகாரங்களைக் கவனித்து வந்தார். பேரரசர் அக்பர் தம் சாம்ராஜ்யத்தின் தலைவராக விளங்கினார். அவர் எல்லா அதிகாரங்களையும் பெற்று இருந்தார். அவருக்கு ஆட்சி புரிய அமைச்சர்களடங்கிய ஓர் அவை துணைபுரிந்தது.

## படை நிர்வாகம்

அக்பரிடம் சிறந்த படை ஒன்று இருந்தது. மான்சப்தாரி முறை பின்பற்றப்பட்டது. குதிரைகளையும் வீரர்களையும் மான்சப்தார்கள் பேரரசருக்கு அனுப்ப வேண்டும். அதற்குத் தகுந்தபடி அவர்களுக்குச் சம்பளம் வழங்கப்பட்டது. அவருடைய இராணுவத்தில் குதிரைப்படையும், காலாட்படையும், பீரங்கிப் படையும் இருந்தன. இவற்றில் குதிரைப்படை சிறந்து விளங்கியது. புகழ் பெற்ற இராசபுத்திர வீரர்களான இராஜா பகவன் தாசும் இராஜா மான்சிங்கும் படைத்தலைவர்களாய் இருந்தனர்.

## நிலவரித் திட்டம்

அக்பரின் திவானாக விளங்கிய இராஜா தோடர்மால் நிலவரித் திட்டத்தை ஏற்படுத்தினார். அது ஷெர்ஷா திட்டத்தை அடிப்படையாகக்கொண்டிருந்தது. பயிரிடும் நிலங்கள் யாவும் அளக்கப்பட்டன. அவை தரம் வாரியாகப் பிரிக்கப்பட்டன. விளைச்சலில் மூன்றில் ஒரு பங்கு நிலவரியாக வசூலிக்கப்பட்

டது. வரித் தொகை தானியமாகவோ அன்றி பணமாகவோ செலுத்தப்படலாம். அக்பரின் நிலவரித்திட்டத்தின்படி அரசாங்கத்திற்கும் குடியானவனுக்கும் நேரடித் தொடர்பு ஏற்பட்டிருந்-

படம் 31. அக்பர் பேரரசு

தது. வெள்ளக் காலங்களிலும் பஞ்சக் காலங்களிலும் நிலவரி குறைக்கப்பட்டது அல்லது தள்ளுபடி செய்யப்பட்டது. நில

வரியை வசூலிப்பவர் குடியானவனின் நண்பராக இருக்க வேண்டும் என்று உத்தரவிடப்பட்டிருந்தது.

### அக்பரும் இந்துக்களும்

அக்பர் தேசிய அரசராக விளங்கினார். தம்முடைய பேரரசினை வளர்ப்பதில் இராசபுத்திரர்களின் ஒத்துழைப்பு மிகவும் தேவை என்று உணர்ந்தார். பெரும்பான்மையினரான இந்துக்களின் உதவியை நாடினார். தம்முடைய தாராள மனப்பான்மையினால் இராசபுத்திரர்களின் உள்ளங்களைப் பேரரசர் கவர்ந்தார். இந்துக்களின்மீது விதிக்கப்பட்டிருந்த ஜசியா என்ற வரியை அவர் நீக்கிவிட்டார். அவர் இராசபுத்திரர்களோடு விவாக உறவு கொண்டார். இந்துக்கள் அரசாங்கத்தின் சிவில் இராணுவத் துறைகளில் உயர்ந்த பதவிகளை வகித்தனர்.

### அக்பரின் சமயம்—தீன்-இலாஹி

அக்பர் குறுகிய சமயக் கொள்கையைப் பின்பற்றவில்லை. அவர் மெய்ப்பொருளை உணரும் பொருட்டு எல்லா சமயத்தினரையும் கூட்டி பதேபூர் சிக்ரியில் தமது அரண்மனைச் சபையில் சமய ஆராய்ச்சிகளை நடத்தி வந்தார். அக்பர் கி.பி.1562-ல் ஒரு புதிய சமயத்தைத் தோற்றுவித்தார். அதன் பெயர் 'தீன் இலாஹி' அல்லது 'தெய்வீக மதம்' ஆகும். அம்மதம் எல்லா மதங்களின் உன்னதக் கொள்கைகளை ஒருங்கே கொண்டது. அது நீடித்து நிற்கவில்லை. அவருடன் அது மறைந்தது.

### சமூகச் சீர்திருத்தம்

அக்பர் இளம் பிராய விவாகத்தைத் தடை செய்தார். சீதனத்தைக் கொடுக்கும், வாங்கும் வழக்கத்தைத் தடுக்க முயற்சித்தார். விதவைத் திருமணத்தை வேந்தர் ஆதரித்தார். இந்துக்களிடையே காணப்பட்ட உடன்கட்டையேறும் வழக்கத்தைத் தடுத்தார். அக்பர் மிருக பலியையும் பசுவதையையும் திருத்தினார்.

## அக்பர் ஆட்சியின் பெருமை

அக்பர் சிறந்த வெற்றி வீரர். புகழ்மிக்க ஆட்சியாளர். உலக வரலாற்றில் புகழ் மிகுந்த பேரரசர்களில் அக்பர் ஒருவ ராவார். அவர் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை நிறுவி அதனை நீண்ட காலம் ஆட்சிபுரிந்தார். அவர் நாட்டில் அமைதி நில வியது. அவர் சமுதாயத்தின் எல்லா வகுப்பினரின் அன்பையும் ஆதரவையும் பெற்று ஆட்சி புரிந்தார். அவருடைய ஆட்சியில் கைத்தொழிலும் வாணிகமும் பெருகின. அவர் 'சமயப் பொறுமை'க் கொள்கையைப் பின்பற்றினார். இலக்கியம், ஓவியம் முதலிய கலைகளில் அக்பருக்குச் சிறந்த ஆர்வம் இருந்தது. அக்பர் கட்டடங்கள் பல கட்டினார். கூர்ச்சர வெற்றியின் சான்றாக ஆக்ராவிற்கு அருகில் பதேபூர் சிக்ரி (வெற்றி நகரம்) என்னும் ஒரு புதிய நகரத்தை அமைத்து அதனைப் பல அழகிய கட்டடங்களால் அலங்கரித்தார்.



படம் 32. அக்பர்

அக்பரின் அவையில் சிறந்த பெரியார்கள் இருந்தனர். அபுல் பாசல், அபுல் பைசி என்னும் பேரறிஞர்களும் இராஜா தோடர்மால் என்னும் நிதியமைச்சரும், இராஜாபீர்பால் என்னும் விகடகவியும், மியான் டான்சேன் என்ற இசை வல்லுனரும் அக்பரின் அவையைச் சிறப்பித்தனர். அபுல் பாசல் 'அக்பர் நாமா', 'அயினி அக்பரி' என்னும் நூல்களை இயற்றியுள்ளார். 'அக்பர் நாமா' அக்பரின் வாழ்க்கை வரலாற்றைத்

தெரிவிக்கின்றது. அயினி அக்பரி அக்பரின் ஆட்சி முறையைப் பற்றிக் கூறுகின்றது. அபுல் பைசி ஒரு சிறந்த பாரசீகப் புலவர். அவர் காலத்தில் வாழ்ந்த துளசிதாசர் இராமாயணத்தை இந்தியில் எழுதிப் புகழ் மிகப் பெற்றார்.

அக்பரின் இறுதிக் காலம் துன்பம் நிறைந்திருந்தது. அக்பரின் மூத்த மகனாகிய சலீம் தந்தையை எதிர்க்கலானார். சலீம் அக்பரின் ஆருயிர் நண்பராகிய அபுல் பாசலின் கொலைக்குக் காரணமாக இருந்தார். இதனால் மிகுந்த துயரம் ஏற்பட்டு கி.பி. 1605-ல் அக்பர் இயற்கை எய்தினார்.

### ஜஹாங்கீர் (1605-1627)

அக்பருக்குப் பின் அவருடைய மகன் சலீம் 'ஜஹாங்கீர்' என்ற பட்டப் பெயருடன் அரியணையேறினார். இவர் கி.பி. 1611-ல் நூர்ஜஹான் என்னும் அழகிய பெண்ணைத் திருமணம் செய்துகொண்டார். நூர்ஜஹான் மதிநுட்பமும் மன உறுதியும் படைத்தவள். வேந்தரின் பெயரில் அரசாங்கக் காரியங்களை நடத்தினாள். ஜஹாங்கீர் காலத்தில் சர் தாமஸ் ரோ, ஹாக்கின்ஸ் என்னும் இரு ஆங்கிலேயர்கள் அவரது அவைக்கு வந்தனர். இந்தியாவில் வியாபாரத் தலங்களை ஏற்படுத்திக்கொள்ள மொகலாயப் பேரரசரிடம் அவர்கள் அனுமதி பெற்றனர்.

### ஷாஜஹான் (1627-1658)

ஜஹாங்கீர் இறந்ததும், அவருடைய மைந்தரான 'ஷாஜஹான்' அரியணையேறினார்.

### தக்காண விவகாரங்கள்

ஷாஜஹான் தக்காண அரசுகளைத் தம் ஆட்சிக்கு உட்படுத்த விரும்பினார். அகமது நகரை வென்று தம் பேரரசுடன் அதனை இணைத்துக் கொண்டார். அவர் பீஜப்பூர், கோல்கொண்டா சுல்தான்களையும் பணிய வைத்துத் தமக்குத் திறை செலுத்தும்படி செய்தார். தமது புதல்வர் ஔரங்கசீபைத் தக்காணத்திற்கு அரசப் பிரதிநிதியாக நியமித்தார். ஔரங்கசீபின் திறமையால் தக்காணத்தில் அமைதி நிலவியது.

### பட்ட உரிமைப் போர்

ஷாஜஹானுக்கு 4 புதல்வர்கள் இருந்தனர். தாராஷுகோ ஷாஜஹானின் மூத்த புதல்வர். அவர் தந்தையின் அன்பிற்கு உரியவராக இருந்தார். தம் தந்தையின் அருகிலேயே இருந்தார். இரண்டாவது மகன் ஷுஜா ஆவார். ஷுஜா வங்காளத்தின் அரசப் பிரதிநிதியாக விளங்கினார். ஔரங்கசீப் வேந்தரின் மூன்றாம் புதல்வர் ஆவார். இவர் தக்காணத்தின் அரசப் பிரதிநிதியாகப் பணியாற்றினார். முராத் பேரரசரின் நான்காம் புதல்வர் ஆவார். இவர் கூர்ச்சரத்தின் அரசப் பிரதிநிதியாக இருந்தார். கி. பி. 1657-ல் ஷாஜஹான் பிணியால் வாடினார். ஒவ்வொரு மைந்தரும் அரியணையில் அமர விரும்பினர். ஷாஜஹான் நோய்வாய்ப்பட்டதும், ஔரங்கசீப் தக்காணத்தைவிட்டு அரசபதவிக்குப் போட்டியிட வட இந்தியா சென்றார்.

ஔரங்கசீப் தந்திரசாலி. தம் இளைய சகோதரர் முராத்துடன் சேர்ந்துகொண்டு தாராஷுகோவைத் தோற்கடித்தார். தம் தந்தையைச் சிறையில் அடைத்தார். நயவஞ்சகமாக முராதைத் தம் பாதையினின்று விலகும்படிசெய்தார். ஔரங்கசீப் ஷுஜாவைத் தோற்கடித்து அவர் வங்காளத்திலிருந்து ஓடும்படி செய்தார். பின் ஔரங்கசீப் எதிரிகளை ஒழித்துவிட்டு மொகலாயப் பேரரசரானார். ஷாஜஹான் 8 ஆண்டுகள் ஆக்ரா கோட்டையில் சிறைவாசம் செய்து கி.பி. 1666ஆம் ஆண்டில் இயற்கையெய்தினார்.

### ஷாஜஹான் ஆட்சியின் பெருமை

ஷாஜஹான் காலத்தில் நாட்டில் அமைதி நிலவியது. மொகலாயப் பேரரசு ஷாஜஹான் காலத்தில் உச்ச நிலையை அடைந்தது. ஷாஜஹான் சிறந்த கட்டடப் பிரியர். அவருடைய அநேக கட்டடங்கள், அரண்மனைகள், கோட்டைகள், பூங்காக்கள், மசூதிகள், ஆக்ரா, டில்லி, லாகூர் முதலிய நகரங்களில் காணப்படுகின்றன. டில்லி நகருக்கருகில் 'ஷாஜஹானாபாத்' என்னும் அழகு வாய்ந்த புதிய நகர் ஒன்றைக் கட்டினார். அதில் செங்கோட்டையை அமைத்தார்.

அது எழில்மிக்க ஒரு கட்டடமாகும். டில்லியில் உள்ள செங்கோட்டையும் ஜம்மா மசூதியும், ஆக்ராவிலுள்ள தாஜ்மகாலும் முத்து மசூதியும் இவரால் கட்டப்பட்டன.



படம் 33. தாஜ்மஹால்

ஷாஜஹானின் அன்பு மனைவி மும்தாஜ் ஆவார். அவர் தம் கணவருடன் பத்தொன்பது ஆண்டுகள் இனிய வாழ்க்கையை நடத்தி கி. பி. 1631-ல் உயிர் நீத்தார். ஷாஜஹான் தம் அருமை மனைவியின் நினைவாக அவருடைய சமாதியின் மேல் ஆக்ரா நகரில் யமுனை ஆற்றங்கரையில் தாஜ்மஹால் என்னும் எழில் மிக்க சலவைக் கல் கட்டடத்தைக் கட்டினார். இது உலக அதிசயங்களுள் ஒன்றாக விளங்குகிறது. மேலும் அவர் ஓர் அழகு வாய்ந்த மயிலாசனத்தை அமைத்தார். அது தங்கத்தால் ஆக்கப்பட்டு நவமணிகள் பதிக்கப்பட்டிருந்தது.

## ஔரங்கசீப் (கி.பி. 1658—1707)

### ஔரங்கசீபின் குண நலன்கள்

ஔரங்கசீப் கி.பி. 1658-ல் அரசப் பதவி ஏற்றார். அவர் ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகள் ஆண்டார். இஸ்லாம் மதத்

தின் நெறிகளைப் பின்பற்றி ஒழுக்கத்துடன் வாழ்க்கை நடத்தினார். அவர் எளிய வாழ்க்கையை மேற்கொண்டார். ஆனால், ஔரங்கசீபிடம், அக்பரிடம் நிலவிய சமயப் பொறுமையும் இராஜதந்திரமும் காணப்படவில்லை.

### ஔரங்கசீபும் இந்துக்களும்

மொகலாயப் பேரரசு மிகப் பெரியது. எல்லாச் சமயங்களையும் பின்பற்றும் மக்கள் பேரரசில் வாழ்ந்தனர். மக்களில் பெரும்பாலோர் இந்துக்கள் ஆவர். ஔரங்கசீப் அக்பரைப் போன்று ஒரு தேசிய அரசராக விளங்கவில்லை. தம்முடைய ஆணை இல்லாமல் இந்துக்கள் புதிய ஆலயங்களைக் கட்டக் கூடாதென்று கட்டளையிட்டார். கோயில்களில் விழாக்கள் நடத்தக் கூடாதென்றும் கூறினார். காசி, வடமதுரா, சோமநாதபுரம் போன்ற இடங்களிலுள்ள புகழ்மிக்க இந்துக் கோயில்களை இடித்துத் தள்ளினார். அங்கு மசூதிகள் கட்டப்பட்டன. ஔரங்கசீப் இந்துக்களின்மீது ஜசியா என்னும் தலை வரியை விதித்தார்.



படம் 34. ஔரங்கசீப்

ஔரங்சீபிற்கும் இராசபுத்திரர்களுக்கும் இடையே இருந்த உறவு சுமுகமாக இல்லை. இராஜபுத்திரர்கள் ஔரங்கசீபை வெறுத்தனர்.

### சீக்கியர்களின் எதிர்ப்பு

ஔரங்கசீப் சீக்கியர்களிடம் பகைமை கொண்டார். மொகலாய வேந்தர் சீக்கியர்களின் ஒன்பதாம் குருவாகிய தேஜ்பகதூரை இஸ்லாம் மதத்தைத் தழுவுமாறு வற்புறுத்தினார். தேஜ்பகதூர் மறுத்தார். ஔரங்கசீப் அவரை சிரச்சேதஞ்

செய்தார். அதனால் தேஜ்பகதூரின் மகனும் சீக்கியர்களின் பத்தாம் குருவுமாகிய குரு கோவிந்த் சிங் சீக்கிய சமூகத்தை




படம் 35. ஔரங்கசீபின் பேரரசு

ஓர் இராணுவ சமூகமாக மாற்றி மொகலாயர்களின் எதிரியாக்கினார். சீக்கியர்கள் போர்ப் பயிற்சி பெறலாயினர்; சிறந்த போர் வீரர்களாக மாறினர்.

ஔரங்கசீபும் தக்காணமும்

ஔரங்கசீப் காலத்தில் மராத்தியத் தலைவரான சிவாஜி, ஓர் இந்து இராஜ்யத்தை அமைத்தார். சிவாஜியை அடக்க ஔரங்கசீப் படைகளுடன் ஷெயிஸ்டகான், பின்னர் ஜெய்சிங் ஆகியோரைத் தக்காணத்திற்கு அனுப்பினார். ஆனால், அவர் முயற்சி வீணாயிற்று. பீஜப்பூர், கோல்கொண்டா இராச்சியங்கள் மராத்தியர்களுடன் நட்பு கொண்டன. இரு இராஜ்ஜியங்களையும் மராத்தியர்களையும் ஒடுக்க ஔரங்கசீப் நேரில் ஒரு பெரும் படையுடன் தக்காணத்திற்குச் சென்றார். பீஜப்பூர், கோல்கொண்டா சுல்தான்களைத் தோல்வியுறச் செய்து அப் பகுதிகளைத் தமது ஆட்சியுடன் இணைத்துக் கொண்டார். அதனால் மொகலாயப் பேரரசு தென்னிந்தியா வரையில் பரவியது.

மொகலாயப் படை பிறகு மராத்தியர்களைத் தாக்கியது. இதற்குள் சிவாஜி மரணமடைந்தார். சிவாஜியின் புதல்வரான சாம்பாஜி பிடிக்கப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார். பிறகு அவர் மரண தண்டனை பெற்றார். ஆனால், மராத்தியர்கள் கொரில்லா போர் முறையைக் கையாண்டதால் அவர்களை ஔரங்கசீப் அடக்க முடியவில்லை. அதற்குப் பிறகு ஔரங்கசீப் கி.பி. 1707-ல் அகமத் நகரில் காலமானார்.

## மொகலாயப் பேரரசின் வீழ்ச்சி

(1) மொகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்கு ஔரங்கசீப் ஓரளவு காரணமாக இருந்தார். பெரும்பான்மையான இந்துக்களைப் பகைத்துக் கொண்டார். இராசபுத்திரர்களிடம் அவர் அன்பையும் ஆதரவையும் காண்பிக்கவில்லை. அவர் ஜாட்டுகள், சீக்கியர்கள், மராத்தியர்கள் முதலியோரைப் பகைத்துக் கொண்டார். அவர் தம் இராஜ்ஜியத்துடன் பீஜப்பூர், கோல்கொண்டா அரசுகளை இணைத்துக்கொண்டிருக்கக் கூடாது. அவர், அந்த இராஜ்யங்களை ஒழித்ததனால் மராத்தியர் தக்காணத்தில் வன்மையடைந்தனர். தக்காணப் போர்கள் அவருடைய கருவூலத்தைக் காலியாக்கின. அவர் நீண்ட காலம்

தக்காணத்தில் தங்கிவிட்டார். அதனால் பேரரசின் நிர்வாகம் சீர்குலைந்தது. தலைநகரில் குழப்பம் ஏற்பட்டது.

(2) ஔரங்கசீபிற்குப் பிறகு ஆட்சி செலுத்தியவர்கள் திறமை அற்றவர்கள். அரசுரிமைப் போர்கள் ஏற்பட்டன. இவை மொகலாயப் பேரரசின் அழிவைத் துரிதப்படுத்தின.

(3) மொகலாயப் பேரரசு பரந்து விரிந்து கிடந்தது. போக்குவரத்துகள் அக்காலத்தில் வளர்ச்சியடையவில்லை. மத்திய அரசாங்கத்தினால் செம்மையான நிர்வாகத்தை நடத்த இயலவில்லை. பேரரசின் பரப்பு அதற்குத் தீமையாக இருந்தது.

(4) நீண்ட காலம் இந்தியாவில் மொகலாயப் படை தங்கிவிட்டது. மொகலாயப் படை ஒழுக்கத்தை இழந்தது. திறமையற்றதாயிற்று. அது பேரரசைக் காக்கும் திறமையை இழந்தது.

(5) ஔரங்கசீபிற்குப்பின் அந்நியப் படையெடுப்புகள் மொகலாயப் பேரரசினைச் சிதைத்து வீழ்ச்சியடையச் செய்தன. கி. பி. 1739-ல் பாரசீக அரசரான நாதர்ஷா என்பவர் இந்தியாவின் மீது படையெடுத்து டில்லியைக் கொள்ளையடித்தார். கி.பி. 1761-ல் மூன்றாம் பானிப்பட்டுப் போர் நடந்தது. இதனால் மொகலாயப் பேரரசு ஆட்சி ஆட்டங்கண்டது. ஐரோப்பியர்கள், முக்கியமாக ஆங்கிலேயர் நாட்டின் ஒற்றுமையின்மையைப் பயன்படுத்தி, மொகலாயப் பேரரசை வீழ்ச்சியடையச் செய்தனர்.

## பயிற்சிகள்

I. விரிவான விடையளிக்கவும்

1. பாபரைப் பற்றி ஒரு கட்டுரை வரைக.
2. ஷெர்ஷா சூர் எவ்வாறு அரசரானார்? அவரது சீர்திருத்தங்களைக் குறிப்பிடுக.
3. அக்பரின் வெற்றிகள் யாவை?
4. அக்பரின் சிவில், இராணுவ நிர்வாகம் பற்றி எழுதுக.
5. மொகலாயப் பேரரசின் அழிவிற்கு முக்கிய காரணங்களைக் குறிப்பிடுக.

III. சுருக்கமான விடையளிக்கவும்

1. யார் யாருக்கிடையே முதல் பானிப்பட்டு போர் நடந்தது? எப்போது?
2. அக்பரை எதிர்த்த இரு மாதரசிகள் யாவர்?
3. அக்பர் தோற்றுவித்த சமயத்தின் பெயர் என்ன?
4. ஷாஜஹானின் கட்டடங்கள் யாவை?

III. கோடிட்ட இடங்களை நிரப்புக

1. 'பாபர்நாமா' என்னும் நூலை பாபர் ———— மொழியில் எழுதினார்.
2. கூர்ச்சர வெற்றியின் சான்றாக ஆக்ராவிற்கருகில் ———— என்னும் ஒரு புதிய நகரத்தை அக்பர் அமைத்தார்.
3. ஔரங்கசீபால் சிரச்சேதம் செய்யப்பட்ட சீக்கிய குரு ———— ஆவார்.

IV கொடுக்கப்பட்ட விடைகளில் மிகச் சிறந்ததை எழுதவும்.

அக்பர் ஒரு தலைசிறந்த மன்னராகக் கருதப்படுவதற்குக் காரணம்,

(அ) அவர் மொகலாயப் பேரரசை விரிவுபடுத்தினார்.
(ஆ) அவர் தேசிய மன்னராகத் திகழ்ந்தார்.
(இ) அவர் 'தீன் இலாஹியை'த் தோற்றுவித்தார்.
(ஈ) அவர் பதேபூர் சிக்ரியை அமைத்தார்.

V. நீங்களே செய்யுங்கள்

1. இந்திய தேசப்படத்தில் அக்பரின் பேரரசைக் குறிப்பிடுக.
2. இந்திய தேசப்படத்தில் ஔரங்கசீபின் பேரரசின் பரப்பை வரைந்து பின்வருவனவற்றைக் குறிக்கவும். டில்லி, லாகூர், காஷ்மீரம், பீஜப்பூர், கோல்கொண்டா.
3. ஜும்மா மசூதி, செங்கோட்டை, முத்து மசூதி, தாஜ்மஹால் போன்ற மொகலாயக் கட்டடங்களின் படங்களைச் சேகரிக்கவும்.

# 18. மராத்தியரின் தோற்றமும் வளர்ச்சியும்

## மராத்தியரின் எழுச்சி

கி.பி. பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மராத்திய ஆதிக்கத்தின் வளர்ச்சி இந்திய வரலாற்றில் ஒரு திருப்பத்தைக் கொடுத்தது எனக் கூறலாம். மொகலாயப் பேரரசின் வலிமை குறைய முக்கியக் காரணமாக இருந்தவர்கள் மராத்தியர்கள் ஆவர்.

தக்காணத்தின் வட மேற்குப் பகுதியில் உள்ள நாசிக், பூனே, சதாரா, ஷோலாப்பூர் மாவட்டங்களும், கொங்கணக் கடற்கரையின் ஒரு பகுதியும் மராத்திய மாநிலத்தில் அடங்கியிருந்தன. மராத்தியத்தின் நிலவியல் மராத்தியரின் பண்பையும் வரலாற்றையும் உருவாக்குவதில் பெரும் பங்கு கொண்டிருந்தது. வடக்கில், கிழக்கு மேற்காகச் செல்லும் விந்திய, சாத்பூரா மலைத் தொடர்களும், மேற்கில், வடக்கு தெற்காகச் செல்லும் மலைத் தொடர்களும், மராத்தியத்திற்கு அரண்களாக விளங்கின. நர்மதையும் தபதியும் இம்மாநிலத்திற்குப் பாதுகாப்பு அளித்தன. மலைக் கோட்டைகள் பல மராத்தியர்களுக்குப் பாதுகாப்பாக இருந்தன. மராத்தியத்தின் வடமேற்குப் பகுதி வளமற்ற பகுதியாகும். செழிப்பற்ற மண் பிரதேசம்; மிகக் குறைவான அளவிற்கு மழை பெறும் பிரதேசம். ஆதலால் அவர்கள் தன்னம்பிக்கை, துணிவு, விடாமுயற்சி, எளிய வாழ்க்கை, சமுதாய சமத்துவம் முதலிய இயல்புகளைக் கொண்டுவாழ்ந்தனர். ஏகநாத், துக்காராம், இராமதாஸ்போன்ற மராத்திய சமயச் சீர்திருத்தவாதிகள் தெய்வ பக்தி, கடவுளுக்கு முன் எல்லோரும் சமம், உழைப்பின் கண்ணியம் போன்ற கருத்துகளை மக்களுக்கு போதித்தனர். இராமதாஸ் சிவாஜியின் குருவாக விளங்கினார். இவர் மராத்தியரிடத்தில் செல்வாக்கு பெற்றிருந்தார். சமயச் சீர்திருத்தவாதிகளின் பக்திப் பாடல்கள் மராத்திய மொழியில் இயற்றப்பட்டன. மக்களின் உள்ளங்களில் உன்னத எண்ணங்களை உண்டாக்க இப்பாக்கள் உதவின.

தக்காண சுல்தான்களிடத்தில் மராத்தியர் பணியாற்றி ஆட்சித் துறையிலும் படை நிர்வாகத்திலும் அனுபவம் பெற்றிருந்தனர். இப்படிப்பட்ட மக்களை ஒன்று சேர்த்து, ஓர் இந்து அரசினை ஏற்படுத்த சிறந்த வீரர் ஒருவர் பதினேழாம் நூற்றாண்டில் தக்காணத்தில் தோன்றினார். அவர்தான் புகழ்பெற்ற சிவாஜி ஆவார்.

## *சிவாஜி* (கி.பி. 1627—1680)

### இளமைப் பருவம்

மராத்திய வரலாற்றில் மட்டுமன்றி இந்திய வரலாற்றிலும் சிவாஜிக்குத் தனி இடம் உண்டு. கி. பி. 1627ஆம் ஆண்டு சிவநேர் என்னும் மலைக் கோட்டையில் சிவாஜி பிறந்தார். ஷாஜி இவருடைய தந்தை ஆவார். இவருடைய தாயார் ஜீஜாபாய் ஆவார். சிவாஜியின் குழந்தைப் பருவத்தில் அவருடைய அன்னை வீரத்தையும், தெய்வ பக்தியையும் ஊட்டும் 'இராமாயண', 'மகாபாரத'க் கதைகளை அவருக்குக் கூறினார். சிவாஜியின் பிஞ்சு உள்ளத்தில் வீரமும், தெய்வ பக்தியும், தம் சமயத்தைக் காக்கும் உற்சாகமும் ஆழப் பதிந்தன. சிவாஜியின் மதப்பற்றிற்கு மற்றொரு காரணம் இராமதாசரின் போதனைகளாகும். அவருடைய ஆசிரியரான தாதாஜி கொண்டதேவ் சிவாஜிக்குச் சண்டையிடுதல், குதிரைச் சவாரி செய்தல், மற்றும் சில கலைகளைக் கற்றுத்தந்தார்.



படம் 36. சிவாஜி

### வெற்றிகள்: கோட்டைகளைக் கைப்பற்றுதல்

சிவாஜி ஒரு வீரராக வாழ்ந்தார். தாம் இருந்த பகுதியில் வாழ்ந்த மலைவாசிகளுடன் நெருங்கிப் பழகினார். பிறகு

இவர்களிடையே காணப்பட்ட வாலிபர்கள் சிவாஜியின் சிறந்த படை வீரர்களாக விளங்கினர். தாம் வந்த வழியும், இளமைப் பருவத்தில் பெற்ற பயிற்சியும், சூழ்நிலையும் வாலிபனாக விளங்கிய சிவாஜியின் உள்ளத்தில் ஒரு சுதந்திர அரசை ஏற்படுத்தி ஆள வேண்டுமென்ற கருத்தை உண்டாக்கியது. இந்து மதம் வாழ வேண்டுமென்பது அவரது கருத்து. தக்காணத்திலுள்ள அகமத் நகர், பீஜப்பூர், கோல்கொண்டா சுல்தான்கள் திறமையற்றவர்களாக இருந்தனர். ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். வடக்கே மொகலா யர் பல போர்களில் ஈடுபட்டுக் கொண்டிருந்தனர். சிவாஜி பிறர் அறியாத வகையில் தம் மராத்தியப் படையை வலுப்படுத்தினார். நாளடைவில் தோர்ணா, இராய்கார் முதலிய கோட்டைகளைக் கைப்பற்றினார்.

## அப்சல்கான்

சிவாஜியின் வளரும் வன்மை பீஜப்பூர் சுல்தானை அச்சுறுத்தியது. சிவாஜியை அடக்க அப்சல்கான் என்னும் ஒரு படைத் தலைவரின்கீழ் பீஜப்பூர் சுல்தான் ஒரு பெரும்படையை அனுப்பினார். அப்சல்கான் சிவாஜியை நட்பு முறையில் நேரில் காண விரும்புவதாகக் கூறினார். இதில் ஏதோ ஒரு சூழ்ச்சி உள்ளதென்று சிவாஜி கருதினார். சிவாஜி எச்சரிக்கையானார். சூழ்ச்சியை சூழ்ச்சியால் முறியடிக்க வேண்டுமென்று முடிவு செய்தார். அப்சல்கான் தன் உடையில் குறுவாள் ஒன்றை மறைத்திருந்தார். அவர் உயரமாகவும் எடுப்பான தோற்றம் உடையவராகவும் இருந்தார். சிவாஜி குள்ளமானவர். அவர் கவசமணிந்து அதற்கு மேலாக உடையணிந்திருந்தார். வெளியில் தெரியாதபடி கையில் புலிநகம் பூண்டிருந்தார். சிவாஜியைத் தழுவுவது போல் பாசாங்கு செய்த அப்சல்கான் தன் குறுவாளால் அவரைக்கொல்லமுயன்றார். ஆனால், அம்முயற்சி பலிக்கவில்லை. சிவாஜி புலிநகத்தால் அவரைக் குத்திக் கொன்றார். படைத் தலைவரை இழந்த பீஜப்பூரின் படை மராத்தியர்களால் முறியடிக்கப்பட்டது. பீஜப்பூரின் பகுதிகளில் நுழைந்து மராத்தியர்கள் கொள்ளையடித்த பொருள்களோடு திரும்பினர்.

### செயிஸ்டகான்

இதற்குப் பின்னர், தென் கொங்கணமும் கோலாப்பூர் மாவட்டமும் சிவாஜியின் ஆட்சியை ஏற்றுக்கொண்டன. அச் சமயம் தக்காணத்தில் மொகலாயர்களின் புதிய ஆளுநராக செயிஸ்டகான் என்பவர் பதவியேற்றிருந்தார். சிவாஜியை ஒடுக்க ஔரங்கசீப் அவரை அனுப்பினார். செயிஸ்டகான் பூனாவைக் கைப்பற்றினார். ஒரு நாள் சிவாஜி சில பணியாட்களுடன் செயிஸ்டகான் தங்கி இருந்த பூனாவைத் தாக்கினார். இது திடீரென்று தாக்கப்பட்ட தாக்குதலாகும். செயிஸ்டகான் தன் கட்டை விரலை இழந்தார். அவருடைய மைந்தர் ஒருவரும் கொல்லப்பட்டார். மொகலாயப் படை வீரர்கள் நிலைகுலைந்து ஓட்டம் எடுத்தார்கள். பிறகு ஆங்கிலேயர் வியாபாரம் செய்து வந்த சூரத் நகரையும் சிவாஜி கொள்ளையிட்டார்.

### சிவாஜியும் ஔரங்கசீபும் (ஆக்ரா சம்பவம்)

ஔரங்கசீப் சிவாஜியை அடக்க முயன்றார். இறுதியாக சிவாஜியை ஆக்ரா நகரத்திற்கு அழைத்துவர ஜெய்சிங் என்னும் இராசபுத்திரரை மொகலாயப் பேரரசர் அனுப்பினார். ஜெய்சிங் சிவாஜியை ஆக்ராவிலுள்ள மொகலாயப் பேரரசரின் அவைக்கு விஜயம் செய்ய இணங்க வைத்தார்.

கி.பி. 1666ஆம் ஆண்டு மே திங்களில் சிவாஜியும் அவர் புதல்வரான சாம்பாஜியும் ஆக்ராவை அடைந்தனர். ஆக்ராவில் சிவாஜியை மொகலாய வேந்தர் நன்முறையில் வரவேற்கவில்லை. மொகலாய மன்னர் சிவாஜியையும் சாம்பாஜியையும் சிறையில் அடைத்தார். தந்திரத்தைக் கையாண்டு சிவாஜியும் அவருடைய மகனும் சிறையிலிருந்து தப்பி மராத்திய மாநிலம் திரும்பினர்.

### அரசராக முடிசூடுதல்

கி.பி. 1674ஆம் ஆண்டில் இராய்காரில் சிவாஜி அரசராக முடிசூட்டிக் கொண்டார். தம் அரசிற்கு சுய ராஜ்ஜியம் என்று பெயரிட்டார். தமக்கு 'சத்திரபதி' (அரசர்களுக்கு அரசன்) என்றும் பெயர் சூட்டிக்கொண்டார்.

தெற்கு விஜயம் (1677—1678)

சிவாஜி தென் மாநிலங்களின் மீது படையெடுத்தார். கோல்கொண்டாவை அடைந்தார். பின்னர் செஞ்சிக் கோட்




படம் 37. சிவாஜியின் அரசு

டையையும், திருவண்ணாமலையையும், வேலூரையும், தஞ்சாவூரையும் கைப்பற்றினார்.

சிவாஜி கி.பி. 1680ஆம் ஆண்டு நோயுற்று, இயற்கை யெய்தினார். அப்போது அவர் ஐம்பத்துமூன்று வயது நிரம்பியவர்.

## ஆட்சிமுறை

சிவாஜி ஒரு வீரம் வாய்ந்த போர்வீரர் மட்டுமல்லாமல் சிறந்த அரசராகவும் விளங்கினார். அவருக்கு ஆட்சி புரிவதில் உதவி செய்ய எட்டு அமைச்சர்களடங்கிய ஓர் அமைச்சரவை இருந்தது. அதன் பெயர் அஷ்டப்பிரதான் ஆகும். அது சிவாஜிக்கு ஓர் ஆலோசனைக் குழுவாக இருந்தது. சிவாஜியின் பிரதமர் பீஷ்வா என்றழைக்கப்பட்டார்.

## சிவாஜியின் அரசு

சிவாஜியின் சுயராச்சியம் மூன்று மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு மாகாணமும் பல மாவட்டங்களாகவும், ஒவ்வொரு மாவட்டமும் பல கிராமங்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தன.

நிலங்கள் அளக்கப்பட்டன. பின்னர் நிலத்தீர்வை நிர்ணயிக்கப்பட்டது. விவசாயிகள் தங்கள் விளைச்சலில் $\frac{2}{5}$ பாகம் அரசாங்கத்திற்கு வரியாகச் செலுத்தினர். விவசாயிகள் வரியினைப் பணமாகவோ தானியமாவோ செலுத்தலாம். வேளாண்மைக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. விவசாயிகள் ஊக்குவிக்கப்பட்டனர். அவர்கள் விதைகளும் மாடுகளும் வாங்க முன்பணம் கொடுக்கப்பட்டது. நிலவரியைத் தவிர சௌத் (நான்கில் ஒரு பங்கு), சர்தேஷ்முகி (பத்தில் ஒரு பங்கு) முதலிய வரிகள் மொகலாயருக்குச் சொந்தமான மொகலாய் என்னும் பகுதிகளிலிருந்து வசூலிக்கப்பட்டன.

மராத்தியப் படையின் அமைப்பு சிவாஜியின் இராணுவத் திறனைப் புலப்படுத்துகின்றது. காலாட் படையும், குதிரைப் படையும் சிறந்து விளங்கின. மலைக் கோட்டைகள் மராத்திய வரலாற்றில் சிறந்ததொரு பங்கினை ஏற்று, மராத்திய

ருக்குப் பெருமை தேடிக் கொடுத்தன. சிவாஜி 200 கப்பல்கள் கொண்ட ஒரு கப்பற்படையைத் தோற்றுவித்தார்.

## பீஷ்வாக்கள்

சிவாஜிக்குப்பின் சாம்பாஜி மராத்திய சத்திரபதி ஆனார். ஔரங்கசீப் அவரைக் கைது செய்து கொன்று விட்டார். சாம்பாஜியின் மகனான சாஹு டில்லிக்கு அழைத்துச் செல்லப் பட்டு, மொகலாய அரண்மனையில் வளர்க்கப்பட்டார். ஔரங்கசீப் இறந்த பிறகு சாஹு விடுதலை செய்யப்பட்டார். அவர் மராத்திய அரசரானார். ஆனால், அவர் வலிமையும் ஆர்வமும் இல்லாதவர். அவருடைய அரசு தம்முடைய பீஷ்வாவான பாலாஜி விஸ்வநாத் என்பவரால் ஆளப்பட்டது. பாலாஜி விஸ்வநாத் திறமைசாலி. மராத்தியத்திலிருந்த குழப் பத்தை விலக்கி ஒழுங்கை ஏற்படுத்தினார்.

இவருக்குப்பின் வந்த முதலாம் பாஜிராவும் பாலாஜி பாஜிராவும் வலிமை மிக்கவர்கள். பீஷ்வாக்களில் மிகச் சிறந் தவர் முதலாம் பாஜிராவ் ஆவார். மராத்தியர்களின் பெருமையை அவர் நிலைநாட்டினார். அவருடைய காலத்தில் மராத்தியப் பேரரசு உச்ச நிலையை அடைந்தது.

### மராத்தியப் பேரரசின் வீழ்ச்சி

மராத்தியர் தம் செல்வாக்கை வட இந்தியாவில் பரப்பினர். கி.பி. 1759ஆம் ஆண்டில் ஆப்கானிய மன்னர் அகமது ஷா அப்தாலி பஞ்சாபைக் கைப்பற்றினார். மராத்தியர் அங்கிருந்து திரும்பினர். பாலாஜி பாஜிராவ் ஒரு பெரும்படையைத் திரட்டி ஆப்கானியரை வெல்ல அதனை வட இந்தியாவிற்கு அனுப்பி னார்.

கி.பி. 1761 ஆம் ஆண்டில் பானிப்பட்டுக் களத்தில் மராத்தியப் படையும் அப்தாலியின் படையும் சந்தித்தன. இம் மூன்றாம் பானிபட்டுப் போர் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தது. மராத்தியர் படுதோல்வியடைந்தனர். மராத்தியரின் பேரரசும் சிதறுண்டது.

## பயிற்சிகள்

### I. விரிவான விடையளிக்கவும்

1. மராத்தியர்களின் வீரத்திற்கும் பெருமைக்கும் பல காரணங்கள் இருந்தன. அவை யாவை ?
2. எவ்வாறு அப்சல்கானையும் செயிஸ்டகானையும் சிவாஜி தோற்கடித்தார் ?
3. ஆக்ரா சம்பவத்தை விளக்குக.
4. சிவாஜியின் ஆட்சி முறையை விளக்குக.

### II. சுருக்கமான விடையளிக்கவும்

1. சிவாஜியின் தாய், தந்தை, ஆசிரியர் ஆகியோரின் பெயர்களைக் கூறுக.
2. சிவாஜியின் அமைச்சரவையின் பெயரென்ன ?
3. முக்கியமான பீஷ்வாக்களில் இருவரைக் கூறுக.
4. யார் யாருக்கிடையே மூன்றாம் பானிப்பட்டுப் போர் நடந்தது ? எந்த வருடத்தில் ?

### III. நீங்களே செய்யுங்கள்

1. இந்திய வரைபடத்தில் சிவாஜியின் அரசைக் குறிப்பிடுக.
2. சிவாஜி அப்சல்கானைச் சந்திக்கும் நிகழ்ச்சியை ஒரு நாடகமாக எழுதி நடித்துப் பார்க்கவும்.

# 19. இந்தியாவில் ஆங்கில ஆதிக்கத்தின் வளர்ச்சி

### முன்னுரை

பண்டைக்காலம் முதற்கொண்டே இந்தியாவிற்கும், ஐரோப்பிய நாடுகளுக்குமிடையே வாணிகத் தொடர்பு இருந்து வந்தது. இந்த வாணிகம் பெரும்பாலும் தரை மார்க்கமாகவே நடந்துவந்தது. இந்தியாவிற்கும் ஐரோப்பிய நாடுகளுக்குமிடையே தென்மேற்கு ஆசியா பாலமாக அமைந்தது.

கி. பி. 1498-ல் வாஸ்கோடகாமா என்னும் திறமை வாய்ந்த போர்ச்சுகீசிய மாலுமி இந்தியாவிற்கு முதன்முதலாகக் கடல் மார்க்கத்தைக் கண்டுபிடித்தார். அதன் பின்னர் போர்ச்சுகீசியர். டச்சுக்காரர், ஆங்கிலேயர், பிரெஞ்சுக்காரர் முதலானோர் நம்நாட்டை நோக்கி வந்தனர்.

முதலாம் எலிசபெத் அரசியார் காலத்தில் கி.பி. 1600-ல் கிழக்கிந்திய வர்த்தகச் சங்கம் என்னும் ஒரு வர்த்தகச் சங்கம் இங்கிலாந்தில் நிறுவப்பட்டது. அக் கிழக்கிந்தியக் கம்பெனியார் இந்திய மன்னர்களிடமிருந்து வாணிகச் சலுகை பெற்று நம் நாட்டில் வர்த்தகத் தலங்களை ஏற்படுத்திக் கொண்டனர். மசூலிப்பட்டினம், சூரத், சென்னை, பம்பாய், கல்கத்தா, டாக்கா, காஸிம் பஜார் முதலிய இடங்களில் ஆங்கிலேயர் வாணிக இடங்களை அமைத்துக் கொண்டனர். இந்தியாவில் புதுச்சேரி, மாஹி, காரைக்கால், ஏனாம், சந்திர நாகூர் முதலான இடங்கள் பிரெஞ்சுக்காரர்களுக்கு வாணிகத் தலங்களாயின.

'வர்த்தகம் முன்னே; கொடி பின்னே' என்னும் கொள்கைக்கு ஏற்ப நம் நாட்டில் தம் அரசாட்சியை நிலை நாட்டியவர் ஆங்கிலேயர் ஆவர். முதலில் வாணிகத்தை வளர்த்தனர். பின்னர் ஒரு பேரரசிற்கு அடிக்கல் நாட்டி அதனை வளர்த்தனர்.

## இராபர்ட் கிளைவ்

கர்நாடகத்தில் ஆங்கிலேயரின் செல்வாக்கு

இந்தியாவில் ஆங்கில ஆட்சிக்கு அடிகோலியவர் இராபர்ட் கிளைவ் ஆவார். இவர் சென்னையில் கிழக்கிந்தியக் கம்பெனியில் குமாஸ்தாவாக அமர்ந்தார். அச்சமயத்தில் ஐதராபாத்திலும் கர்நாடகத்திலும் வாரிசுப் போர்கள் நடந்தன. நிசாம் பதவிக்காக நாசர் ஜங் என்பவரும் முசபர் ஜங் என்பவரும் போட்டியிட்டனர். அதே சமயத்தில் கர்நாடக அரசு பதவியை அடைய் சந்தாசாகிப் பிரெஞ்சு ஆளுநர் டியூப்ளேயின் உதவியை நாடினார். சந்தாசாகிபும் பிரெஞ்சுக்காரரும் கர்நாடக

நவாபான அன்வருத்தீனைத் தோல்வியுறச் செய்தனர். அன்வருத்தீனின் மகன் முகம்மது அலி திருச்சிராப்பள்ளிக்கு ஓடி அங்குள்ள கோட்டையில் ஒளிந்து கொண்டார். சந்தா சாகிப் கர்நாடகத்தின் நவாப் ஆனார்.

முகம்மது அலி ஆங்கிலேயரின் உதவியை நாடினார். சந்தாசாகிப் பிரெஞ்சு உதவியுடன் திருச்சிராப்பள்ளியை முற்றுகையிட்டார். முகம்மது அலிக்கு உதவி செய்ய கிளைவ் ஒரு சிறு படைக்குத் தலைமை தாங்கி, கர்நாடகத்தின் தலை நகராகிய ஆர்க்காட்டை அடைந்து அதைக் கைப்பற்றினார். அப்போது சந்தாசாகிப் ஒரு பெரும் படையைத் தன் மகன் தலைமையில் ஆர்க்காட்டை மீட்க அனுப்பினார். கி.பி. 1751-ல் கிளைவ் அப்படையைத் தோற்கடித்து ஓர் ஒப்பற்ற வெற்றியைப் பெற்றார். கிளைவ் ஆர்க்காட்டு வீரர் என்ற சிறப்புப் பெயர் பெற்றார். பின்னர் அவரும் லாரன்ஸ் என்னும் ஆங்கிலத் தளபதியும் திருச்சிராப்பள்ளிக்குச் சென்று அங்கு சந்தாசாகிபைத் தோற்கடித்து, முகம்மது அலியைக் கர்நாடகத்தின் நவாபாக ஆக்கினர். டியூப்ளேயின் எண்ணங்கள் பகற்கனவாயின. ஆங்கிலேயரின் செல்வாக்கு கர்நாடகத்தில் அதிகமாயிற்று.

### வங்காளத்தில் ஆங்கிலேயர் ஆதிக்கம்

கிளைவ் கி.பி. 1753-ல் தம் தாய் நாடு திரும்பினார். அவர் இந்தியாவிற்கு கி.பி. 1756-ல் திரும்பி வந்தார். அப்போது வங்காளத்தில் ஆங்கிலேயருக்கு ஆபத்து ஏற்பட்டது. வங்காள நவாபான சிராஜ் உத் தௌலா கல்கத்தாவைத் தமதாக்கிக்கொண்டார். அவர் ஆங்கிலேயரை வெறுத்தார். கிளைவ் சென்னையில் இருந்து கல்கத்தாவிற்கு ஒரு படையுடன் சென்றார். அவர் கல்கத்தாவை மீட்டார். கி.பி. 1757-ல் சிராஜ் உத் தௌலா பிரெஞ்சுக்காரர்களின் உதவியைப் பெற்றார். இவ்வாண்டு பிளாசி என்னுமிடத்தில் கிளைவ் சிராஜ் உத் தௌலாவைத் தோற்கடித்து வெற்றி பெற்றார். சிராஜ் உத் தௌலாவின் தளகர்த்தராகிய மீர்ஜாபர் வங்காளத்தின் நவாபாக ஆக்கப்பட்டார். பிளாசி வெற்றியின் விளைவாக வங்காளத்தில் ஆங்கிலேயரின் ஆதிக்கம் ஏற்பட்டது.

பிளாசிப் போரின் பயனாக ஆங்கிலேயருக்கு 24 பர்கானாக்கள் என்ற மாவட்டம் கிடைத்தது. மீர்ஜாபர் ஆங்கிலேயருக்கு அளவற்ற பொருளை வாரிக் கொடுத்தார். உண்மையில் பிளாசி வெற்றியே பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இந்தியாவில் நிலைபெற அடிகோலியது.




படம் 38. கி. பி. 1765-ல் இந்தியா

மீர்ஜாபர் திறமையற்றவர். விரைவில் ஆங்கிலேயருக்கும் அவருக்குமிடையே கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டன.

மீர்ஜாபர் நீக்கப்பட்டார். அவருடைய மருமகனான மீர்காசிம் வங்காள நவாபாக்கப்பட்டார். ஆங்கிலேயருக்கும் மீர்காசி முக்குமிடையே இருந்த உறவு சுமுகமாக இல்லை. மீர்காசிம் அயோத்தி நவாபுடனும் மொகலாயச் சக்கரவர்த்தி இரண்டாம் ஷா ஆலமுடனும் சேர்ந்து கொண்டார். கி. பி. 1764-ல் இம்மூவரையும் ஆங்கிலேயர் பக்ச ர் என்னுமிடத்தில் நடந்த சண்டையில் தோற்கடித்தனர். இந்த வெற்றி ஆங்கிலேயரின் வங்காள ஆதிக்கத்தை உறுதிப்படுத்தியது.

### அலகாபாத் உடன்படிக்கை (1765)

கி. பி. 1765-ல் அலகாபாத் என்னுமிடத்தில் ஆங்கிலேயர் மொகலாயப் பேரரசர் ஷா ஆலமுடன் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டனர். அதன்படி ஆங்கிலேயர் பீகார், வங்காளம், ஒரிசா முதலிய பகுதிகளில் திவானி என்னும் வரி வசூலிக்கும் உரிமையை மொகலாயப் பேரரசரிடம் இருந்து பெற்றனர்.

### வங்காளத்தில் இரட்டையாட்சி முறை

பின்னர், கிளைவ் வங்காளத்தின் ஆட்சிமுறையை ஒழுங்கு படுத்தினார். அவர் வங்காளத்தில் இரட்டையாட்சி முறையை ஏற்படுத்தினார். அதனால் வங்காள நவாப் பெயரளவில் அதிகாரியானார். வங்காளத்தின் பாதுகாப்பையும் வரி வாங்குதலையும் ஆங்கிலேயர் ஏற்றுக்கொண்டனர். கிளைவ் கி. பி. 1768 வரை இந்தியாவில் பணியாற்றிவிட்டுப் பிறகு தம் நாட்டிற்குத் திரும்பினார்.

## வாரன் ஹேஸ்டிங்ஸ் (கி.பி. 1772—1785)

### வாரன்ஹேஸ்டிங்ஸ் செய்த சீர்திருத்தங்கள்

இராபர்ட் கிளைவ் இந்தியாவில் அடிகோலிய ஆங்கிலப் பேரரசை வலிமை மிக்கதாக நிலைபெறச் செய்த பெருமை வாரன்ஹேஸ்டிங்ஸையே சாரும்.

வாரன்ஹேஸ்டிங்ஸ் கி.பி. 1772-ல் வங்காளத்தின் ஆளுநராக நியமிக்கப்பட்டார். அவர் கிளைவின் இரட்டையாட்சியை ஒழித்தார். வங்காளத்தையும் பீகாரையும் பல மாவட்டங்களாகப் பிரித்தார். ஒவ்வொரு மாவட்டத்திலும் வரி வசூலிப்பதற்காக ஓர் ஆங்கிலக் கலெக்டரை அவர் நியமித்தார். கல்கத்தாவில் ஏற்படுத்தப்பட்ட ரெவின்யூ போர்டு என்னும் ஒரு சபை வரிவசூலைக் கண்காணித்தது. ஒவ்வொரு மாவட்டத்திலும் சிவில், கிரிமினல் வழக்குகளை விசாரிக்கத் தனியாக நீதிமன்றங்களை வாரன் ஹேஸ்டிங்ஸ் அமைத்தார். காவற்படை சீர்திருத்தியமைக்கப்பட்டது. வாரன்ஹேஸ்டிங்ஸ் இந்து. முஸ்லிம் சட்டங்களை எல்லாம் ஒன்றாகத் தொகுக்கும்படி செய்தார்.

## ஒழுங்குமுறைச் சட்டம் (1773)

கிழக்கிந்தியக் கம்பெனியின் நிதிநிலை சரியில்லை. அதனால் கம்பெனி ஆங்கில அரசாங்கத்தினிடம் உதவி கோரி ஒரு பெரும் தொகையைக் கடனாகக் கேட்டது. அப்போது ஆங்கிலேய நாடாளுமன்றம் கம்பெனியின் ஆட்சியைச் சீர்திருத்தும் நோக்கத்துடன் ஒழுங்குமுறைச் சட்டத்தை கி.பி.1773-ல் இயற்றியது. இதன்படி வங்காள கவர்னர், கல்கத்தா கவர்னர் ஜெனரலானார். வாரன் ஹேஸ்டிங்ஸ் முதல் கவர்னர் ஜெனரல் ஆனார். இவருக்கு ஆட்சிபுரிவதில் துணை புரிய ஓர் ஆலோசனைக் குழு அமைக்கப்பட்டது. அது நான்கு பேர்கள் கொண்ட ஒரு குழுவாகும். கல்கத்தாவில் ஒரு தலைமை நீதிமன்றம் நிறுவப்பட்டது. அந்நீதிமன்றத்தின் பிரதம நீதிபதி சர் எலிஜா இம்பே ஆவார். ஒழுங்குமுறைச் சட்டம் இயற்றப்பட்ட பிறகுதான் ஆங்கில நாடாளுமன்றம் கம்பெனி விவகாரங்களில் தலையிடத் தொடங்கியது.

## ஹைதர் அலியுடனும் மராத்தியர்களுடனும் போர்

வாரன்ஹேஸ்டிங்ஸ் காலத்தில் ஆங்கிலேயர்கள் மைசூரை ஆண்டு வந்த ஹைதர் அலியுடனும் அவருக்குப்பின் திப்பு

சுல்தானுடனும் போரிட்டு வெற்றி பெற்றனர். பீஷ்வாப் பதவிக்காக மராத்தியர்களிடையே போட்டி ஏற்பட்டது. ஆங்கிலேயர்கள் இப்போட்டியில் கலந்து கொண்டனர். அதற்கு முதல் மராத்தியப் போர் என்று பெயர். நானா பர்னவீஸ் என்னும் திறமை வாய்ந்த மராத்திய இராசதந்திரி ஆங்கிலேயரைக் கடுமையாக எதிர்த்தார். கவர்னர் ஜெனரல் ஆங்கிலேயர் வெற்றி பெறும்படி போரை நன்கு நடத்தினார். கி. பி. 1782-ல் சால்பாய் உடன்படிக்கை ஏற்பட்டது. அதன்படி ஆங்கிலேயர்களுக்கு சால்செட் என்னும் தீவு கிடைத்தது.



படம் 39. ஹைதர் அலி

## பிட் இந்தியச் சட்டம் (1784)

ஒழுங்கு முறைச் சட்டத்தில் குறைகள் இருந்தன. அந்தக் குறைகளை நீக்கி, கம்பெனியின் ஆட்சியை நன்கு சீர்திருத்துவதற்கு ஆங்கில நாடாளுமன்றம் கி. பி. 1784-ல் பிட் இந்தியச் சட்டத்தினை இயற்றியது. அச்சட்டத்தின்படி கம்பெனி ஆட்சியைக் கவனிக்க ஒரு நிர்வாக சபை இலண்டனில் அமைக்கப்பட்டது. இதன் உத்தரவு இன்றிக் கம்பெனியார் இந்தியாவில் சண்டையோ சமாதானமோ ஏதுவும் செய்யக் கூடாது. கவர்னர் ஜெனரலது ஆலோசனைக் குழுவின் உறுப்பினர் மூவராயினர். கவர்னர் ஜெனரலின் அதிகாரம் உறுதிப்படுத்தப்பட்டது. அவருக்குக்கீழ்தான் சென்னை, பம்பாய் கவர்னர்கள் இயங்கவேண்டும் என்று கூறப்பட்டது.

## காரன்வாலிஸ் பிரபு (கி.பி. 1786—1793)

### காரன்வாலிஸ் பிரபு செய்த சீர்திருத்தங்கள்

காரன்வாலிஸ் பிரபு கி. பி. 1786ஆம் ஆண்டு கவர்னர் ஜெனரலாக நியமிக்கப்பட்டார்.

காரன்வாலிஸ் பிரபு சீர்திருத்தங்கள் பல் இயற்றி நிர்வாகத்தை ஒழுங்குபடுத்தினார். கம்பெனியின் பணியாளர்களை முழு நேர பொதுப் பணியாளர்களாகச் செய்தார். பணியாட்கள் தனிப்பட்ட முறையில் செய்து கொண்டிருந்த வியாபாரத்தை ஒழித்தார். திறமையின் அடிப்படையில் வேலைகள் கொடுக்கப்பட்டன. ஆனால், காரன்வாலிஸ் பிரபு இந்தியர்களுக்கு உயர்ந்த உத்தியோகங்களை மட்டும் அளிக்கவில்லை. அவர் மாவட்டக் கலெக்டர்களிடமிருந்த நியாய விசாரணை அதிகாரங்களை எடுத்துவிட்டு, அவர்கள் வரி வசூலை மட்டும் கவனிக்குமாறு செய்தார். ஒவ்வொரு மாவட்டத்திலும் சிவில் கிரிமினல் வழக்குகளை விசாரிக்கத் தனித்தனி நீதிபதிகளை நியமித்தார்.

### நிலையான நில்வரித் திட்டம் (1793)

காரன்வாலிஸ் பிரபு கொண்டு வந்த சீர்திருத்தங்களுள் முக்கியமானது நிலையான நிலவரித் திட்டமாகும். திவானி உரிமையைப் பெற்ற கிழக்கிந்தியக் கம்பெனி விவசாயிகளிடம் வரிவசூல் செய்யும் உரிமையை 'ஜமீன்தார்' என்னும் வகுப்பினருக்கு ஏலத்தில் விட்டுக் கூடுதலான தொகைக்குக் கேட்போருக்கு அளித்தது. இதனால் நிலவரி ஒவ்வோர் ஆண்டும் மாறுபட்டது. ஜமீன்தார்கள் வறுமைக்குள்ளாயினர். விவசாயிகள் துன்புற்றனர்.

கி. பி. 1793-ல் காரன்வாலிஸ் பிரபு நிலையான நிலவரித் திட்டத்தை வங்காளத்தில் அமலுக்குக் கொண்டு வந்தார். திட்டத்தின்படி ஜமீன்தார்களே நில உரிமையாளராக ஆக்கப்பட்டனர். அவர்கள் செலுத்த வேண்டிய நிலவரி நிச்சயிக்கப்பட்டது. அது மாறாதவாறு அமைக்கப்பட்டது. இதனால் அரசாங்கத்திற்கு ஆண்டுதோறும் குறிப்பிட்ட வருவாய்

ஒழுங்காக வந்துகொண்டிருந்தது. ஜமீன்தார் பெரும் பணக்காரர்களாயினர். அவர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குத் தூண் போன்று நின்று உதவிபுரிந்தனர். சமுதாயத்தின் தலைவர்களாக ஜமீன்தார்கள் விளங்கினர். தங்களுடைய கொடுத்




படம் 40. 1793-ல் இந்தியா

துதவும் தன்மையால் சமுதாயத்திற்கு உதவிசெய்தனர். ஜமீன்தார்கள் விவசாயத்தைப் பெருக்கினர்; வருவாய் உயர்ந்தது.

ஆனால், நிலையான நிலவரித் திட்டத்தால் தீமைகளும் ஏற்பட்டன. சில ஜமீன்தார்கள் விவசாயத்தைப் புறக்கணித்தனர். ஆடம்பர வாழ்க்கை வாழ்ந்தனர். நிலங்களைச் சரிவர கண்காணிக்கவில்லை. விவசாயிகளின் நலனைப் பேணவில்லை. நிலங்களின் மதிப்பு உயர்ந்து, நிலங்களில் விளையும் தானியங்களின் விலை அதிகமாயினும், கம்பெனிக்கு 1793-ல் நிர்ணயிக்கப்பட்ட தொகைதான் கிடைத்தது. இது கம்பெனிக்கு ஒரு பேரிழப்பு ஆகும்.

## மூன்றாம் மைசூர்ப் போர் (1790—1792)

மைசூரை ஆட்சி புரிந்துவந்த திப்பு சுல்தான் திறமைமிக்க அரசர். அவர் ஆங்கிலேயரை வெறுத்தார். அவர்களைத் தென் இந்தியாவினின்று துரத்திவிட்டுத் தம் அதிகாரத்தை நிலைநாட்ட அவர் எண்ணங்கொண்டார். திப்பு சுல்தான் ஆங்கிலேயரின் நண்பரான திருவாங்கூர் அரசரின் இராச்சியத்தின் மேல் படையெடுத்தார். அவரை எதிர்க்க ஆங்கிலேயரும், மராத்தியர்களும், நிஜாமும் ஒரு கூட்டு ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டனர். காரன்வாலிஸ் திப்பு சுல்தானுடன் கி. பி. 1790-ல் போர் தொடுத்தார். இதுவே மூன்றாம் மைசூர்ப் போர் எனப்படும்.

காரன்வாலிஸ் பிரபு தாமே இந்தப் போரைத் திறமையாக நடத்தி வெற்றி பெற்றார். அவர் பெங்களூரை எளிதாகக் கைப்பற்றினார். திப்புவின் தலைநகராகிய ஸ்ரீரங்கப் பட்டினத்தை முற்றுகையிட்டார். இறுதியில் திப்பு சுல்தான் கி. பி. 1792-ல் ஆங்கிலேயருடன் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டார். இதுவே ஸ்ரீரங்கப்பட்டின உடன்படிக்கை எனப்படும். இதன்படி மலையாளம், திண்டுக்கல், கோயமுத்தூர், சேலம் ஆகியவை ஆங்கிலேயருக்குக் கிடைத்தன. துங்கபத்ரா ஆற்றின் வடபகுதியை மராத்தியர் பெற்றனர். நிஜாம் கொடை ஜில்லாக்களின் ஒரு பகுதியைப் பெற்றார்.

## வெல்லெஸ்லி பிரபு (கி.பி.1798—1805)

### தலையிடாக் கொள்கையைக் கைவிடல்

காரன்வாலிஸ் பிரபுவிற்குப் பிறகு ஸர் ஜான் ஷோர் என்பவர் கி. பி. 1793—1798 வரை கவர்னர் ஜெனரல்




படம் 41. வெல்லெஸ்லி கால இந்தியா

வேலையைப் பார்த்து வந்தார். இவர் தலையிடாகக் கொள்கையைப் பின்பற்றினார். அவருக்குப் பிறகு

வெல்லெஸ்லி பிரபு என்பவர் கவர்னர் ஜெனரலாக கி. பி. 1798-ல் பதவி ஏற்றார். இவர் திறமை படைத்தவர். இந்தியாவை நல்ல முறையில் ஆட்சி செய்யவேண்டுமானால் அது ஆங்கிலேயரால் மட்டுமே இயலும் என்று இவர் கருதினார்.

சுதேச மன்னர்கள் பலர் பிரெஞ்சுக்காரர்களின் உதவியை நாடினர். தம் படைகளை மேனாட்டுப் போர்முறையில் பயிற்றுவித்தனர். ஆங்கிலேயரை இந்நாட்டினின்று துரத்த ஆசைகொண்டனர். இதனால் வெல்லெஸ்லி பிரபு தலையிடாக் கொள்கையைக் கைவிட்டார். இந்தியாவில் ஆங்கில ஆதிக்கம் பரவ வெவ்வேறு முறைகளை அவர் மேற்கொண்டார்.

### துணைப் படைத் திட்டம்

இவர் மேற்கொண்ட கொள்கைகளுள் முக்கியமானது துணைப் படைத் திட்டம் ஆகும். அவர் காலத்தில் பிரான்சின் தளகர்த்தரான நெப்போலியன் அநேக வெற்றிகள் அடைந்து பிரான்ஸ் நாட்டை ஒரு வல்லரசாக்கினார். பிரெஞ்சு அபாயத்தை இந்தியாவிலிருந்து நீக்க அவர் துணைப்படைத் திட்டத்தை வகுத்தார். இது சுதேச சமஸ்தானங்களை ஆங்கிலேய அதிகாரத்திற்குட்படுத்தவும் இந்தியாவில் ஆங்கில ஏகாதிபத்தியத்தை நிலைநாட்டவும் வெல்லெஸ்லி பின்பற்றிய ஒரு சிறந்த முறையாகும். இத்திட்டத்தின்படி சுதேச மன்னர்கள் தங்கள் தற்காப்பிற்காக ஆங்கிலேய துணைப்படை ஒன்றைத் தங்கள் நாட்டில் வைத்துக் கொள்ள வேண்டும். ஆங்கிலேய அதிகாரி ஒருவரைத் தம் தலைநகரில் இருக்க ஏற்றுக்கொள்ள வேண்டும். ஆங்கிலேயப் படையை இருத்தி வைப்பதற்காக ஆகும் செலவை இந்திய மன்னர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும். அல்லது அச்செலவுக்கு ஈடாகச் சில பிரதேசங்களை ஆங்கிலேயருக்குக் கொடுத்தாக வேண்டும். சுதேச மன்னர்கள் ஆங்கிலேயரின் அனுமதியின்றித் தம்முள் அரசியல் உறவு வைத்துக்கொள்ளக் கூடாது. ஆங்கிலேயரைத் தவிரப் பிற ஐரோப்பியர்களுடன் உறவு கொள்ளக் கூடாது. ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியின் அரசாங்கம் உள்நாட்டு

விவகாரங்களில் இம்மன்னர்களுக்கு முழு உரிமை அளிப்பதாகக் கூறிற்று. பிறர் தாக்குதலிலிருந்து அவர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதாக வாக்குறுதி அளித்தது. இத்திட்டத்தைச் சுதேச மன்னர்கள் ஏற்குமாறு வெல்லெஸ்லி அவர்களை வற்புறுத்தினார். இந்தத் துணைப் படைத் திட்டத்தை ஐதராபாத்தின் நிசாம் ஏற்றுக் கொண்டார். அவர் ஆங்கிலேயப் படைச் செலவுக்குக் கடப்பை, பல்லாரி, கர்நூல், அனந்தப்பூர் ஆகிய மாவட்டங்களை அளித்தார். ஆதலால் அவை 'கொடை மாவட்டங்கள்' எனப் பெயர் பெற்றன. பின்னர் அயோத்தி நவாபு இத்திட்டத்தை ஒப்புக் கொண்டு யமுனை-கங்கை பிரதேசத்தை ஆங்கிலேயருக்குக் கொடுத்தார். இதைப் போன்று பீஷ்வாவும் கெயிக்வாரும் துணைப் படைத் திட்டத்தை ஒப்புக் கொண்டனர். திப்பு சுல்தானும், மற்ற மராத்தியத் தலைவர்களும் இத் திட்டத்தை ஏற்றுக் கொள்ள மறுத்தனர். வெல்லெஸ்லி அவர்களுடன் போர் தொடுத்தார்.

### நான்காம் மைசூர்ப் போர் (1799)

மைசூர் அரசரான திப்பு சுல்தான் தமது படையை வலுப்படுத்தினார். அவர் பிரான்சின் தலைவரான நெப்போலியனது உதவியை நாடினார். அவர் பிரெஞ்சு இராணுவ வீரர்களைக் கொண்டு தம் படைகளைச் சீர்தூக்கி ஒழுங்குபடுத்தினார். இதனைக் கம்பெனி அரசாங்கம் விரும்பவில்லை. வெல்லெஸ்லி திப்புவுடன் நான்காம் மைசூர்ப் போரை நடத்தினார். திப்பு தீரத்துடன் போரிட்டார். ஸ்ரீரங்கப்பட்டினக் கோட்டை வாயிலில் வீரத்துடன் போர்புரிந்து மாண்டார். திப்பு காலமானதும் அவர் இராச்சியத்தின் பெரும்பகுதியை ஆங்கிலேயரும் நிசாமும் பகிர்ந்து கொண்டனர். எஞ்சிய பகுதியை வெல்லெஸ்லி கிருஷ்ணராஜ உடையார் என்ற பழைய அரச வம்சத்தைச் சேர்ந்தவருக்குக் கொடுத்தார்.

### இரண்டாம், மூன்றாம் மராத்தியப் போர்கள் (1803—1805)

மராத்தியத் தலைவர் பீஷ்வா இரண்டாம் பாஜிராவ் 1802-ல் பஸ்ஸின் உடன்படிக்கையின்படி துணைப்படைத் திட்டத்தை ஏற்றுக் கொண்டார். இதை மற்ற மராத்தியத்

தலைவர்கள் விரும்பவில்லை. அவர்கள் ஆங்கிலேயருடன் போரிட ஆயத்தமாயினர். இரண்டாம் மராத்திய யுத்தம் நடைபெற்றது. இந்தப் போரில் ஆங்கிலேயர்கள் வெற்றி பெற்றனர். மராத்தியர்கள் வெல்லெஸ்லியின் துணைப்படைத் திட்டத்தை ஏற்றுக்கொண்டார். ஆனால், ஹோல்கார் என்ற மராத்தியத் தலைவர் அடிபணியவில்லை. அவர் நடத்திய போர் மூன்றாம் மராத்தியப் போராகும். இது நீடித்ததால் வெல்லெஸ்லி இங்கிலாந்துக்குத் திருப்பி அழைக்கப்பட்டார்.

### சென்னை இராஜதானியை உருவாக்குதல் (1801)

கர்நாடகம், தஞ்சை ஆகிய பகுதிகள் சரிவர ஆளப்படவில்லை என்று கூறி வெல்லெஸ்லி பிரபு அவற்றை பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனியின் பிரதேசத்துடன் இணைத்துக் கொண்டார். இதற்கு முன்பே வடசர்க்கார் மாவட்டங்கள் கிளைவ் காலத்திலும், மைசூர்ப் போர்களினால் அநேக பகுதிகளும், துணைப்படைத் திட்டத்தினால் கொடை மாவட்டங்களும் ஆங்கிலேயருக்குக் கிடைத்திருந்தன. எல்லா மாவட்டங்களையும் சேர்த்து வெல்லெஸ்லி சென்னை இராஜதானியை 1801 - ல் உருவாக்கினார்.

## டல்ஹௌசி பிரபு (கி.பி. 1848—1856)

### டல்ஹௌசி பிரபுவின் ஏகாதிபத்தியக் கருத்துகள்

டல்ஹௌசி பிரபு இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக கி.பி. 1848-ல் நியமிக்கப்பட்டார். ஏகாதிபத்தியப் பெருமிதம் படைத்தவர். இவர் பிரிட்டிஷ் ஆட்சியே மிக மேன்மையானது என்று இறுமாப்புக் கொண்டிருந்தார். இவர் பதவி வகித்த எட்டு ஆண்டுகளில் இந்தியா முழுவதும் ஆங்கிலேயரின் ஆட்சியின் கீழ் வந்தது.

டல்ஹௌசி பிரபு நாடுகள் சேர்க்கும் முறையைத் தீவிரமாகப் பின்பற்றினார். போர், அவகாசியிலிக் கொள்கை, நல்லாட்சியற்ற நாடுகளைச் சேர்த்தல் ஆகிய மூன்று முறைகளிலும் நாடுகளைச் சேர்க்கத் தொடங்கினார்.

போர்கள்

டல்ஹௌசி பிரபு காலத்தில் இரண்டு போர்கள் நடந்தன. அவை இரண்டாம் சீக்கியப் போரும் இரண்டாம் பர்மியப் போரும் ஆகும். சீக்கியப் போரினால் பஞ்சாப் முழுவதும் ஆங்கிலேயரின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. பர்மியப் போரினால் கீழ்பர்மா ஆங்கில ஆட்சியோடு இணைக்கப் பட்டது.

அவகாசியிலிக் கொள்கை அல்லது லாப்ஸ் கொள்கை அல்லது நாடு இழப்புக் கொள்கை

டல்ஹௌசிப் பிரபு அவகாசியிலிக் கொள்கை அல்லது லாப்ஸ் கொள்கையை நடைமுறையில் கொண்டு வந்தார். அவகாசியிலிக் கொள்கைப்படி சந்ததியற்ற சுதேச மன்னர்களின் இராச்சியங்கள் அவர்கள் காலத்திற்குப் பிறகு ஆங்கிலேயரைச் சேரும் என்று டல்ஹௌசி அறிவித்தார். அவ்வாறு இணைக்கப்பட்ட இராச்சியங்கள் சதாரா, ஜான்ஸி, நாகபுரி முதலியனவாகும்.

நல்லாட்சியற்ற நாடுகளைச் சேர்த்தல்

அயோத்தியில் நல்ல முறையில் ஆட்சி நடைபெறவில்லை என்று காரணங்காட்டி அதனை டல்ஹௌசி இணைத்துக் கொண்டார். துணைப்படைத் திட்டத்தினது மீதிப் பணத்திற்கு ஈடாக நிசாமிடமிருந்து பேராரையும் டல்ஹௌசி கவர்ந்து கொண்டார். பீஷ்வா இரண்டாம் பாஜிராவ் காலமானார். அவர் இறந்தவுடன் தத்துப் பிள்ளையான நானாசாகிப் என்பவருக்கு உபகாரச் சம்பளம் கொடுக்க மறுத்தார். கர்நாடக நவாபின் பட்டத்தை ஒழித்தார். தஞ்சை அரசரின் 'ராஜா' பட்டம் ஒழிக்கப்பட்டது.

டல்ஹௌசி பிரபுவின் சீர்திருத்தங்கள்

டல்ஹௌசி பிரபு நிர்வாக முறையைச் சிறப்புற அமைத்தார்.[2] குடிகளின் நலன்களைப் பெருக்கப் பல சீர்திருத்தங்களைச் செய்தார். அவர் பொது மராமத்து இலாகா ஒன்றை அமைத்தார். கங்கைக் கால்வாய் போன்ற நீர்ப்பாசனக்

திட்டங்களை விரிவுபடுத்தினார். அவர் சாலைகள், பாலங்கள், நீர்ப்பாசன வசதிகள் முதலிய பல சௌகரியங்களை

படம் 42. டல்ஹௌசி காலத்து இந்தியா

ஏற்படுத்தினார். டல்ஹௌசி பிரபு 'இந்திய இருப்புப்பாதைகளின் தந்தை' என்று நம் வரலாற்றில் அழைக்கப்படுகின்றார். முக்கிய உள்நாட்டு இடங்களைத் துறைமுகப் பட்டினங்களுடன்

இருப்புப் பாதைகள் போட்டு இணைத்தார். முக்கியத் தேவைகளுக்காகவும் வர்த்தகப் பெருக்கத்திற்காகவும் இருப்புப் பாதைகள் போடப்பட்டன. கி.பி. 1853-ல் பம்பாய்க்கும் தானாவிற்கும் இடையில் இந்தியாவில் முதன் முதலாக இருப்புப்பாதை போடப்பட்டது. தபால் முறை சீர்திருத்தியமைக்கப்பட்டது. பொதுவான அரையணா தபால் முறை அமல்படுத்தப்பட்டது. கி.பி. 1854-ல் தந்தி முறை கல்கத்தாவிற்கும் ஆக்ராவிற்கும் இடையே முதன்முதலாக நடைமுறையில் கொண்டுவரப்பட்டது.

டல்ஹௌசிப் பிரபு காலத்தில் கல்வி முறைக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. தொடக்கப் பள்ளி கல்வி முறை வலியுறுத்தப்பட்டது. உயர்நிலைப் பள்ளிகளும் கல்லூரிகளும் வளர ஊக்கம் கொடுக்கப்பட்டது. பல்கலைக் கழகங்கள் சென்னை, பம்பாய், கல்கத்தா ஆகிய இடங்களில் அமைக்க நடவடிக்கைகள் எடுத்தார். தனியார் துறையினர் பள்ளிகளைத் திறந்து நடத்த ஊக்கமளிக்கப்பட்டனர். டல்ஹௌசி 'ரூர்கி' என்னுமிடத்தில் ஒரு பொறியியல் கல்லூரியை நிறுவினார். துறைமுகங்களும் கலங்கரை விளக்கங்களும் அமைக்கப்பட்டன. இவர் கி.பி. 1856 வரை சிறப்பாக நிர்வாகம் செய்து தம் நாடு திரும்பினார்.

## பயிற்சிகள்

I. விரிவான விடையளிக்கவும்

1. ஐதராபாத்திலும் கர்நாடகத்திலும் யார் யாருக்கிடையே வாரிசுப் போர்கள் நடந்தன? எவ்வாறு முகம்மது அலி கர்நாடக நவாபானார்?
2. வங்காளத்தில் ஆங்கிலேயரின் ஆதிக்கம் எவ்வாறு ஏற்பட்டது?
3. ஒழுங்கு முறைச் சட்டம் எப்போது இயற்றப்பட்டது? அதன் அம்சங்கள் யாவை?
4. நிலையான நிலவரித் திட்டம் எப்பொழுது யாரால் ஏற்படுத்தப்பட்டது? இத்திட்டத்தின் முக்கிய ஏற்பாடுகள் யாவை?

5. துணைப் படைத் திட்டத்தின் நோக்கம் யாது? துணைப் படைத் திட்டத்தின் அம்சங்கள் யாவை?

6. அவகாசியிலிக் கொள்கை என்பது என்ன?

## II. சுருக்கமான விடை எழுதுக

1. முதன் முதலாக இந்தியாவிற்கு ஐரோப்பாவிலிருந்து கடல் மார்க்கத்தைக் கண்டுபிடித்தவர் யார்? அவர் எந்த நாட்டைச் சேர்ந்தவர்?
2. கிளைவ் ஏன் 'ஆர்க்காட்டு வீரர்' என்று அழைக்கப்படுகின்றார்?
3. பிளாசிப் போர் யார் யாருக்கிடையே நடந்தது? எப்போது நடந்தது?
4. அலகாபாத் உடன்படிக்கையால் ஆங்கிலேயர் பெற்ற உரிமை யாது?
5. இரட்டை ஆட்சி முறையை யார் கொண்டுவந்தார்?
6. சென்னை இராஜதானியை உருவாக்கிய கவர்னர் ஜெனரல் யார்?
7. அவகாசியிலிக் கொள்கையில் எந்த இந்திய இராச்சியங்கள் பிரிட்டிஷ் ஆட்சியுடன் இணைக்கப்பட்டன?

## III. காலியாக உள்ள இடங்களைப் பொருத்தமான வார்த்தைகளைக் கொண்டு நிரப்புக.

1. கி.பி. 1782 சால்பாய் உடன்படிக்கையின்படி ஆங்கிலேயர்களுக்கு———— கிடைத்தது.
2. கி. பி. 1853-ல் ———— க்கும், ———— வுக்கும் இடையில் இந்தியாவில் முதன்முதலாக இருப்புப் பாதை போடப்பட்டது.

## IV. நீங்களே செய்யுங்கள்

1. இரண்டு இந்தியப் படங்களில் குறிக்கவும்.

(1) வெல்லெஸ்லி காலத்திலும் டல்ஹௌசி காலத்திலும் ஆங்கிலேயருக்குச் சொந்தமான பிரதேசங்கள்.

(2) இராபர்ட் கிளைவ், வாரன் ஹேஸ்டிங்ஸ், ஹைதர் அலி, காரன்வாலிஸ் பிரபு, வெல்லெஸ்லி பிரபு, திப்பு சுல்தான், டல்ஹௌசி பிரபு முதலியோர்களின் படங்களைச் சேகரித்து உங்கள் படத் தொகுப்புப் பதிவேட்டில் ஒட்டவும்.

# 20. முதல் சுதந்திரப் போர் (1857)

## முன்னுரை

இந்திய நாடு கி.பி. 1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் 15ஆம் நாள் விடுதலை அடைந்தது. ஆனால், துயரப்படாமலும் தொல்லைகளுக்கு உள்ளாகாமலும் இந்தியராகிய நாம் அன்னியரின் ஆட்சியினின்று விடுதலை பெறவில்லை. விடுதலை அடைந்த ஆண்டிலிருந்து ஏறக்குறைய 100 ஆண்டுகளுக்கு முன்னால் இந்திய சமுதாயத்தினிடத்தில் சுதந்திரத் தாகம் ஏற்பட்டது. அதன் விளைவாக முதல் சுதந்திரப் போர் கி.பி. 1857ஆம் ஆண்டில் ஏற்பட்டது. அதற்குப் பல காரணங்கள் உண்டு.

## காரணங்கள்

அரசியல் காரணங்கள் : டல்ஹௌசி பிரபுவின் நாடு சேர்க்கும் முறையால் நாடெங்கும் அரசியல் கொந்தளிப்பு ஏற்பட்டது. சதாரா, ஜான்ஸி, நாகபுரி போன்ற சுதேச இராச்சியங்களின் விஷயத்தில் டல்ஹௌசி பிரபு லாப்ஸ் அல்லது அவகாசியிலிக் கொள்கையைக் கையாண்டார். இதனை இந்துக்கள் வெறுத்தனர். அயோத்தி ஆங்கில இராச்சியத்துடன் இணைக்கப்பட்டது. இதனால் அதன் அரசரும் குடிமக்களும் இந்திய சுதேச மன்னர்களும் ஆங்கிலேயர் மீது வெறுப்பு கொண்டனர். சுதேச இராச்சியங்கள் ஆங்கில இராச்சியத்துடன் இணைக்கப்பட்டபோது, அரசர் மட்டும் தம் பதவியை இழக்கவில்லை; அங்குள்ள குடிமக்களும் தம் உரிமைகளை இழந்து பிழைப்புக்கு வழியின்றித் தவிக்கலாயினர். பாஜிராவின் தத்துப் புதல்வரான நானா சாகிப்புக்கு உபகாரச் சம்பளம் மறுக்கப்பட்டமையால் அவர் ஆங்கிலேயரின் கொடிய பகைவரானார். ஆங்கிலேயர் இன வெறிக் கொள்கையைப் பின்பற்றினர். இந்திய நீதிபதிகளுக்குக் குற்றஞ் சாட்டப்பட்ட ஆங்கிலேயர்களை விசாரிக்கும் உரிமை மறுக்கப்பட்டது.

சமூகக் காரணங்கள் : வில்லியம் பெண்டிங் பிரபு காலத்திலிருந்து ஆங்கில ஆட்சியாளர்கள் பல சீர் திருத்தங்களை நடைமுறையில் கொண்டுவந்தனர். இந்திய சமுதாயத்தில் வைதீக மக்களிடையே இவை சந்தேகத்தைக் கிளப்பிவிட்டன. அவர்கள் தங்களைக் கிறித்தவராக மாற்று வதற்காகச் செய்யப்படும் முயற்சிகள்தான் இந்தச் சீர்திருத் தங்கள் என்று நினைத்தனர். கிறித்துவப் பாதிரிமார்கள் தங்குதடையின்றிக் கிறித்துவ மதப் பிரசாரம் செய்ய அனு மதிக்கப்பட்டனர். இவர்களுடைய நடவடிக்கைகள் எரிகின்ற நெருப்பில் எண்ணெயை ஊற்றுவது போலிருந்தது. முன்னர் இந்துச் சட்டப்படி மதம் மாறிய இந்துக்களுக்குக் குடும்பச் சொத்தில் உரிமையில்லாதிருந்தது. இந்து சொத்துரிமைச் சட்டம் மாற்றப்பட்டது. இதனால் கிறித்துவர்களாக மதம் மாறிய இந்துக்களுக்கும் தம் குடும்பச் சொத்தில் பங்கு உண்டு என்று கூறப்பட்டது. இதனைக் கண்டு வைதீக இந்துக்கள் அஞ்சினர். இருப்புப் பாதைகளும் தபால் தந்தி முறைகளும் இந்தியரை ஐரோப்பியர் போன்று ஆக்குவதற்கும் கிறித்து வர்களாக மாற்றுவதற்கும் கையாளும் யுக்திகள் என்று இந்தியர் கருதினர். தகுதி வாய்ந்தவர்களாயினும் இந்தியர் களுக்கு ஆங்கில அரசாங்கத்தில் பெரிய உத்தியோகங்கள் மறுக்கப்பட்டன. அதனால் இந்தியர்களுக்கு ஆங்கில அரசாங்கத்திடம் வெறுப்பு ஏற்பட்டது.

இராணுவக் காரணங்கள் : கம்பெனியின் படையிலிருந்த பெரும்பாலோர் சிப்பாய்கள் எனப்படும் இந்நாட்டுப் படை வீரர்கள் ஆவர். அவர்கள் பெற்று வந்த ஊதியங்கள் சொற்பமேயாகும். ஓர் இந்திய சுபேதாரின் உயர்ந்த ஊதியம், புதியதாகப் படையில் சேர்ந்த ஆங்கிலேயப் படை வீரரின் ஊதியத்தைவிடக் குறைவாகவே இருந்தது. வெகு தூரத்தில் உள்ள இடங்களில் போர் செய்யப் போனபோது இந்தியப் படை வீரர்களுக்கு அதிகப்படி ஊதியமும் சரிவரக் கொடுக்கப்படவில்லை. ஆங்கில அரசாங்கம் இந்தியப் படை வீரர்களை நம்பவில்லை. அவர்களுக்குப் பொறுப்பான உதவிகளைக் கொடுக்கவில்லை. வங்காளப் படையில் உயர் குலத்தோர் பலர் இருந்தனர். அவர்கள் கடல் கடந்து அயல்

நாடுகளுக்குச் சென்று போரிட மறுத்தனர். அதனால் தங்கள் சமயம் கெட்டுவிடும் என்று அஞ்சினர். ஆங்கிலப் படையில் சிப்பாய்கள்தான் பெரும்பான்மையோர். அதனால் அவர்கள் ஆங்கில அரசைக் கவிழ்த்தலாம் என்று நினைத்தனர்.

உடனடிக் காரணம்: இந்நிலையில் பிரிட்டிஷ் அரசாங்கம் 'என்பீல்டு' துப்பாக்கியைப் படைவீரர்கள் உபயோகிக்குமாறு கட்டளையிட்டது. இதில் கொழுப்பு தடவப்பட்ட தோட்டாக் களைச் சிப்பாய்கள் பயன்படுத்த வேண்டியவராயினர். பசுவின் கொழுப்பு உள்ளது என இந்துச் சிப்பாய்களும், பன்றியின் கொழுப்பு உள்ளதென் முஸ்லிம் சிப்பாய்களும் இப்புதிய தோட்டாக்களை வெறுத்தனர். இதன் விளைவாக வங்கச் சிப்பாய்கள் சிலர் கி.பி. 1857-ல் கொழுப்புத் தோட்டாக்களை உபயோகிக்க மறுத்தனர். அவர்களுக்கு இராணுவ நீதி மன்றம் 10 வருடம் சிறைத்தண்டனை அளித்தது. அதனால் சிப்பாய்கள் கிளர்ச்சி செய்து, கல்கத்தாவின் அருகில் உள்ள பாரக்பூரில் இராணுவ அதிகாரிகளைச் சுட்டுக் கொன்றனர்.

## புரட்சியின் போக்கு

இப்புரட்சியில் சிற்றரசர்களும் பொது மக்களும் கலந்து கொள்ளவே இது மாபெரும் தேசியப் போராக மாறியது.

டில்லிக்கு அருகிலுள்ள மீரட்டில் இப்புரட்சி பரவியது. சிப்பாய்கள் டில்லிக்குச் சென்று முகலாய மன்னர் இரண்டாம் பகதூர் ஷாவை இந்தியாவின் பேரரசராக விளம்பரம் செய்தனர். விரைவில் இப்புரட்சி லட்சுமணபுரி, கான்பூர். ஆக்ரா, ஜான்ஸி முதலிய இடங்களுக்கும் பரவியது. நானா சாகிப், கான்பூரில் புரட்சிக்குத் தலைமை தாங்கினார். ஜான்ஸியின் ராணி இலட்சுமிபாய் ஆங்கிலேயர்மீது போர் தொடங்கினார். தாந்தியாதோப் இதில் தலைமை தாங்கிய மாபெரும் வீரர்களுள் ஒருவர். முதலில் புரட்சிக் காரர்கள் வெற்றிகள் அடைந்தனர். ஆனால் புதிய படைகள் இங்கி லாந்திலிருந்து கம்பெனிக்கு வரவே வெற்றி, கம்பெனி பக்கம் திரும்பியது.

பகதூர்ஷா சிறைபிடிக்கப்பட்டு, ரங்கூனுக்கு நாடுகடத்தப்பட்டார். மத்திய இந்தியாவில் ஜான்ஸி ராணி லட்சுமிபாயும் தாந்தியா தோப் என்பவரும் வீரத்துடன் சண்டையிட்டனர். அங்கு நடந்த போரில் ஜான்ஸி ராணி ஆண் வேடம் பூண்டு வீராவேசத்துடன் போர்புரிந்து வீர சுவர்க்கம் அடைந்தார். புரட்சி அடக்கப்பட்டது.



படம் 43.
ஜான்ஸி ராணி இலட்சுமிபாய்

## புரட்சியின் தோல்விக்குக் காரணங்கள்

1. இப்புரட்சி நாடு முழுவதும் பரவவில்லை. சிந்துவும் இராசபுதனமும் அமைதியாக இருந்தன. பஞ்சாப் புரட்சியால் பாதிக்கப்படவில்லை. அது கம்பெனிக்கு உதவியது. நர்மதை ஆற்றிற்குத் தென் பகுதியிலுள்ள நாடு இப்புரட்சியில் கலந்துகொள்ளவில்லை. நிஜாமும் சிந்தியாவும் கம்பெனியாரிடத்தில் விசுவாசமாக இருந்தனர்.

2. ஜான்ஸி ராணி, தாந்தியா தோப் நீங்கலாக மற்ற புரட்சித் தலைவர்கள் திறமையற்றவர்கள். புரட்சித் தலைவர்களுள் ஒற்றுமையில்லாது போயிற்று.

3. பிரிட்டன் நாட்டிற்குக் கடலாதிக்கம் இருந்தது. விரைவில் ஆங்கிலேயருக்கு வேண்டிய பொருள்களையும் படை வீரர்களையும் அனுப்ப முடிந்தது.

4. இந்தியர்கள் பழைய போர்க் கருவிகளைக் கொண்டு போரிட்டனர். பகைவர்களிடமிருந்து கைப்பற்றிய ஆயுதங்களை வைத்துப் போரிட்டனர். அவை அவர்களுக்கு வெற்றியைத் தேடித் தரவில்லை.

5. இந்தியாவில் புதிதாக ஏற்படுத்தப்பட்ட தந்திமுறை யும் இருப்புப் பாதையும் ஆங்கிலேயர்கள் வசமாயிருந்தமை யால் படைகளை விரைவாக அனுப்பிப் புரட்சியை அடக்குவது எளிதாயிற்று.

**போரின் விளைவுகள்**

இந்தியாவின் முதல் சுதந்திரப் போர் அடக்கப்பட்டது. இங்கிலாந்தை அப்போது விக்டோரியா அரசியார் ஆண்டு வந்தார். ஆங்கிலக் கம்பெனியின் ஆட்சியிலுள்ள ஊழல்கள் அவருக்குத் தெரியவந்தன. கம்பெனியின் ஆட்சியை நீடித்து வைக்க அவருக்குப் பிடிக்கவில்லை. ஆகையால் பிரிட்டிஷ் அரசாங்கம் கி.பி. 1858-ல் ஒரு நாடாளுமன்றச் சட்டத்தை அமலுக்குக் கொண்டுவந்தது.

இந்திய ஆட்சி, கம்பெனியிடமிருந்து இங்கிலாந்தின் நாடாளுமன்றத்திற்கு மாறியது. இனி, இந்தியா பிரிட்டிஷ் முடிவேந்தரின் பெயரால் ஆளப்படுவதற்குரியதாயிற்று. ஆங்கில மன்னர் இந்தியா வின் பேரரசர் ஆனார். பிரிட்டிஷ் அமைச்சரவையின் உறுப்பினர் ஒருவர் இந்தியக் காரியதரிசியாக நியமிக்கப் பட்டார். இவர் இந்திய அர சியல் அலுவல்களைக்கவனித் தார். கவர்னர் ஜெனரல் இனி இராஜப் பிரதிநிதியும் கவர் னர் ஜெனரலும் என்றழைக் கப்பட்டார். இதன்படி கானிங் பிரபு இந்தியாவின் முதல் அரசப் பிரதிநிதியானார். பிரிட்டிஷ் முடியாட்சியின்கீழ் இந்தியா வந்ததும்1858-ல் விக்டோரியா அரசியார் ஒரு பேரறிக்கை விடுத்தார். ©



படம் 44.
விக்டோரியா அரசியார்

இனி இந்தியாவில் நாடு சேர்க்கும் முறை கைவிடப்படும் என்று அந்தப் பேரறிக்கை கூறியது. சுதேச மன்னர்களின் உரிமைகள் பாதுகாக்கப்படும்; இந்தியரது பழக்கவழக்கங்களில் இங்கிலாந்து தலையிடாது; ஜாதி, மத வித்தியாசமின்றித் தகுதிக்கும் திறமைக்கும் ஏற்ப அரசாங்கத்தில் வேலைகள் அளிக்கப்படும் என்றும் அரசியாரின் பேரறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்தது. இந்த அறிக்கை இந்திய மன்னர்களுக்கும் மக்களுக்கும் திருப்தி அளித்தது.

## பயிற்சிகள்

**I. விரிவான விடையளிக்கவும்**

1. முதல் இந்திய சுதந்திரப் போர் நடைபெற அமைந்த அரசியல் காரணங்கள் யாவை ?
2. முதல் இந்திய சுதந்திரப் போர் ஏற்படுவதற்கு உண்டான சமூக இராணுவக் காரணங்கள் யாவை ?
3. முதல் சுதந்திரப் போர் தோல்வியுற்றதற்கான காரணங்கள் யாவை ?
4. விக்டோரியா அரசியாரின் பேரறிக்கையில் கூறப்பட்டவை என்ன ?

**II சுருக்கமான விடை எழுதுக**

1. முதல் சுதந்திரப் போர் எந்த ஆண்டில் நிகழ்ந்தது ?
2. விக்டோரியாவின் அறிக்கை அமலுக்கு வந்த ஆண்டு எது ?
3. இந்தியாவின் முதல் அரசப் பிரதிநிதி (வைசிராய்) யார் ?

**III. நீங்களே செய்யுங்கள்**

1. இந்தியா வரைபடத்தில் முதல் இந்திய சுதந்திரப் போர் நடந்த இடங்களைக் குறிக்கவும்.
2. முதல் இந்திய சுதந்திரப் போரில் பங்கெடுத்துக் கொண்ட இந்தியப் புரட்சியாளர் தலைவர்களின் படங்களைச் சேகரிக்கவும்.
3. ஜான்ஸி ராணி இலட்சுமிபாய் வாழ்க்கையை ஒரு நாடகமாக எழுதி நடித்துப் பார்க்கவும்.

# 21. பிரிட்டிஷ் முடியாட்சியின்கீழ் இந்தியா

## கானிங் பிரபு (கி.பி. 1858—1862)

### சீர்திருத்தங்கள்

கி.பி. 1858ஆம் ஆண்டுச் சட்டப்படி கானிங் பிரபு இந்தியாவின் முதல் அரசப் பிரதிநிதியானார். அவர் கிழக்கிந்தியக் கம்பெனியின் கடைசி கவர்னர் ஜெனரல் ஆவார். விக்டோரியா அரசியாரின் அறிக்கையைச் செயல்படுத்த வேண்டிய பொறுப்பு இவருக்கு இருந்தது.

கானிங் பிரபு பரந்த உள்ளமும் நீதிவழியொழுகும் நெஞ்சமும் படைத்தவர். கானிங் இந்திய அரசர்களை ஆக்ரா நகரில் ஒன்று கூட்டினார். அரசியாரின் அறிக்கையை இவர்களுக்கு விளக்கினார். முதல் இந்திய சுதந்திரப் போரில் கொலைக் குற்றத்தில் ஈடுபட்டவர்களைத் தவிர மற்றவர்களை மன்னித்து விடுதலை செய்தார். அதனால் அவர் 'காருண்ய கானிங்' என அழைக்கப்பட்டார்.

சுதந்திரப் போரால் பெருத்த செலவு ஏற்பட்டது. இதனை ஈடுகட்ட வருமான வரி விதித்தார். மேலும் செலவில் சிக்கன முறையைக் கையாண்டார்.

கானிங் பிரபு இந்தியாவின் நலனைப் பெருக்கப் பெரிதும் பாடுபட்டார். கி.பி. 1861-ல் கல்கத்தா, சென்னை, பம்பாய் முதலிய நகரங்களில் உயர்நீதி மன்றங்களை ஏற்படுத்தினார். இவர் சொத்துரிமை வழக்குகளின் சம்பந்தத்தைக் குறித்துச் சட்டத் தொகுப்பு ஒன்று வெளியாகும்படி செய்தார். மெகாலே என்பவரின் பெரும் முயற்சியால் கொண்டுவரப்பட்ட இந்தியன் பீனல் கோடு (குற்ற இயல்) என்னும் சட்டத்தை கானிங் கி.பி. 1860-ல் நடைமுறையில் கொண்டுவந்தார்.

கானிங் இராணுவத்தில் இந்தியரின் எண்ணிக்கையைக் குறைத்தார். படையில் ஆங்கில வீரர்களின் எண்ணிக்கையைப் பெருக்கினார். பீரங்கிப் படையில் ஆங்கிலேயர்மட்டுமே

சேர்த்துக் கொள்ளப்பட்டனர். கானிங் இந்தியாவில் உயர் கல்வியைப் பரப்பப் பாடுபட்டார். ஏற்கெனவே டல்ஹௌசி வகுத்தபடி சென்னை, பம்பாய், கல்கத்தா ஆகிய நகரங்களில் பல்கலைக் கழகங்களைக் கானிங் நிறுவினார்.

கானிங் உழவர்கள் மீது இரக்கம் கொண்டார். வங்காளத்தில் நில உரிமையாளர்களின் கொடுமையால் உழவர்கள் துயரமடைந்தனர். உழவர்களைப் பாதுகாக்கக் கானிங் குடிவாரச் சட்டம் ஒன்றை இயற்றினார்.

### 1861 கவுன்சில் சட்டம்

கி.பி. 1861-ல் இந்தியக் கவுன்சில்கள் சட்டம் இயற்றப்பட்டது. அதன்படி அரசப் பிரதிநிதியின் கவுன்சில் விரிவாக்கப்பட்டது. அதில் பாதிப்பேர் உத்தியோகஸ்தர்கள் அல்லாத உறுப்பினர்களாக இருந்தனர். முதன் முதலாக மாநிலச் சட்டமன்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. கி.பி. 1861 ஆம் ஆண்டுச் சட்டம் இந்தியர்கள் மாநிலச் சட்டமன்றங்களில் பதவி வகிக்க உதவியது.

## ரிப்பன் பிரபு (கி.பி. 1880—1884)

இந்திய மக்களுடைய நன்மதிப்பையும் பாராட்டுதல்களையும் பெற்ற அரசப் பிரதிநிதிகளுள் தலைசிறந்தவராகக் கருதப்படுகின்றவர் ரிப்பன் பிரபுவே ஆவார். இவர் மிகப் பரந்த நோக்கமும் மக்களாட்சியில் பற்றுக் கொண்டவரும் ஆவார்.

### சீர்திருத்தங்கள்

ரிப்பன் உப்பு வரியைக் குறைத்து ஏழை மக்களுக்கு உதவி செய்தார். இவர் கி.பி. 1881-ல் இந்தியாவில் முதன் முதலாக ஒழுங்கான முறையில் மக்கள் தொகைக் கணக்கு எடுக்கும்படி உத்தரவிட்டார். அதிலிருந்து பத்து ஆண்டுகளுக்கொருமுறை மக்கள்தொகைக் கணக்கெடுப்பு நடைபெற்றுக் கொண்டுவருகிறது.

இந்திய மொழிப் பத்திரிகைகளின் வளர்ச்சிக்கு ரிப்பன் பெரிதும் துணை புரிந்தார். இதற்கு முன் தடைகள் விதிக்கப்

பட்டிருந்த இந்திய மொழிகள் பத்திரிகைச் சட்டத்தை இவர் நீக்கினார்.

ரிப்பன் ஆரம்பக் கல்வியையும் நடுத்தரக் கல்வியையும் தழைத்தோங்கச் செய்தார். இந்திய நாட்டில் கல்வியைப் பரப்பப் பொறுப்பாண்மைக் குழு ஒன்றை இவர் நியமித்தார். இதன் பரிந்துரையின்படி பல பள்ளிகளும் கல்லூரிகளும் நிறுவப்பட்டன.

ரிப்பன் பிரபு தொழிலாளிகளின் நலன்களைப் பேண விருப்பம் கொண்டார். இவர் கி. பி. 1881-ல் தொழிற்சாலைச் சட்டமொன்றை இயற்றினார். இதன்படி ஏழு வயதிற்குட்பட்ட குழந்தைகள் வேலை செய்தல் கூடாதென்று விதி ஏற்படுத்தப் பட்டது. ஒன்பது மணி நேரத்துக்கு மேல் குழந்தைகளின் வேலை நேரம் இருத்தல் கூடாதென்று வரையறுக்கப்பட்டது.

ரிப்பன் பிரபுவின் தலைசிறந்த சீர்திருத்தம் யாதெனில், அவர் கி.பி. 1883-84 ஆம் ஆண்டிற்குள் ஏற்படுத்திய தல சுய ஆட்சித் திட்டமாகும். இவர் இத்திட்டத்தினால் இந்நாட்டு மக்களுக்கு சுய ஆட்சி முறையில் அரசியல் கல்விப்பயிற்சியை அளிக்க விரும்பினார். தல சுய ஆட்சி மன்றங்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினரால் செயலாற்றி மக்களுக்கு நன்மைகள் பல செய்யலாயின. இந்த மன்றங்களுக்குச் சில பொறுப்புகள் கொடுக்கப்பட்டன. தல சுய ஆட்சித் திட்டத்தின் கீழ் பெரிய நகரங்களில் மாநகராட்சி மன்றங்களும், நகரங்களில் நகராண்மைக் கழகங்களும், கிராமங்களில் பஞ்சாயத்துகளும் ஏற்பட்டன. தத்தம் எல்லைகளுக்குள் இவை சில பொறுப்பு களை ஏற்றுக்கொண்டு மக்களுக்கு சுகாதார, கல்வி, குடிநீர், சாலை, மருத்துவமனை வசதிகள் அளித்து வருகின்றன.

ரிப்பன் இந்திய மக்கள்மீது மிக்க அன்பு கொண்டவர். இந்திய மக்களும் இவர் மீது அன்பு பாராட்டினர். சென்னை மாநகராட்சி மன்ற அலுவலகக் கட்டடத்திற்கு 'ரிப்பன் கட்டடம்' எனப் பெயரிட்டு, சென்னை மக்கள் அவரைப் பெருமைப் படுத்தியுள்ளனர்.

## கர்சன் பிரபு (கி.பி. 1889—1905)

இந்தியாவுக்கு வந்த அரசப் பிரதிநிதிகளுள் பெருந் திறமை வாய்ந்த ஒருவர் கர்சன் பிரபு ஆவார். அவர் அரசியல் அனுபவம் பெற்றவர்.

### சீர்திருத்தங்கள்

கர்சன் வடமேற்கு மாநிலம் ஒன்றை ஏற்படுத்தி இந்தியாவின் வடமேற்கு எல்லைகளைப் பாதுகாத்தார்.

இந்திய நாட்டில் பஞ்சத்தின் கொடுமையைத் தளர்க்க இவர் பஞ்ச நிவாரணக் குழு ஒன்றை நிறுவினார். குடியானவர்கட்குக் குறைந்த வட்டியில் கடன் வசதி அளிக்கவும், அக் கடனைப் பல தவணைகளில் திருப்பிக் கொடுக்க துணை புரியவும், கி.பி. 1904-ல் கூட்டுறவு நாணய சங்கச் சட்டத்தை இவர் இயற்றினார். இதன் வாயிலாக நம் நாட்டில் கூட்டுறவு இயக்கம் தொடங்க இவர் பெரிதும் பணியாற்றினார். நம் நாட்டில் இது முதற்கொண்டு கூட்டுறவுச் சங்கங்கள் பல பாகங்களில் தோன்றலாயின. கர்சன் விவசாயிகளின் வரியைக் குறைத்தார். விவசாயத்தை அறிவியல் முறையில் வளர்க்க விவசாய இலாகா ஒன்றைப் புதிதாக ஏற்படுத்தினார். அதற்கு ஒரு தனி அதிகாரியையும் நியமித்தார். விவசாயத்தை முன்னேற்ற ஆராய்ச்சி நிலையம் ஒன்று பீகாரில் பூசா என்னும் இடத்தில் அமைத்தார்.

கர்சன் பதவிக் காலத்தில் கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள் முதலியவற்றின் நிலை உயர்த்தப்பட்டது. கி.பி. 1904-ல் பல்கலைக் கழகச் சட்டம் ஒன்று இயற்றப் பட்டது. இதன் காரணமாகப் பல்கலைக் கழகங்கள் அரசாங்க அதிகாரத்திற்குட்படுத்தப்பட்டன.

வரலாற்றுப் புகழ் பெற்ற சின்னங்கள் நம் நாட்டில் பாதுகாக்கப் படவேண்டுமென்று கர்சன் கருதினார். இதனால் அவர் தொல்பொருள் ஆராய்ச்சி இலாகா ஒன்று அமைத்தார். இது நம் நாட்டின் வரலாற்றிற்குக் கர்சன் செய்த சிறந்த பணியாகும்.

அவர் அரசப் பிரதிநிதியாக இருந்தபொழுது வங்காளம், பெரிய மாநிலமாக இருந்தது. அதனைச் செம்மையான முறையில் ஆட்சி நடத்த முடியவில்லை. ஆகவே, கர்சன் அதனின் நிர்வாக நலனைக் கருதி, வங்காளத்தை இரு பகுதிகளாகப் பிரித்தார். இச்செய்கை இந்தியர்களை. இந்துக்கள் என்றும் முஸ்லிம்கள் என்றும் பிரிப்பதற்காக எடுத்துக்கொண்ட பிரிவினைத் திட்டம் என்று இந்திய தேசிய காங்கிரஸ் கருதியது. வங்காளப் பிரிவினை இந்திய மக்களிடையே பெரும் கொதிப்பை உண்டாக்கியது. இதனால் நாட்டில் பெருங்கிளர்ச்சி ஏற்பட்டது. இறுதியில் கி.பி.1911-ல் வங்கப் பிரிவினை விலக்கப்பட்டது. கர்சனை இந்திய மக்கள் வெறுத்தபோதிலும் அவர், மறக்கமுடியாத சில நல்ல சீர் திருத்தங்களைச் செய்தார்.

## இர்வின் பிரபு (கி.பி. 1926—1931)

### சைமன் குழு (1927)



படம் 45. இர்வின் பிரபு

இர்வின் பிரபு தூய உள்ளம் வாய்ந்த அரசப் பிரதிநிதியாவார். இங்கிலாந்திலுள்ள அரசாங்கம் மாண்ட்போர்டு சீர்திருத்தங்கள் எவ்வாறு செயலாற்றப்படுகின்றன என்பதைப் பற்றித் தெரிவிக்க ஒரு குழுவை அனுப்பியது. இதன் தலைவர் சர் ஜான் சைமன் ஆவார். அக்குழுவிலிருந்த எழுவரும் ஆங்கிலேயர் ஆவர். ஓர் இந்தியர்கூட நியமிக்கப்படவில்லை. இந்திய தேசிய காங்கிரஸ் இக்குழுவுடன் ஒத்துழைக்க மறுத்தது. இந்தியர்கள் அனைவரும் இக்குழுவை பகிஷ்கரித்தனர்.

## இந்திய தேசிய காங்கிரசின் தீர்மானங்கள்

இந்திய தேசிய காங்கிரஸ் கி.பி. 1927-ல் சென்னையில் கூடி, தன்னுடைய நோக்கம் பூர்ண சுதந்திரம்தான் என்று தெளிவாகத் தெரிவித்தது. இருப்பினும் கி.பி. 1929 டிசம்பர் திங்கள் 31 ஆம் நாளுக்குள் இந்தியாவிற்குக் குடியேற்ற நாட்டுரிமை (டொமினியன் அந்தஸ்து) அளிக்கப்பட்டால் அதற்குக் காங்கிரஸ் ஒப்புக்கொள்ளும் என்று கூறியது. இல்லையெனில், பூர்ண சுதந்திரத்திற்காகக் காங்கிரஸ் போராடும் என்று அக்கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது.

அத்தீர்மானத்திற்கு ஆட்சியாளர் இணங்கவில்லை. எனவே கி.பி. 1929 ஆம் ஆண்டு டிசம்பர் திங்களில் ஜவஹர்லால் நேரு தலைமையில் லாகூரில் காங்கிரஸ் கூடி பூர்ண சுதந்திரம் பெறுவதே இந்தியரின் நோக்கம் என முடிவு செய்தது.

## காந்தி-இர்வின் ஒப்பந்தம் (1931)

பரிபூரண சுதந்திரம் அடைய மகாத்மா காந்தி சாத்வீக சட்ட மறுப்பு இயக்கத்தை கி.பி. 1930ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் தொடங்கினார். ஆட்சியாளரின் ஆணையை மீறி உப்புச் சத்தியாக்கிரகம் ஆரம்பித்தார். தண்டி என்னுமிடத்தில் உப்புக்காய்ச்சத் தாமே ஆயிரக்கணக்கான தொண்டர்களுடன் சென்றார். காந்தியடிகளும் தேசத் தொண்டர்களும் சிறையிலடைக்கப்பட்டனர். அதே வருடம் இங்கிலாந்தில் வட்ட மேசை மாநாடு கூடிற்று. அதில் காங்கிரஸ் மகாசபை கலந்து கொள்ளவில்லை. இர்வின் பிரபு அடக்குமுறைக் கொள்கை பயனற்றது என்று உணர்ந்தார். காந்தி அடிகளுடன் கி.பி. 1931 ஆம் ஆண்டு ஓர் ஒப்பந்தத்தைச் செய்து கொண்டார். அதுவே காந்தி-இர்வின் ஒப்பந்தம் எனப்படும்.

காந்தி - இர்வின் ஒப்பந்தத்தின்படி கடற்கரைப் பகுதிகளில் வாழ்ந்த மக்கள் தங்கள் சொந்தத் தேவைக்காக உப்புத் தயாரித்துக்கொள்ளலாம் என்று கூறப்பட்டது. சட்ட மறுப்பு இயக்கத்தில் கலந்துகொண்டு சிறை சென்றவர்கள் விடுதலை செய்யப்படுவார்கள் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

அரசியல் கைதிகளிடமிருந்து பறிமுதல் செய்த சொத்துகளை அவர்களுக்கே திருப்பிக் கொடுக்க வேண்டுமென்றும், கள்ளுக் கடைகள் முன் மறியல் செய்யலாம் என்றும் கூறப்பட்டது. இந்த ஒப்பந்தத்தின்படி சட்ட மறுப்பு இயக்கம் நிறுத்தப் பட்டது. காந்தியடிகள் காங்கிரசின் ஏகப் பிரதிநிதியாக இரண்டாம் வட்ட மேஜை மாநாட்டில் கலந்து கொள்ள வேண்டும் என்பதும் ஒப்புக்கொள்ளப்பட்டது. அதன்படி மகாத்மா காந்தி காங்கிரசின் ஏகப்பிரதிநிதியாக இரண்டாவது வட்டமேசை மாநாட்டில் கலந்துகொண்டார். அம் மாநாடு வெற்றியடையவில்லை. காந்தியடிகள் நமது நாடு திரும்பி மறுபடியும் அறப்போர் தொடங்கினார்.

## மௌண்ட் பேட்டன் பிரபு (கி.பி. 1947—48)

இந்தியாவின் கடைசி அரசப் பிரதிநிதி மௌண்ட் பேட்டன் பிரபு ஆவார். அவர் இந்தியாவின் அரசப்பிரதிநிதியாக கி.பி. 1947ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 21ஆம் தேதி பொறுப் பேற்றார். இவர் இந்தியா விரைவில் சுதந்திரம் அடைவதற்கான முயற்சிகளைச் செய்தார். இந்தியாவில் முஸ்லிம்கள் பெரும்பான்மையினராக வாழும் பகுதிகளைப் பிரித்து பாகிஸ்தான் என்ற தனி முஸ்லிம் நாடு அமைக்கப்பட வேண்டுமென்று முஸ்லிம் லீக் முகம்மது அலி ஜின்னாவின் தலைமையில் கிளர்ச்சிசெய்தது.



படம் 46. மௌண்ட் பேட்டன்

கி.பி. 1947 ஜூன் 3ஆம் தேதி இந்திய அரசியல் சிக்கலைத் தீர்க்க மௌண்ட் பேட்டன் பிரபு ஒரு புதுத் திட்டத்தை வெளியிட்டார். அதன்படி இந்தியா பாரதம், பாகிஸ்தான் என்னும் இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. கிழக்கு

வங்காளம், மேற்கு பஞ்சாப், வடமேற்கு எல்லைப்புற மாநிலம், சில்ஹெட், சிந்து, பலுசிஸ்தான் ஆகிய பகுதிகள் பாகிஸ்தான் என்றும், ஏனைய பகுதிகள் இந்தியா என்றும் பிரிக்கப்பட்டன. ஜூலை 15ஆம் தேதி பிரிட்டிஷ் நாடாளு மன்றம் இந்தியச் சுதந்திரச் சட்டத்தை நிறைவேற்றியது. இறுதியாக




படம் 47. இந்தியா—பாகிஸ்தான்

கி.பி. 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு 14-15ஆம் நாள் சுதந்திர இந்தியா என்றும், பாகிஸ்தான் என்றும் இரு புது டொமினியன்கள் இந்நாட்டில் ஏற்பட்டன. பிரிட்டிஷ் அரசாங்கம் இந்திய அரசியல் அதிகாரத்தை அவ்விரு டொமினியன்களுக்கும் மாற்றியது.

பாகிஸ்தானின் தலைநகர் கராச்சி ஆயிற்று. டில்லி பாரதத்தின் தலைநகர். காங்கிரஸின் விருப்பப்படி மௌண்ட் பேட்டன் பிரபு சுதந்திர இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரலானார். பாகிஸ்தானுக்கு முகம்மது அலி ஜின்னா முதல் கவர்னர் ஜெனரலானார். மௌண்ட் பேட்டன் சில மாதங்கள் கழித்து அப்பதவியிலிருந்து விலகி தம் தாய்நாடு சென்றார். அப்பொழுது அப்பதவியை இராசகோபாலாச்சாரியார் (இராஜாஜி என்று மக்கள் எல்லோராலும் அன்போடு அழைக்கப் பட்டவர்) ஏற்றார். இவரே இந்தியாவின் கவர்னர் ஜெனரல் பதவி வகித்த முதல் இந்தியர் ஆவார். கடைசி கவர்னர் ஜெனரலும் இவரே ஆவார். ஜவஹர்லால் நேரு சுதந்திர இந்தியாவின் முதல் பிரதம மந்திரியானார்.

## பயிற்சிகள்

**I. விரிவான விடையளிக்கவும்**

1. கானிங் பிரபு செய்த சீர்திருத்தங்கள் யாவை ?
2. ரிப்பன் செய்த சீர்திருத்தங்களை எழுதுக.
3. கர்சன் செய்த சீர்திருத்தங்களை விளக்குக.
4. காந்தி - இர்வின் ஒப்பந்தத்தில் என்ன கூறப்பட்டிருந்தது ?
5. மௌண்ட் பேட்டன் திட்டத்தை விளக்குக.

**II. சுருக்கமான விடையளி**

1. 'காருண்ய கானிங்' என்று கானிங் ஏன் அழைக்கப் பட்டார் ?
2. எந்த அரசப் பிரதிநிதி காலத்தில் முதன்முதலாக மக்கள் தொகைக் கணக்கெடுப்பு செய்யப்பட்டது ?
3. இந்தியாவின் கடைசி அரசப் பிரதிநிதி யார் ?

**III. கோடிட்ட இடங்களைச் சரியான வார்த்தைகளால் நிரப்புக**

1. இந்தியாவின் முதல் அரசப் பிரதிநிதி (வைசிராய்)——— என்பவராவார்.
2. இர்வின் பிரபு இந்திய அரசப் பிரதிநிதியாக இருந்தபோது இந்தியாவிற்கு வந்த குழுவின் தலைவர் ——— ஆவார்.
3. ——— இல் கூடிய இந்திய தேசிய காங்கிரஸ் பூர்ண சுயராஜ்யத் தீர்மானம் ஒன்றை ஏற்றுக்கொண்டது.

4. சுதந்திர இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரல் ———— என்பவராவார். சுதந்திர இந்தியாவின் முதல் பிரதம அமைச்சர் ———— என்பவராவார்.

**IV. நீங்களே செய்யுங்கள்**

1. கொடுக்கப்பட்டிருக்கும் படத்தில் இந்தியா, பாகிஸ்தான் நாடுகளை அவற்றின் தலை நகரங்களுடன் குறிப்பிடுக.
2. கானிங், ரிப்பன், கர்சன், இர்வின், மௌண்ட் பேட்டன், காந்தியடிகள், பண்டித ஜவஹர்லால் நேரு, படேல், முகம்மது அலி ஜின்னா முதலியோரின் படங்களைச் சேகரித்து உங்கள் படத்தொகுப்புப் புத்தகத்தில் ஒட்டி வைத்துக்கொள்ளவும்.

# 22. இந்திய சுதந்திரப் போராட்டம் (1885—1947)

**இந்திய தேசிய காங்கிரசின் தோற்றம்** *(1885)*

19ஆவது நூற்றாண்டின் இறுதியில் இந்திய மக்களிடம் தேசிய உணர்ச்சி ஏற்பட்டது. அதற்குப் பல காரணங்கள் உள.

1. ஆங்கிலேயர் இந்தியா முழுமையும் வென்று, ஒரே அரசை நாடு முழுவதற்கும் அமைத்தனர். அது தேசிய ஒற்றுமைக்கு உதவியது.

2. ஆங்கில மொழி ஆட்சி மொழியாகவும் கல்வி மொழியாகவும் இருந்தமையால், படித்தவர்களிடம் தேசிய ஒற்றுமை ஏற்பட்டது.

3. மேலை நாடுகளின் வரலாறு, அரசியல் புத்தகங்களைப் படித்ததின் விளைவாக புரட்சி மனப்பான்மை, ஜனநாயக ஆட்சியில் பற்று ஆகியவை தோன்றின.

4. அச்சு இயந்திரங்களின் மூலம் புத்தகங்களும் பத்திரிகைகளும் பரவி மக்களிடம் தேசியம் பரவியது.

5. பிரம்ம சமாஜம், ஆரிய சமாஜம், பிரம்ம ஞான சபை, இராம கிருஷ்ணர் இயக்கம் ஆகியவை நமது மக்களிடம் தேச பக்தியை வளர்த்தன. இவற்றின் விளைவாக கி. பி. 1885 ஆம் ஆண்டு இந்திய தேசியக் காங்கிரசு தோன்றியது. இந்திய விடுதலைப் போரில் முக்கியப் பங்கு கொண்டு இந்தியாவிற்கு விடுதலை வாங்கித் தந்த ஸ்தாபனம் இந்திய தேசிய காங்கிரஸ் ஆகும். எனவே, இந்திய விடுதலைப் போராட்டம் என்பது இந்திய தேசிய காங்கிரஸ் வரலாறு ஆகும்.

காங்கிரஸ் தோன்றுவதற்குக் காரணமாக இருந்தவர்கள் ஆலன் ஆக்டேவியன் ஹியூம், வெட்டர் பர்ன் என்னும் ஆங்கிலப் பெரியார்களும், தேச பக்தர்களான தாதாபாய் நௌரோஜி, சுரேந்திரநாத் பானர்ஜி ஆவர். இந்திய தேசிய காங்கிரஸின் முதற் கூட்டம் பம்பாய் நகரில் கூடிற்று. இதன் தலைவர் உமேஷ் சந்திர பானர்ஜி ஆவார். அரசாங்கத்தில் இந்தியர்களுக்கு உயர் பதவி கிடைக்கச் செய்தல், மக்களின் குறைகளை எடுத்துக் கூறிப் பரிகாரம் நாடுதல், படிப்படியாகப் பொறுப்பாட்சி பெறுதல், இராணுவச் செலவைக் குறைத்தல் முதலிய இவைகளே தேசிய காங்கிரஸ் சபையின் ஆரம்ப நோக்கங்களாகும். ஆண்டுதோறும் இச் சபை நாட்டின் பல்வேறு இடங்களில் கூடித் தீர்மானங்களை நிறைவேற்றி அரசாங்கத்திற்கு அனுப்பி வந்தது. நாளடைவில் இது வன்மையுடன் வளர்ந்தது.

**மிதவாதிகள், தீவிரவாதிகள்**

தொடக்கத்தில் காங்கிரஸ்த் தலைவர்கள் சட்டத்திற்கு உட்பட்ட முறையில் கிளர்ச்சி செய்தனர். இவர்கள் 'மித வாதிகள்' என அழைக்கப்பட்டனர். மிதவாதிகளில் கோபால கிருஷ்ண கோகலே முக்கியமானவர். நம் நாட்டின் தந்தை மகாத்மா காந்தி அவர்கள் கோகலேவை மிகவும் அன்புடன் பாராட்டினார். மிகவும் மதித்தார். மிதவாதிகளை எதிர்த்த வர்கள் 'தீவிரவாதிகள்' ஆவர். இவர்களின் தலைவர் பால கங்காதர திலகர் ஆவார். இவர் 'கேசரி', 'மராட்டா'

ஆகிய செய்தித்தாள்கள் மூலம் இந்தியர்களின் நாட்டுப்பற்றை வளர்த்தார். மிதவாதிகளின் கொள்கையைப் பிச்சை கேட்கும் மனப்பான்மை எனத் திலகர் கண்டித்தார். இந்தியர்கள் கிளர்ச்சியின் மூலம்தான் தமது உரிமைகளைப் பெற முடியும் என்பது அவரது கொள்கை. திலகருக்கு உறுதுணையாக நின்றவர்கள் 'பஞ்சாபின் சிங்கம்' லாலா லஜபதி ராய், வங்கத் தலைவர் பிபின் சந்திரபால், தமிழகத்தின் பெருமகன் வ. உ. சிதம்பரம் பிள்ளை முதலியோர் ஆவர்.

'சுதந்திரம் எனது பிறப்புரிமை; அதனை நான் பெற்றே தீருவேன்' என்று வீர முழக்கம் இட்டவர் பாலகங்காதர திலகர். அவர் காங்கிரசு ஸ்தாபனத்தைப் பொதுமக்கள் நிறுவனமாக்கப் பெரிதும் விரும்பினார்.

## வங்கப் பிரிவினை *(1905)*

இந்திய அரசப் பிரதிநிதியான கர்சன் பிரபு கி.பி. 1905-ல் வங்காள மாநிலத்தின் ஆட்சியின் நலனைக் கருதி இரு மாநிலங்களாகப் பிரித்தார். அம் மாநிலம் வங்காளம் என்னும் கிழக்கு வங்காளமும் அஸ்ஸாமும் என இரு மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டது. வங்காளத்தில் இந்துக்கள் அதிகம். கிழக்கு வங்காளத்திலும் அஸ்ஸாமிலும் முஸ்லிம்கள் அதிகம். இந்திய மக்களைப் பிரிப்பதற்காகவும் தேசியத்தை நசுக்குவதற்காகவும் வகுக்கப்பட்ட திட்டம் என்று மக்கள் கிளர்ச்சி செய்தனர்.

வங்கப் பிரிவினையின் விளைவாகத் 'தாய் நாட்டுப் பொருள்களையும், கைத் தொழில்களையும் ஆதரித்துப் போற்றுங்கள்; அயல் நாட்டுப் பொருள்களை அறவே தள்ளுங்கள்' என்னும் இயக்கம் வங்காளத்தில் தோன்றியது. பிறகு இது காட்டுத்தீப்போன்று இந்திய நாடெங்கும் பரவியது. இதுவே சுதேசி இயக்கம் எனப்படும். தாய் நாட்டுக் கைத் தொழில்களுக்கு எங்கும் பேராதரவு ஏற்பட்டது. அந்நிய நாட்டுப் பொருள்கள் பகிஷ்கரிக்கப்பட்டன. தமிழகத்தில் சுப்பிரமணிய பாரதியார் தமது அருமையான பாடல்களினால்

தமிழக மக்களிடையே தேசிய உணர்ச்சியை வளர்த்தார். சமூக ஒற்றுமை ஏற்பட அரும்பாடு பட்டார்.

### முஸ்லிம் லீக் (1906)

டாக்கா நவாப் சலிமுல்லாவும், ஆகாகான் இளவரசரும் முஸ்லிம் லீக் என்னும் நிறுவனத்தை 1906-ல் தோற்று வித்தனர். இந்த ஸ்தாபனம் முஸ்லிம்களுடைய நலன்களைப் பாதுகாக்க நிறுவப்பட்டது. வங்கப் பிரிவினையை ஆதரித்தது. பிரிட்டிஷாரின் பொருள்களை பகிஷ்கரிப்பதை எதிர்த்தது.

### சூரத் காங்கிரஸ் (1907)

கி.பி. 1907 ஆம் ஆண்டில் 'தபதி நதியின் முகத்துவா ரத்திலிருக்கும் சூரத் நகரில் காங்கிரஸ் கூடியது. சூரத் மாநாட்டில் காங்கிரஸ் தலைவர்களிடையே பெருத்த மோதல் ஏற்பட்டுத் தீவிரவாதிகள் அந்த ஸ்தாபனத்திலிருந்து வெளி யேறினர். மிதவாதிகள் கையில் காங்கிரஸ் சபை இருந்தது. ஆனால், மக்களிடம் மிதவாதிகள் தம் செல்வாக்கை இழந்த னர். ஒன்பது ஆண்டுகளுக்குத் தீவிரவாதிகள் காங்கிரஸ் மகா சபைக்கு வெளியே இருந்தனர். திலகரின் தீவிரவாதம் நாட்டில் பெருகி வந்தது.

ஆங்கில அரசு தீவிரவாதிகளை அடக்க முற்பட்டது. லோகமான்ய திலகர் ஆறு வருடங்கள் சிறை தண்டனை விதிக்கப்பட்டு மாண்டலேயில் சிறை வைக்கப்பட்டார். லாலா லஜபதிராய் நாடு கடத்தப்பட்டார். 'கப்பலோட்டிய தமிழன்' என்று புகழ்பெற்ற வ. உ. சிதம்பரனார் கடும் சிறைத் தண்டனைக்கு உள்ளாகிச் செக்கிழுத்தது நீங்கள் அறிவீர்கள்.

### மின்டோ-மார்லி சீர்திருத்தங்கள் (1909)

தேசிய காங்கிரசின் கிளர்ச்சியின் பயனாக பிரிட்டிஷ் அரசாங்கம் மிதவாதிகளின் ஆதரவைப் பெறவும், தீவிரவாதி களை ஒடுக்கவும், இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே பிளவு ஏற்படுத்தவும் முயன்றது. இந்நோக்கத்துடன் இந்திய அமைச்சராக இருந்த மார்லி பிரபுவும், அரசப் பிரதிநிதியாக விளங்கிய மின்டோ பிரபுவும் ஒன்று சேர்ந்து சில சீர்திருத்தங்

களை 1909-ல் வழங்கினர். இவற்றின்படி இந்தியச் சட்ட மன்றங்கள் விரிவாக்கப்பட்டன. இவற்றுள் மக்களின் பிரதிநிதிகள் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். முஸ்லிம்களுக்குச் சட்டமன்றங்களில் முதன்முறையாகத் தனிப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டது. இது இந்து முஸ்லிம் வேற்றுமையை வளர்த்தது; நாட்டுப் பிரிவினைக்கு வித்திட்டது. இச் சீர்திருத்தங்கள் இந்தியர்களுக்கு மனநிறைவு அளிக்கவில்லை.

### ஹோம் ரூல் இயக்கம் (1916)

முதல் உலகப் போர் கி.பி. 1914-ல் மூண்டது. இதில் பிரிட்டனுக்கு இந்திய மக்கள் பெரிதும் உதவினர். அப்போர் கி.பி. 1918ஆம் ஆண்டுவரை நீடித்தது. இதற்கிடையில் அன்னிபெசன்ட் அம்மையார் தலைமையில் இந்தியருக்கு உடனடியாகப் பொறுப்பாட்சி வழங்கக் கோரி 'ஹோம் ரூல் இயக்கம்' தொடங்கியது. அதைத் திலகர் ஆதரித்தார். பிரிட்டிஷ் அரசு கி.பி. 1917 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் ஓர் அறிக்கையை வெளியிட்டது. இவ்வறிக்கையில் பிரிட்டிஷ் அரசு இந்தியாவுக்குப் படிப்படியாகப் பொறுப்பாட்சியை அளிக்கும் என்று கூறப்பட்டிருந்தது.



படம் 48.
அன்னிபெசன்ட் அம்மையார்

### மான்டேகு - செம்ஸ்போர்டு சீர்திருத்தங்கள் — இரட்டையாட்சி (1919)

மேற்கூறப்பட்ட அறிக்கையின்படி இந்திய மந்திரியான எட்வின் மான்டேகுவும், அரசப்பிரதிநிதியான செம்ஸ்போர்டு பிரபுவும் ஒன்று சேர்ந்து கி.பி. 1919-ல் சில சீர்திருத்தங்

களை வழங்கினர். இவற்றின்படி சட்டமன்றங்கள் மேலும் விரிவாக்கப்பட்டன. மாநிலங்களில் ஓரளவு பொறுப்பாட்சி அளிக்கப்பட்டது. இதன்படி மாநிலப் பொறுப்புகள் இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டன. முக்கியப் பொறுப்புகளாகிய காவல் துறை, நிதி, நீதி, வரிவசூல் முதலியவை மாநில ஆளுநரின் அதிகாரத்துக்கு உட்பட்டவை. கல்வி, விவசாயம், தல சுய ஆட்சி ஸ்தாபனம், சுகாதாரம், பொது மராமத்து போன்றவை மக்களது பிரதிநிதிகளான அமைச்சர்கள் பொறுப்பில் ஒப்படைக்கப்பட்டன. இஃது 'இரட்டையாட்சி' எனப்படும்.

## ரௌலட் சட்டம்—ஜாலியன்வாலாபாக் படுகொலை

மான்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தங்கள் மக்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை. தேசமெங்கும் அரசியல் குற்றங்கள் பெருகலாயின. இதனால், அரசாங்கம் அடக்குமுறையைக் கையாண்டது. குற்றஞ் சாட்டப்பட்டவர்களைக் கடுமையாகத் தண்டிக்கவும், விசாரணையின்றி அவர்களை நாடுகடத்தவும் கி.பி. 1919-ல் ரௌலட் சட்டம் இயற்றப்பட்டது. இக் கொடிய சட்டத்தை எதிர்த்து நாடெங்கும் தேசியக் கிளர்ச்சி ஏற்பட்டது. காந்தி அடிகள் சாத்வீக முறையில் ரௌலட் சட்டத்தை எதிர்க்கும்படி தேசமக்கள் அனைவருக்கும் உத்தரவிட்டார். இதன் விளைவாக நாடெங்கும் கிளர்ச்சிகள் மிகுந்தன. பஞ்சாபில் இக்கிளர்ச்சி தீவிரமாக நடந்தது. இதன் விளைவாக அமிர்தசரசுக்கு அருகில் ஜாலியன்வாலாபாக் என்னுமிடத்தில் கி.பி. 1919 ஏப்ரல் 13ஆம் நாள் 379 மக்கள் ஆங்கில இராணுவத்தினரால் சுட்டுக் கொல்லப்பட்டனர். ஆயுதமில்லாத மக்களைச் சுட்டுப் பொசுக்க உத்தரவிட்டவர் இரக்கமில்லாத ஆங்கில தளகர்த்தர் டயர் ஆவார். 1200 மக்கள் காயமுற்று யாராலும் கவனிக்கப்படாமல் அந்த இடத்திலேயே விழுந்துகிடந்தனர். இப்படுகொலை நிகழ்ச்சி நாடெங்கும் உள்ள மக்களைக் கொதித்தெழச் செய்து சுதந்திரக் கனலை வளர்த்தது.

## பயிற்சிகள்

**I. விரிவான விடையளிக்கவும்**

1. இந்தியாவில் தேசிய உணர்ச்சி ஏற்படக் காரணங்கள் யாவை ?
2. இந்திய தேசிய காங்கிரஸ் எந்த ஆண்டு தோன்றியது ? ஆரம்பத்தில் அதன் நோக்கங்கள் யாவை ?
3. மிதவாதிகள், தீவிரவாதிகள் எனக் கூறப்பட்டவர் யார் ? அவர்களிடையே இருந்த கருத்துவேற்றுமைகள் யாவை ?
4. வங்கப் பிரிவினை யாரால் ஏற்படுத்தப்பட்டது ? அதன் விளைவுகள் யாவை ?
5. மின்டோ-மார்லி சீர்திருத்தங்களின் முக்கிய அம்சங்கள் யாவை ?
6. மான்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தங்கள் யாவை ?

**II. சுருக்கமான விடையளிக்கவும்**

1. முஸ்லிம் லீகைப்பற்றிச் சிறு குறிப்பு வரைக.
2. சுதேசி இயக்கத்தின் அடிப்படை நோக்கம் யாது ?
3. மின்டோ-மார்லிச் சீர்திருத்தங்கள் இந்தியப் பிரிவினைக்கு எவ்வாறு வித்திட்டன ?
4. 'ஹோம் ரூல்' இயக்கத்தைத் தொடங்கியவர் யார் ?
5. 'ஜாலியன்வாலாபாக்' படுகொலையைப்பற்றிக் குறிப்பு எழுதுக.

**III. காலியிடங்களைப் பொருத்தமான வார்த்தைகளால் நிரப்புக**

1. ———————— மிதவாதிகளின் சிறந்த தலைவர் ஆவார்.
2. 'சுயராஜ்ஜியம் எனது பிறப்புரிமை; அதை நான் பெற்றே தீருவேன்,' என்று வீர முழக்கமிட்டவர் ———————— ஆவார்.
3. கி. பி. 1907ஆம் ஆண்டில் நடைபெற்ற ———————— மாநாட்டில் காங்கிரசில் பிளவு ஏற்பட்டது.

# 23. இந்திய சுதந்திரப் போராட்டம்
## (தொடர்ச்சி)

### காந்தி சகாப்தம் (1920—1947)

காந்தியடிகளும் அறப்போரும்

சத்தியாகிரகப் போராட்டத்தின் மூலம் தென்னாப்பிரிக்காவில் பல அரசியல் வெற்றிகளைக் கண்ட காந்திஜி இந்தியா திரும்பி கி.பி. 1916-ல் காங்கிரசில் சேர்ந்தார்.



படம் 49. காந்தியடிகள்

இவர் காங்கிரசில் சேர்ந்தது இந்திய தேசிய இயக்கத்தின் போக்கில் ஒரு திருப்புமுனையை ஏற்படுத்தியது. கி.பி. 1919 முதல் கி.பி. 1947 வரை நடந்த இந்திய சுதந்திரப் போராட்டங்கள் காந்திஜியின் வாழ்க்கை வரலாற்றுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. இக்காலம் காந்திய சகாப்தம் என அழைக்கப்படுகிறது.

காந்தியடிகள் சத்தியம், அகிம்சை, தருமம் ஆகிய மூன்று புதிய சாதனங்களைக்கொண்டு பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடத்தொடங்கினார். இம்முறையே 'சத்தியாக்கிரகம்' அல்லது 'அறப்போர்' எனப்படும்.

காந்தியடிகள் சுதந்திரப் போராட்ட அறப்போர் மூன்று நிலைகளைக் கொண்டது. முதலாவது 1920ஆம் ஆண்டு ஒத்துழையாமை இயக்கம், இரண்டாவது 1930ஆம் ஆண்டு சட்ட மறுப்பு இயக்கம், மூன்றாவது 1942ஆம் ஆண்டு வெள்ளையனே வெளியேறு இயக்கமாகும்.

## ஒத்துழையாமை இயக்கம் (1920)

காந்தியடிகள் கி.பி 1920-ல் இந்திய தேசியக் காங்கிரஸின் தலைவரானார். ஜாலியான் வாலா பாக் படுகொலை, மாண்ட்போர்டு திட்டத்தின்மீது அதிருப்தி ஆகிய இரண்டு காரணங்களைக் கொண்டு காந்தியடிகள் ஒத்துழையாமை இயக்கத்தை 1920-ல் தொடங்கினார். அத்துடன் கிலாபத் அநீதியையும் சேர்த்துக் கொண்டார். அதாவது முதல் உலகப் போருக்குப் பின் இந்திய முஸ்லீம்களின் கலீபாவாகக் கருதப்பட்ட துருக்கி சுல்தானின் பேரரசின் பல பகுதிகளை ஆங்கிலேயர் பிடுங்கிக்கொண்டனர். அவற்றைத் திருப்பி சுல்தானுக்கே கொடுக்க வேண்டுமென்று இந்திய முஸ்லீம்கள் அலி சகோதரர்களின் தலைமையில் 'கிலாபத் இயக்கத்தை' ஆரம்பித்தனர். அதைக் காந்தியடிகள் ஆதரித்தார்.

ஒத்துழையாமை இயக்கத்தின் விளைவாக சட்ட மன்றம், கல்லூரி, நீதி மன்றம் முதலியவைகட்கு ஒருவரும் செல்லாமல் அவற்றை மக்கள் ஒதுக்கினர். அன்னியப் பொருள்கள் வாங்குவதை அவர்கள் அறவே நிறுத்தினர். அகிம்சை, சத்தியம், அஞ்சாமை எனும் இம் மூன்றும் இவ்வியக்கத்தின் இணையற்ற ஆயுதங்களாக விளங்கின. ஆயினும், 1922-ல் சௌரி சௌராவில் நடந்த வன்முறைச் சம்பவத்திற்குப் பின் காந்தியடிகள் இவ்வியக்கத்தை நிறுத்தினார்.

### சுயராஜ்யக் கட்சி (1923)

ஒத்துழையாமை இயக்கம் நிறுத்தி வைக்கப்பட்டதனால் சித்தரஞ்சன் தாஸ், மோதிலால் நேரு ஆகியோர் 1923-ல் சுயராஜ்யக் கட்சியை நிறுவினார்கள். இக் கட்சியின் முக்கிய நோக்கம் சட்ட சபைகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு ஆங்கில அரசை எதிர்ப்பதே ஆகும்.

### சைமன் கமிஷன் (1927)

ஒத்துழையாமை இயக்கப் போராட்டத்தின் எதிரொலியாக இந்திய அரசியல் சீர்திருத்தங்களைப் பரிந்துரை செய்வதற்காக கி. பி. 1927-ல் ஆங்கில அரசு சைமன் கமிஷனை இந்தியாவுக்கு அனுப்பியது. இக் கமிஷனில் இந்தியர் ஒருவர்கூட இடம் பெறாததால் காங்கிரஸ் அதனுடன் ஒத்துழைக்க மறுத்துவிட்டது.

### உப்புச் சத்தியாகிரகம் (1930)

கி.பி. 1929 ஆம் ஆண்டு கடைசி நாளில் ஜவஹர்லால் நேரு தலைமையில் லாகூரில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் 'முழுமையான சுதந்திரம் அடைவதே காங்கிரசின் குறிக்கோள்' என்னும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. 1930ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் காந்தியடிகள் உப்புச் சத்தியாகிரகத்தைத் தொடங்கினார். இந்திய வரலாற்றில் மகாத்மா காந்தி 'தண்டி'க்குக் கால்நடைப் பயணமாகச் சென்று சட்டத்தை மீறி உப்புக் காய்ச்சியது மிகவும் பிரபலமானது.

### வட்டமேஜை மாநாடுகள்

சைமன் கமிஷன் வெளியிட்ட பரிந்துரைகளை மீண்டும் பரிசீலனை செய்வதற்காக இலண்டனில் கி.பி. 1930 முதல் 1932ஆம் ஆண்டு முடிய மூன்று வட்டமேஜை மாநாடுகள் நடைபெற்றன. கி.பி. 1931-ல் காந்தியடிகளுக்கும் அரசப் பிரதிநிதி இர்வினுக்கும் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. அதனால் காந்திஜி உப்புச் சத்தியாகிரகத்தை நிறுத்திவிட்டுக் காங்கிரசின் ஒரே பிரதிநிதியாக இரண்டாம் வட்டமேஜை

மாநாட்டில் கலந்து கொண்டார். அங்கு வெளியிடப்பட்ட வகுப்பு வாரி பிரதிநிதித்துவமுறையை எதிர்த்து வெளிநடப்புச் செய்தார். எனவே, வட்டமேஜை மாநாடுகள் வெற்றி பெறவில்லை.

## கி.பி. 1935 ஆம் ஆண்டு இந்திய அரசியல் சட்டம்

இலண்டனில் நடைபெற்ற வட்டமேஜை மாநாடுகளின் விளைவாக இந்திய அரசியல் சட்டம் ஒன்று கி. பி. 1935-ல் நிறைவேறியது. இதன்படி மாகாணங்களுக்கு சுய ஆட்சி வழங்கப்பட்டது மாகாண நிர்வாகம் அனைத்தும் மக்கள் பிரதிநிதிகளாக விளங்கிய மந்திரிகளிடம் ஒப்படைக்கப்பட்டது. ஒரிசாவும் சிந்துவும் தனித்தனி மாகாணங்கள் ஆயின. பர்மா இந்தியாவிலிருந்து பிரிக்கப்பட்டது. கூட்டாட்சி நீதிமன்றம் ஒன்று டில்லியில் நிறுவப்பட்டது.

## இரண்டாம் உலகப் போர்

மாகாண சுயாட்சி 1937-ல் அமலுக்கு வந்தது. காங்கிரசு தேர்தலில் போட்டியிட்டு எட்டு மாநிலங்களில் பெருமபான்மை வெற்றிபெற்று அமைச்சரவை அமைத்தது. 1939-ல் இரண்டாம் உலகப் போர் மூண்டபோது அரசப் பிரதிநிதியாக இருந்த லின்லித்கோ பிரபு மாகாண மந்திரி சபைகளைக் கலந்து ஆலோசிக்காமலும், காங்கிரசு தலைவர் களைக் கலந்து ஆலோசிக்காமலும் இந்தியாவைப் பிரிட்டனின் சார்பில் போரில் ஈடுபடுத்தினார். இதனால் காங்கிரஸ் மந்திரிகள் அனைவரும் பதவியிலிருந்து விலகினர்.

## முஸ்லிம் லீகின் பாகிஸ்தான் கோரிக்கை

முகமது அலி ஜின்னா தலைமையில் முஸ்லிம் லீக் கட்சி முஸ்லிம் மக்கள் பெருவாரியாக வாழும் பகுதிகளை இந்தியா விலிருந்து பிரித்துப் பாகிஸ்தான் என்ற தனி நாடாக்க வேண்டு மென்று கிளர்ச்சி செய்தது.

## கிரிப்ஸ் திட்டம் (1942)

இரண்டாம் உலகப் போரில் பிரிட்டனுக்குக் காங்கிரஸும் முஸ்லிம் லீக்கும் ஆதரவு அளிக்கவில்லை. 1942-ல் இப் போர் பிரிட்டனுக்கு நெருக்கடியான ஒரு நிலையைத் தோற்று வித்தது. எனவே, இந்தியாவின் ஆதரவைப் பெற ஸ்டாபோர்ட் கிரிப்ஸ் என்பவரை பிரிட்டிஷ் அரசு தூது அனுப்பியது. போர் முடிந்த பிறகு இந்தியாவிற்குடொமினியன் அந்தஸ்து வழங்கப்படும் என்று கிரிப்ஸ் வெளியிட்ட திட்டம் கூறியது. உடனடியாக டொமினியன் அந்தஸ்து வழங்காததால் காங்கிரஸ் கிரிப்ஸ் திட்டத்தை நிராகரித்தது. பாகிஸ்தான் கோரிக்கையை இத்திட்டம் ஆதரிக்காததால் முஸ்லிம் லீக் கிரிப்ஸ் திட்டத்தை ஏற்றுக்கொள்ளவில்லை.



படம் 50. ஸ்டாபோர்டு கிரிப்ஸ்

## வெள்ளையனே வெளியேறு இயக்கம் (1942)

'வெள்ளையனே வெளியேறு' என்னும் இயக்கத்தை 1942-ல் ஆகஸ்டு மாதத்தில் காந்தியடிகள் ஆரம்பித்தார். இதுவே ஆகஸ்டு புரட்சி என வழங்கப்படுகின்றது. இதனால் காங்கிரசுத் தலைவர்கள் அனைவரும் சிறையில் அடைக்கப் பட்டனர். இதன் விளைவாக நாடெங்கும் கலவரங்கள் தோன்றின. பின்னர் காந்தியடிகளும் ஏனைய தலைவர்களும் விடுதலை பெற்றனர்.

## சுபாஷ் சந்திர போஸின் இந்திய தேசியப் படை

பல தியாகங்கள் புரிந்து இரண்டு முறை தேசியக் காங்கிரஸின் தலைவராக இருந்த சுபாஷ் சந்திர போஸ் இரண்டாவது

போர் நடந்த காலத்தில் இந்தியாவிலிருந்து வெளியேறினார். ஜப்பானிடம் சரணடைந்த இந்தியப் போர் வீரர்களையும், தென் கிழக்கு ஆசியாவில் வாழ்ந்த அநேக இந்தியர்களையும் ஒன்று திரட்டி இந்திய தேசியப் படை என்ற சுதந்திரப் படையை நிறுவினார். ஆசாத் இந்த் என்ற இந்திய சுதந்திர அரசாங்கத்தையும் அமைத்தார். அப்படை இந்தியாவின் வடகிழக்குப் பகுதியில் படையெடுத்தபோது முறியடிக்கப் பட்டது.



படம் 51. நேதாஜி

## அரசியல் நிர்ணய சபை

1945-ல் இரண்டாம் உலகப் போர் முடிவுற்று பிரிட்டனில் அட்லி தலைமையில் தொழிற்கட்சியின் ஆட்சி ஏற்பட்டது. 1946இல் பிரிட்டிஷ் அரசு அனுப்பிய காபினெட் தூதுக் குழு காந்தியடிகள் முதலிய தலைவர்களைக் கலந்து ஆராய்ந்து முடிவில் ஒரு திட்டத்தை வெளியிட்டது. இத்திட்டப்படி இந்தியாவில் இடைக்கால அரசாங்கம் ஏற்படுத்தப்பட்டது. ஆனால், வகுப்புக் கலவரங்கள் தோன்றின.

## மௌண்ட் பேட்டன் திட்டம் (ஜூன் 3, 1947)

இச்சமயம் பிரிட்டிஷ் அரசு மௌண்ட் பேட்டன் என்பாரை அரசப் பிரதிநிதியாக நியமித்தது. அவர் காங்கிரஸ், முஸ்லிம் லீக் ஆகியவற்றின் தலைவர்களைக் கலந்து பேசித் தம் திட்டத்தை வெளியிட்டார். இந்தியத் துணைக் கண்டம் 'இந்திய யூனியன்' எனவும் 'பாகிஸ்தான்' எனவும் இரு நாடுகளாகப் பிரிக்கப்பட வேண்டும் என்பதே அத்திட்டத்தின் மையக் கருத்தாகும். கிழக்கு வங்காளம், மேற்கு பஞ்சாப், வடமேற்கு எல்லைப்புற மாகாணம், சிந்து, பலுசிஸ்தான், சில்ஹெட் ஆகிய பகுதிகளைக் கொண்டது பாகிஸ்தான்.

ஏனைய பகுதிகள் இந்திய யூனியன். காங்கிரஸும் முஸ்லிம் லீக்கும் இத்திட்டத்தை ஏற்றுக்கொண்டன.

## இந்தியா சுதந்திரம் பெறுதல்

மௌண்ட் பேட்டன் திட்டத்தின் அடிப்படையில் 1947-ல் இந்தியச் சுதந்திரச் சட்டம் பார்லிமென்டில் இயற்றப்பட்டது. 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு 15ஆம் நாள் இந்தியா சுதந்திரம் பெற்றது. பாகிஸ்தான் எனும் தனி நாடும் ஆகஸ்டு 14ஆம் தேதி புதியதாகத் தோன்றியது. சுதந்திர இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரல் பதவி மௌண்ட் பேட்டனுக்கே அளிக்கப்பட்டது. அவர் பதவியிலிருந்து விலகிய பின் சி. இராஜகோபாலாச்சாரியார் (இராஜாஜி) கவர்னர்-ஜெனரலாக ஆனார். 'மாந்தருள் மாணிக்கம்' என்றழைக்கப்



படம் 52. ஜவஹர்லால் நேரு

பட்ட பண்டித ஜவஹர்லால் நேரு சுதந்திர இந்தியாவின் முதல் பிரதமரானார்.

நம் நாடு சுதந்திரம் பெறுவதற்கு முக்கிய காரணமாக இருந்த காந்தியடிகளை 'இந்தியாவின் தந்தை' என்று நாம் போற்றுகிறோம்.

## பயிற்சிகள்

I. விரிவான விடையளிக்கவும்

1. காந்தியடிகளின் தலைமையில் நடைபெற்ற சுதந்திரப் போராட்டத்தை விவரி.
2. குறிப்பு வரைக :
(1) சுபாஷ் சந்திரபோஸ்
(2) கிரிப்ஸ் திட்டம்
(3) மௌண்ட் பேட்டன் திட்டம்

II. சுருக்கமான விடை எழுதுக

1. 'சத்தியாகிரகம்' என்றால் என்ன ?
2. காந்தியடிகள் நடத்திய அறப் போராட்டத்தின் மூன்று நிலைகள் யாவை ?
3. 1935ஆம் ஆண்டு இந்திய அரசியல் சட்டத்தினால் ஏற்பட்ட முக்கிய மாறுதல்கள் யாவை ?

III. காலியாக உள்ள இடத்தை நிரப்புக

1. 1929-ல் ஜவஹர்லால் நேரு தலைமையில் நடைபெற்ற ——— காங்கிரஸ் மாநாட்டில் முழுமையான சுதந்திரம் பெறுவதே காங்கிரசின் குறிக்கோள் என அறிவிக்கப் பட்டது.
2. கிரிப்ஸ் திட்டத்தின்படி இரண்டாம் உலகப் போருக்குப்பின் இந்தியாவிற்கு ——— அந்தஸ்து அளிக்கப்படும் என அறிவிக்கப்பட்டது.
3. ——— தலைமையில் முஸ்லிம் லீக் பாகிஸ்தான் பிரிவினைக்காகப் போராடியது.
4. சுதந்திர இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரல் ——— ஆவார்.

# 24. சுதந்திர இந்தியா

## சுதேச இராஜ்யங்களின் இணைப்பு

இந்தியா அந்நிய ஆட்சியினின்று விடுதலை அடையும் போது 612 உள்நாட்டு அரசுகள் இருந்தன. சுதந்திர இந்தியாவிற்குத் துணைப் பிரதமராகவும், உள்துறை அமைச்சராகவும் விளங்கிய சர்தார் வல்லபாய் பட்டேல் எல்லா இந்திய அரசுகளையும் தன் சாதுரியத்தாலும் விவேகத்தாலும் இந்திய ஐக்கியத்துடன் இணைத்தார். இது மாபெரும் சாதனையாகும். அவரை நாம் இந்தியாவின் பிஸ்மார்க் என்றழைக்கின்றோம்.

## இந்திய அரசியலமைப்பின் சிறந்த அம்சங்கள்

சுதந்திர இந்தியாவிற்குப் புதிய அரசியல் அமைப்புச் சட்டம் தேவைப்பட்டது. காபினெட் குழுத் திட்டத்தின்கீழ் இடைக்கால அரசாங்கம் பதவியேற்றபோது ஓர் அரசியல் நிர்ணய சபை அமைக்கப்பட்டது. இது 1946-ல் டிசம்பர் மாதம் 9ஆம் நாள் டில்லி மாநகரில் கூடியது. இச்சபை ஓர் அரசியல் அமைப்புச் சட்டத்தை இயற்ற ஏறக்குறைய மூன்றாண்டுகள் எடுத்துக்கொண்டது. கி.பி. 1949ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் இச்சபை அரசியல் அமைப்பொன்றைத் தயாரித்து அளித்தது. இயற்றப்பட்ட புதிய அரசியல் சட்டம் கி.பி. 1950ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26ஆம் நாள் முதல் அமலாக்கப்பட்டது.

நம்முடைய அரசியல் அமைப்புச் சட்டம் சிறந்த சட்ட நிபுணர்களால் தயாரிக்கப்பட்டது. அது சிறந்த அம்சங்களைத் தன்னிடத்தே கொண்டு அமைந்துள்ளது. அவைகளில் சில பின்வருமாறு:

(1) இந்தியா ஒரு பரிபூரண சுதந்திர ஜனநாயகக் குடியரசாக விளங்கும். இங்கு முடியாட்சிக்கு பதில் குடியாட்சி நடைபெறும். குடியரசின் தலைவர் ஜனாதிபதி அல்லது குடியரசுத் தலைவர் ஆவார்.

(2) இந்தியக் குடிமக்கள் ஒவ்வொருவருக்கும் பேச்சுரிமை, எழுத்துரிமை, வழிபாட்டுரிமை, சொத்துரிமை போன்ற பல அடிப்படை உரிமைகள் கொடுக்கப்பட்டுள்ளன.

(3) 21 வயது நிரம்பிய எல்லா, ஆண் பெண் அனைவருக்கும் வாக்குரிமை கொடுக்கப்பட்டுள்ளது.

(4) நம் நாடு ஒரு சமயச் சார்பற்ற நாடாக விளங்குகிறது. இந்நாட்டிலுள்ள எல்லா சமயத்தவரும் சமம். ஒவ்வொரு குடிமகனும் தமக்கு விருப்பமான சமயத்தைப் பின் பற்றலாம்; பிரச்சாரமும் செய்யலாம்.

(5) மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டு நாடாளுமன்றமும், மாநிலச் சட்டமன்றங்களும், கிராமப் பஞ்சாயத்துகளும் விளங்குகின்றன. எனவே, மக்களாட்சி நம் நாட்டில் பல்வேறு நிலைகளில் சிறந்த முறையில் அமைந்து நடைபெற்று வருகிறது.

1956ஆம் ஆண்டில் நம் நாட்டில் மொழிவாரி மாநிலங்கள் அமைக்கப்பட்டன.

தற்போது இந்திய ஐக்கியம் 22 மாநிலங்களையும் மத்திய அரசாங்கத்தின் நேராட்சிக்குட்பட்ட 9 பிரதேசங்களையும்கொண்டு விளங்குகின்றது. இறுதியாக இந்திய ஐக்கியத்துடன் இணைந்த இராச்சியம் சிக்கிம் ஆகும்.

இந்திய நாட்டில் ஒரு கூட்டாட்சி நடைபெறுகிறது. அனைத்து இந்தியாவிற்கென்று ஒரு மத்திய அரசும், ஒவ்வொரு மாநிலத்திற்கென்று ஒரு மாநில அரசும் இருக்கின்றது. மத்திய அரசிற்குப் பல பொறுப்புகளும், மாநில அரசிற்குப் பல பொறுப்புகளும் இருக்கின்றன.

## மத்திய அரசு

குடியரசு தலைவர், குடியரசு துணைத் தலைவர், பிரதம அமைச்சர், பிரதம அமைச்சரின் அமைச்சரவையில் உள்ள அமைச்சர்கள், மக்கள் சபை (லோக் சபை), இராஜ்ய சபை இவ்விரண்டும் இணைந்த நாடாளுமன்றம் முதலியன சேர்ந்து மத்திய அரசு எனப்படும்.

மத்திய அரசு இருப்புப் பாதைகள், தபால், தந்தி, அணு சக்தி, உற்பத்தி, ஒலிபரப்பு, தற்காப்பு போன்ற முக்கியப் பொறுப்புகளை ஏற்று நிறைவேற்றி வருகிறது.




படம் 53. மத்திய அரசு

## மாநில அரசு

மத்திய அரசின் அமைப்பைப் போன்றே மாநில அரசின் அமைப்பும் பெரும்பாலும் உள்ளது. நம் அரசியல் அமைப்புப் படி ஒவ்வொரு மாநிலத்தின் ஆட்சிப் பொறுப்பும் அந்தந்த

மாநில கவர்னரிடம் உள்ளது. அவர் மாநில அமைச்சரவையின் ஆலோசனைப்படி செயலாற்ற வேண்டும். அந்த அமைச்சரவை மாநிலச் சட்டமன்றத்திற்குப் பொறுப்புள்ளதாக இருக்கும். உண்மையில், அரசியல் அதிகாரம் அந்தந்த மாநில அமைச்சரவையிடம் இருக்கின்றது. மாநில அரசு கல்வி, சுகாதாரம், காவல், தல சுய ஆட்சி, கால்நடை பராமரிப்பு போன்ற பொறுப்புகளை ஏற்று ஆட்சியை நடத்துகின்றது.




படம் 54. மாநில அரசு

இந்திய ஐக்கியத்தின் முதல் குடியரசுத் தலைவர் டாக்டர் இராஜேந்திர பிரசாத் ஆவார். அவரைத் தொடர்ந்து, டாக்டர் இராதாகிருஷ்ணன், டாக்டர் ஜாக்கீர் உசேன்,

வி. வி. கிரி, பக்ருதின் அலி அகமத் ஆகியோர் நம் நாட்டின் குடியரசு தலைவர்களாகப் பணியாற்றினர். பக்ருதின் அலி அகமது திடீரெனக் காலமானதால் மற்றொரு ஜனாதி



படம் 55. நீலம் சஞ்சீவ ரெட்டி.

பதி தேர்ந்தெடுக்கப்படும்வரை பி.டி. ஜட்டி அவர்கள் ஜனாதிபதியாகப் பணியாற்றினார். பின்னர் நீலம் சஞ்சீவ ரெட்டி அவர்கள் நம் நாட்டின் ஜனாதிபதியாகப் பதவியேற்றார்.

நம் நாடு விடுதலை அடைந்தவுடன் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் பிரதமராகப் பணியாற்றினார். அவர் 17 ஆண்டுகளாக நம் நாட்டிற்குப் பிரதமராக அரியதொரு பணியாற்றி 1964 ஆம் ஆண்டு மே திங்கள் 27 ஆம் நாள் இயற்கை எய்தினார். அவருக்குப்பின் லால்பகதூர் சாஸ்திரி அவர்களும், திருமதி இந்திரா காந்தி, மொரார்ஜீ தேசாய் அவர்களும், சரண்சிங் அவர்களும் நமது பிரதமர்களாகப்

பணியாற்றினர். அவர்களுக்குப்பின் திருமதி இந்திரா காந்தி அவர்கள் மீண்டும் பிரதமராகப் பதவி ஏற்றார்.



படம் 56. திருமதி இந்திரா காந்தி

**சுதந்திர இந்தியாவின் முன்னேற்றம்**

நம் நாடு சுதந்திரமடைந்து 1980 வரை 33 ஆண்டுகள் ஆகின்றன. நம் நாடு முன்னேற்றமடைய அன்றைய தினம் வாழ்ந்த இந்திய நாட்டின் முடிசூடா மன்னர் பண்டித ஜவஹர்லால் நேரு திட்டமிட்டுப் பல துறைகளில் முன்னேற்றம் காணுவோம் என்று விழைந்தார். ஐந்தாண்டு திட்டங்கள் தீட்டப் பெற்றன. இத்திட்டங்களின் வாயிலாக நாட்டில் பல திட்டங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. பொருளாதார வளர்ச்சி ஏற்பட்டுள்ளது.

### விவசாய வளர்ச்சி

நம் விவசாயி நம் நாட்டின் முதுகெலும்பாக விளங்குகின்றான். 70%-க்கும் மேலாக இந்திய நாட்டு மக்கள் கிராமங்களில் வாழ்கின்றனர். அவர்களில் பெரும்பான்மையோர் விவசாயத்தை நம்பி வாழ்கின்றனர். நம்முடைய பெருகி வருகின்ற மக்கள் தொகைக்கு ஏற்றவாறு இந்திய உழவர்கள் நவீன முறைகளைக் கையாண்டு உணவு தானியப் பெருக்கத்தில் ஈடுபட்டுள்ளனர். பல தரிசு நிலங்கள் விளைநிலங்களாக மாற்றப்பட்டுள்ளன. நீர்ப்பாசன திட்டங்கள் கட்டப்பட்டுள்ளன. நிலங்களில் இயந்திரக் கலப்பைகள் பயன்படுத்தப்படுகின்றன. இரசாயன உரங்கள் பயன்படுத்தப்பட்டு, நிலங்களைப் பண்படுத்தி உணவு தானியங்கள் பயிரிடப்படுகின்றன. இதன் பலனாக நம் நாடு தற்போது பசுமைப் புரட்சியை ஏற்படுத்தி வருகின்றது.

### இரும்பு எஃகுத் தொழில் வளர்ச்சி

ஒரு நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாத பொருள்கள் இரும்பும் எஃகும் ஆகும். நம் நாட்டில் பல இடங்களில் இரும்புத் தாது காணக் கிடக்கின்றது. இந்திய அரசாங்கம் பிலாய் (மத்தியப் பிரதேசம்), ரூர்கேலா (ஒரிஸ்ஸா), துர்காப்பூர் (மேற்கு வங்காளம்) ஆகிய இடங்களில் பெரிய எஃகு ஆலைகளை நிறுவி இருக்கின்றது. ஒரு பெரிய இரும்பு எஃகுத் தொழிற்சாலை உள்ள இடம் ஜாம்ஷெட்பூர். இது பீகாரில் உள்ளது. மேலும் பீகார் மாநிலத்தில் பொர்காரோ என்றவிடத்தில் எஃகு ஆலையின் ஒரு பகுதி கட்டப்பட்டு இயங்கத் தொடங்கியுள்ளது. மேலும் சேலம் (தமிழ்நாடு), விசாகப்பட்டினம் (ஆந்திரப் பிரதேசம்), ஹாஸ்பெட் (கர்நாடகம்) முதலிய இடங்களில் எஃகு ஆலைகள் நிறுவ வேலைகள் தொடங்கப்பட்டுள்ளன.

### பல்துறை வளர்ச்சி

ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலம் வேறு பல திட்டங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. இந்திய நாட்டின் ஜீவ நதிகளின்

நீர் வீணாகச் சென்று கடலில் கலந்து கொண்டிருப்பதைக் கண்டு அதனைப் பயன்படுத்தத் திட்டங்கள் தீட்டப்பட்டன. ஆற்றுப் பள்ளத்தாக்குத் திட்டங்களைத் தீட்டி ஆறுகளின் நீர் நீர்ப்பாசனத்திற்கும், நீர் மின்சக்தி உற்பத்தி செய்தலுக்கும், வெள்ளப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தவும் அவை பேருதவி செய்து வருகின்றன. எடுத்துக்காட்டாக, மஹா நதிககுக் குறுக்கே கட்டப்பட்டுள்ள ஹிராகூட் அணைத் திட்டம், சட்லெஜ் ஆற்றுக்குக் குறுக்கே கட்டப்பட்டுள்ள பக்ரா-நங்கல் அணைத் திட்டம், தாமோதர் நதிக்குக் குறுக்கே கட்டப் பட்டுள்ள தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டம், கிருஷ்ணா நதிக்குக் குறுக்கே கட்டப்பட்டுள்ள நாகார்ஜுன சாகர் அணைத் திட்டம் விவசாய வளர்ச்சிக்கு ஊக்கம் அளிக் கின்றன.

மேலும், இந்தியாவில் பஞ்சாலைகள் பரவலாக எங்கும் காணப்படுகின்றன. பம்பாய் நகரம் 'இந்தியாவின் மான்செஸ் டர்' என்று வழங்கப்படுகின்றது. தமிழ்நாட்டிலுள்ள கோய முத்தூர், 'தென் இந்தியாவின் மான்செஸ்டர்' என வழங்கப் படுகின்றது. இங்கு அநேக பஞ்சாலைகள் இருக்கின்றன. அவை மட்டுமல்லாமல் அகமதாபாத், ஷோலாப்பூர், பூனே, மதுரை, கான்பூர், கல்கத்தா, சென்னை போன்ற முக்கிய இடங்களில் பருத்தி நெசவு ஆலைகள் வளர்ச்சி அடைந் துள்ளன.

சர்க்கரை ஆலைத்தொழிலும் நம் நாட்டில் நன்கு வளர்ச்சி அடைந்துள்ளது. சர்க்கரை ஆலைகள் உத்தரப் பிரதேசம், பீகார், மகாராஷ்டிரம், ஆந்திரப் பிரதேசம், தமிழ்நாடு முதலிய மாநிலங்களில் சிறப்புறக் காணப்படுகின்றன. இவை உற்பத்தி யைப் பெருக்க அரசு துணை புரிந்துள்ளது.

அறிவியல் துறையில் ஆராய்ச்சிகள் நடைபெற வேண்டும் என்று கருதி இந்திய அரசாங்கம் பல தேசிய ஆய்வுக் கூடங்களை நடத்தி வருகின்றது. டில்லி மாநகரில் இயற்பியல் ஆய்வுக்கூடம் இருக்கின்றது. பூனேயில் தேசிய தேதியிசல் ஆய்வுக்கூடம் இருக்கின்றது. சென்னை மாநகரில் மத்திய தோல் ஆராய்ச்சி நிலையம் இருக்கின்றது.

உலகில் அதிகமாக இருப்புப் பாதைகள் இருக்கும் நாடுகளில் நம் நாடு நான்காம் இடத்தை வகிக்கின்றது. கல்கத்தா நகரத்துக்கருகில் சித்தரஞ்சன் என்னுமிடத்தில் இரயில் எஞ்சின்கள் செய்யப்படுகின்றன. சென்னையில் பெரம்பூரில் இரயில் பெட்டிகள் செய்யப்படுகின்றன.

கடல் வாணிகம் பெருகியுள்ளது. பல நாடுகளுடன் இந்திய நாடு கடல் வாணிகம் செய்து கொண்டிருக்கிறது. பெருகி வரும் வாணிகத்தை நடத்த ஒரிஸ்ஸாவில் பாராதீப், குஜராத்தில் கண்ட்லா போன்ற புதிய துறைமுகங்கள் கட்டி வைக்கப்பட்டுள்ளன. விசாகப்பட்டினம், கொச்சி ஆகிய துறை முகங்களில் கப்பல்கள் கட்டப்பட்டு வருகின்றன.

கல்வித்துறையிலும், மருத்துவத்துறையிலும் வியக்கத்தகு முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. இருப்பினும், நம் நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரம் உயர வேண்டும். இதற்கு எல்லோரும் பாடுபட வேண்டும்.

## பயிற்சிகள்

I. விரிவான விடைகள் அளிக்கவும்

1. இந்திய அரசியலமைப்பின் சிறந்த அம்சங்கள் யாவை ?
2. சுதந்திர இந்தியா விவசாயத்துறையிலும், இரும்பு எஃகுத் தொழில் வளர்ச்சியிலும் எப்படி வளர்ச்சியடைந்துள்ளது ?

II. சுருக்கமாக விடையளி

1. இந்தியா எப்போது குடியரசாக ஆயிற்று ?
2. 'இந்தியாவின் பிஸ்மார்க்' என்று யாரை அழைக்கின்றோம் ?
3. நம்முடைய நாடாளுமன்றத்தின் இரு சபைகள் யாவை?
4. இந்திய ஆறுகளுக்குக் குறுக்கே கட்டப்பட்டுள்ள இரு பெரிய அணைகளைக் குறிப்பிடுக.

III. நீங்களே செய்யுங்கள்

1. நம் நாட்டுத் தலைவர்களின் படங்களைச் சேகரிக்கவும்.
2. சென்னை நகரிலுள்ள கிண்டி பகுதியில் அமைந்துள்ள 'காந்தி இல்ல'த்தையும், 'இராஜாஜி', 'காமராஜ்' நினைவுக் கூடங்களையும் சென்று பார்க்கவும்.

# 25. அண்மையில் நடந்த முக்கிய நிகழ்ச்சிகள்

## திருமதி இந்திரா காந்தி பிரதமரானார்

இந்திய நாட்டின் ஏழாம் லோக் சபைக்கு உரிய பொதுத் தேர்தல்கள் 1980ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 3ஆம் நாளும் 6ஆம் நாளும் நடைபெற்றன. இந்திரா காங்கிரஸ் கட்சி வெற்றி பெற்று, மக்கள் சபையில் பெரும்பான்மை பெற்றது.

இந்திராகாந்தியின் தலைமையில் புதிய மந்திரிசபை டில்லி மாநகரில் 1980ஆம் ஆண்டு ஜனவரி 14ஆம் தேதி பதவியேற்றது.

## அன்னை தெரிசா – 'நோபல் பரிசு'—'பாரத ரத்னா' விருது பெற்றார்

அன்னை தெரிசாவை இந்திய நாட்டில் அறிந்து கொள்ளாதவர்கள் யாரும் இருக்க மாட்டார்கள். ஏழை மக்களின் நலனுக்காகவே தன்னை அர்ப்பணித்துக்கொண்டிருக்கின்றார் அன்னை தெரிசா.

தெரிசா அம்மையார் 1910 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 10ஆம் நாள் ஐரோப்பாவிலுள்ள யூகோஸ்லோவியா நாட்டில் ஸ்கோப்ஜே என்ற ஊரில் பிறந்தார். நல்ல முறையில் கல்வி கற்று வளர்ந்தார். யூகோஸ்லோவியாவிலிருந்து நம் நாட்டிற்குப் பிறகு வந்துவிட்டார். மேற்கு வங்காளத்திலுள்ள டார்ஜிலிங் என்ற மலைவாசஸ்தலத்தில் ஒரு பள்ளிக்கூடத்தில் ஆசிரியையாகப் பணியாற்றிக்கொண்டிருந்தார். பிறகு அவருக்குக் கல்கத்தா நகருக்கு மாற்றலாகிவிட்டது.

கல்கத்தாவில் ஏறக்குறைய 3000 குடிசை வாழ் மக்களின் பகுதிகள் இருக்கின்றன. அங்குள்ள பரம ஏழைக் குழந்தைகளையும் அனாதைக் குழந்தைகளையும் திரட்டி அவர்கட்காக நடத்தும் இல்லத்திற்குக் கொண்டு சென்று அவர்களைக் குளிப்பாட்டியும், அவர்கள் உடுக்க உடையும், உண்ண உணவும், கல்வி கற்க வசதிகளும் செய்து கொடுத்திருக்கின்றார். அது மட்டுமல்ல. தெரிசா அம்மையார் அனாதையாக இறக்கும் ஏழைகளுக்கு நிர்மல் ஹிர்தே என்னும் இல்லங்களை நடத்துகின்றார். சாகின்ற ஓர் அனாதையான நபர் சிறிதளவு சுயமரியாதையுடன் தான் இறக்க வேண்டும் என்ற உணர்வு பெற தெரிசா அம்மையார் இந்த இல்லங்களை நடத்துகின்றார்.

உடல் ஊனமுள்ள குழந்தைகளுக்காகவும், சில குடும்பங்களால் ஆதரவு அளிக்கப்படாத குழந்தைகள் நலனுக்காகவும் அன்னை தெரிசா சிசுபவன் என்னும் இல்லங்களைக் கல்கத்தாவிலும் பிற நகரங்களிலும் நடத்துகின்றார். அன்னை தெரிசா அவர்களுக்கு 1979ஆம் ஆண்டு உலகப் புகழ் பெற்ற சமாதானத்திற்கான நோபல் பரிசு வழங்கப்பட்டுள்ளது. அந்தப் பரிசைப் பெறும் ஆறாம் பெண்மணி அன்னை தெரிசா ஆவார். பரிசு பெற்றதால் அவர் சிறப்படையவில்லை. ஆனால், அந்தப் பரிசுக்கு அவர் சிறப்பு கொடுத்திருக்கின்றார். இந்திய அரசாங்கம் அவருடைய தன்னலமற்ற சேவையைப் பாராட்டும் வகையில் 1980ஆம் ஆண்டில் அவருக்குப் 'பாரத ரத்னா' விருதுவினை வழங்கி அந்த அம்மையாரைச் சிறப்பித்துள்ளது.

### மாநிலங்களில் தேர்தல்கள்

1980ஆம் ஆண்டு மே மாத இறுதியில் 9 மாநிலங்களில் (நமது தமிழ்நாடு உள்பட) சட்டமன்றங்களுக்குத்

தேர்தல்கள் நடைபெற்றன. தமிழ் நாட்டில் அகில இந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் வெற்றி பெற்று



படம் 57. திரு. எம். ஜி. இராமச்சந்திரன்

திரு. எம். ஜி. இராமச்சந்திரன் தலைமையின்கீழ் மந்திரிசபை அமைத்தது.

## பயிற்சிகள்

**I. விரிவான விடையளிக்கவும்**

அன்னை தெரிசாவின் வாழ்க்கையையும் தொண்டினையும் விளக்குக.

**II. சுருக்கமான விடையளிக்கவும்**

1. இந்திய நாட்டின் தற்போதைய பிரதம அமைச்சர் யார்?
2. எப்போது லோக் சபைக்குரிய தேர்தல்கள் நடைபெற்றன?

**III. நீங்களே செய்யுங்கள்**

இந்தியப் பிரதமர், தமிழ்நாட்டு முதலமைச்சர் ஆகியோர்களின் படங்களைச் சேகரித்து, உங்கள் படத் தொகுப்புப் புத்தகத்தில் ஒட்டி வைத்துக்கொள்ளவும்.

## வரலாற்றுக் கால அட்டவணை

| | | |
|---|---|---|
| கி. மு. | 325 - 188 | மௌரியப் பேரரசு |
| கி. பி. | 78 - 120 | கனிஷ்கரது ஆட்சிக்காலம் |
| கி. பி. | 300 - 500 | குப்தப் பேரரசு |
| கி. பி. | 606 - 647 | ஹர்ஷரது ஆட்சிக் காலம் |
| கி. பி. | 600 - 630 | மகேந்திரவர்மர் |
| கி. பி. | 630 - 655 | நரசிம்மவர்மர் |
| கி. பி. | 985 - 1014 | இராஜ ராஜ சோழர் |
| கி. பி. | 1014 - 1044 | இராஜேந்திர சோழர் |
| கி. பி. | 1206 - 1526 | டில்லி சுல்தான்கள் ஆட்சி |
| கி. பி. | 1347 - 1482 | பாமினி இராஜ்ஜியம் |
| கி. பி. | 1336 - 1565 | விஜயநகரப் பேரரசு |
| கி. பி. | 1526 - 1707 | மொகலாயப் பேரரசு |
| கி. பி. | 1526 - 1530 | பாபர் |
| கி. பி. | 1540 - 1545 | ஷெர்ஷா சூர் |
| கி. பி. | 1556 - 1605 | அக்பர் |
| கி. பி. | 1658 - 1707 | ஔரங்கசீப் |
| கி. பி. | 1627 - 1680 | சிவாஜியின் ஆட்சிக் காலம் |
| கி. பி. | 1757 | பிளாசிப் போர் |
| கி. பி. | 1802 | பஸ்ஸின் உடன்படிக்கை |
| கி. பி. | 1857 | முதல் சுதந்திரப் போர் |
| கி. பி. | 1858 | விக்டோரியா இராணியின் பேரறிக்கை |
| கி. பி. | 1885 | இந்திய தேசிய காங்கிரஸ் நிறுவப்படுதல் |
| கி. பி. | 1905 | வங்காளப் பிரிவினை |
| கி. பி. | 1906 | முஸ்லிம் லீக் நிறுவப்படுதல் |

| | |
|---|---|
| கி. பி. 1919 | மாண்ட் போர்ட் சீர்த்திருத்தங்கள் |
| ஏப்ரல் 13, 1919 | ஜாலியன் வாலாபாக் படுகொலை |
| கி. பி. 1920 | ஒத்துழையாமை இயக்கம் |
| கி. பி. 1929 | லாகூர் காங்கிரஸ் |
| கி. பி. 1930 | சட்ட மறுப்பு இயக்கம் |
| கி. பி. 1935 | இந்திய அரசியல் சட்டம் |
| கி. பி. 1942 | 'வெள்ளையனே வெளியேறு இயக்கம்' |
| ஆகஸ்டு 15, 1947 | இந்தியா சுதந்திரமடைதல் |
| ஜனவரி 26, 1950 | இந்தியக் குடியரசு நிறுவப்படுதல் |

— — —

